

இதில் பிரயோஜனமில்லை



வேறு சாவிகளால் முயற்சிப்பதில்



அதனுடைய சொந்த சாவிதான்




ஒரு கோத்ரெஜ் பூட்டை திறக்க முடியும்

# கோத்ரெஜ்

Godrej ரிஜிஸ்டர்டு

ஆமைப் பூட்டுகள்

பாத்திர அலமாரிப் பூட்டுகள்

இழுவறைப் பூட்டுகள்

நைட்லாட்சு தாழ்ப்பான்கள்

பூட்டுகள், சாவிகள் முதலியன வரிசை வரிசையாக மெஷின்களில் செய்து நூற்றுக் கணக்கான திறமை வாய்ந்த வேலையாட்களால் கோத்ரெஜ் தொழிற்சாலையிலேயே கையால் பூர்த்தியாகச் சேர்த்து அமைத்தவை யாகும். இம்மாதிரி விசேஷத் தயாரிப்பு முறையைக் கையாண்டு வருவதனால் ஒரு பூட்டைப்போல் மற்றொன்றிருப்பது கிடையாது. இந்த பிரத்தியேக தயாரிப்பின் மர்மம், கோத்ரெஜ் பூட்டுகளை அதனதன் சாவிகளின்றி வேறு எவ்விதமும் திறக்க முடியாது.

விலை விவரங்கள்

1¾ அங்குல பாட்லாக்கிற்கு

ரூ. 5

நைட்லாட்சு ரூ. 16-8

கோத்ரெஜ் அண்டு பாய்ஸ் மானுபாக்சரிங் கம்பெனி லிட்.

பாதுகாப்புடன் உயர்ந்த உலோகங்களினுல் செய்த பொருள்கள், ஹாஸ்பிட்டல் பர்னிச்சர் . . . தயாரிப்போர்

மதராஸ்: 164, பிராட்வே. பெங்களூர்: கமிஷன் அண்ட் ஜெனரல் ஏஜன்ஸி, 180, நரசிம்மராஜா ரோடு. கோயமுத்தூர்: கமிஷன் அண்டு ஜெனரல் ஏஜன்ஸி, பெரிய கடைத் தெரு. திருச்சிராப்பள்ளி: ஸ்ரீ S.T. Rm. Ct. தம்புலிங்கம் செட்டியார், 8, சின்னக் கடைத் தெரு, தெப்பக்குளம். மதுரை: S.R.S. பிரதர்ஸ், கிழக்கு சித்திரை வீதி. பெஜவாடா: P. வெங்கட்ரெட்டி அண்டு கோ., காக்கிநாடா ராஜமஹேந்திரபுரம்: ஸ்ரீ S.R.P.V. செல்லபதிராவ், மெயின் ரோடு. கொச்சி: S. கோடார், போர்ட் திருவனந்தபுரம்: S. கோடார், மெயின் ரோடு. கொழும்பு: சான் கௌல்ட்லன் லிட்., த.பெ.பெ. 217


CAUTION
SEE THAT THE
INNER LID
UNDER THIS
IS INTACT.
LIPTON'S
FINEST DARJEELING TEA
INDIAN CHIEF OFFICE
TEA SHIPPING GODOWNS & EXPORT OFFICE
LIPTON'S BUILDINGS
CALCUTTA

டைரக்டர் சாந்தாராம் தமக்கே உரிய கலை மேதையினால் சமூகக் கொடுமைகளுள் ஒன்றான **வரதக்ஷிணை** இன்னல்களைத் தத்ரூபமாக விளக்கும் இணையிலா சிருஷ்டி!



ராஜ்கமல் கலாமந்திரின்

# தாஹேஜ்

ஹிந்தி

(வரதக்ஷிணை)

★ ஜெயஸ்ரீ

★ பிருத்விராஜ்

★ கரன் திவான்

★ லலிதா பாவர்

★ உல்லாஸ் நடித்தது

சிருஷ்டிகர்த்தரும் டைரக்டரும்: **வி. சாந்தாராம்**

○●○

5-8-1950 முதல் — பிரபாத் - மதராஸ்
**5-வது வாரம்** — மாருதி - விஜயவாடா

○●○

4-8-1950 முதல் — பிரபாத் - பெங்களூர்
**2-வது வாரம்** — பிரபா - மைசூர்

○●○

5-8-1950 முதல் — தீபக்மஹால்
**2-வது வாரம்** — ஹைதராபாத்

மற்றும் எல்லா முக்கிய நகரங்களிலும் திரையிடும் நாளை விரைவில் எதிர்பாருங்கள்!

விநியோகஸ்தர்கள்

## அலங்கார் சித்ரா லிமிடெட்



தந்தி: ALANKAR    பெங்களூர்-2

Rajkamal

## யுத்தத்துக்கு முந்தின பழைய விலையில் கடிகாரங்கள்

உயர்ரகம், ஸ்விஸ் தயாரிப்பு, லிவர் மெஷின், 15 வருஷம் உத்தரவாதம். தபால் செலவு அணு 14. இரண்டாக வாங்கினால் தபால் செலவு இனம்.

நெ. 1



நீண்ட சதுரம் அல்லது டன்னோ வடிவம்

5 ஜுவல் க்ரோம் ரூ. 28 ரோல்டுகோல்டு ரூ. 32
7 .. க்ரோம் ரூ. 32 ரோல்டுகோல்டு ரூ. 35
15 .. க்ரோம் ரூ. 37 ரோல்டுகோல்டு ரூ. 40

நெ. 2



5 ஜுவல் க்ரோம் ரூ. 16 மிக உயர் ரகம் ரூ. 18
5 .. உயர் ரகம் 22 ரோல்டுகோல்டு 25
7 .. க்ரோம் ரூ. 28 ரோல்டுகோல்டு 32
15 .. க்ரோம் ரூ. 38 ரோல்டுகோல்டு 42

நெ. 3



5 ஜுவல் க்ரோம் ரூ. 14 மிக உயர் ரகம் ரூ. 16
5 .. உயர் ரகம் 18 ரோல்டுகோல்டு 22
7 .. க்ரோம் ரூ. 25 ரோல்டுகோல்டு 30
15 .. க்ரோம் ரூ. 34 ரோல்டுகோல்டு 38

### வீட்டில் அச்சடிக்கும் பிரஸ்



பெயர், விலாஸம் லேபின் நிகழ்ச்சிக் குறிப்பு முதலியன இதால் நேர்த்தியாக அச்சடிக்கலாம்.

விலை: நெ. 1 ரூ. 2-8; நெ. 2 ரூ. 3-8; உயர்ந்தது ரூ. 4-8; ஸ்பெஷல் ரூ. 5-8; உயர்ந்த ரகம் (பெரியது) ரூ. 6-8. தபால் செலவு அ. 14

○●○

**PARAGON WATCH CO. (KI)**
**POST BOX No. 11419 - CALCUTTA-6**




○

ஒரு புஷ்பச் சோலையின் நறுமணம் அவ்வளவுமே நீபா கூந்தல் தைலத்தில் அடங்கியிருக்கிறது

○

நீபா கூந்தல் தைலம் அழகிய பளபளப்பான கூந்தலை அளிக்கிறது

○



# விளம்பரம்

## சர்க்கார் கீழ்நாட்டுக் கலை கையெழுத்துப் பிரதி நூல் நிலையம்

**(Govt. Oriental Manuscript Library)**

**திருவல்லிக்கேணி : சென்னை - 5**

○●○

இந்நூல் நிலைய அதிகாரி (Curator) அவர்கள் மேற்படி நூல் நிலையத்திற்குப் பலதிறப்பட்ட பாஷைகளிலுள்ள ஓலைச் சுவடிகள் போன்ற பழைய கையெழுத்துப் பிரதிகளைச் சேகரிக்கவும், அவற்றைப் பாதுகாக்கவும் வேண்டிய முயற்சிகளை எடுத்துக் கொண்டிருக்கிறார்.

ஆனதுபற்றி:—

(1) அத்தகைய பிரதிகளைத் தங்கள் வசமே வைத்திருப்பவர்கள் அவற்றை மேற்படி நூல் நிலையத்திற்கு வெகுமதியாகவோ, விலைக்கோ, நகல் எடுத்துக் கொள்ளவோ கொடுத்து உதவுமாறு கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

(2) அல்லாத பொதுஜனங்கள் அவற்றை வைத்திருக்கும் நபர்களைப் பற்றிய தகவல்களை அனுப்பும்படி கோரப் படுகிறார்கள்.

(3) கையெழுத்துப் பிரதிகளைப் பெறுவதற்கு உதவி செய்பவர்கள் உசிதப்படி சன்மானமளிக்கப் படுவார்கள்.

(4) சகலவிதமான கடிதப் போக்குவரத்துக்களும் மேற்படி அதிகாரிகளுடனே செய்யப்படவேண்டும்.

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 10 இதழ் 1 | ஆகஸ்டு 6 | விக்ருதி ஆடி 22



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



# உணவு நிபுணர்கள்!

இந்தியா மக்கள் உணவு வகைகளை மாற்றிக் கொள்ள வேண்டும்; வேர்க்கடலை, கிழங்குகள் முதலியவற்றைச் சாப்பிட்டு ஜீவிக்கப் பழகிக் கொள்ள வேண்டும் என்று ஸர் எஸ்.வி. ராமமூர்த்தி கூறுகிறார். அதற்காக சர்க்கார் நிபுணர்களை நியமித்தால் என்ன?















மலர் 10 | இதழ் 1

# கல்கி

தமிழ்த்திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

## என்ன சேதி ?

### வீண் போகவில்லை

சென்னை சர்க்காரின் நீர்ப்பாசனத் திட்டங்கள் நிறைவேறினால் இந்த மாகாணத்தில் உணவு உற்பத்தி பெருகும். உணவு உற்பத்தி பெருகினால் ஜனங்கள் பஞ்ச நிலைமை தீர்ந்து க்ஷேமம் அடைவார்கள். அப்படி ஜனங்கள் க்ஷேமம் அடைவதற்குக் குறுக்கே நிற்பது என்னவென்றால், கேவலம் பணத் தட்டுப்பாடுதான்!

இந்திய சர்க்காரிடமிருந்து உதவி கிடைக்கும் என்று சென்னை சர்க்கார் எதிர்பார்த்து வந்தார்கள். அந்த நம்பிக்கை நிறைவேறவில்லை. அதற்காக நீர்ப்பாசனத் திட்டங்களைக் கைக்கொள்ளாமல் நிறுத்தி வைக்கலாமா? எனவே, மிராசுதார்களிடமிருந்து நிலவரிக்குச் சமமான தொகையைக் கட்டாயக் கடனாக வசூலித்து நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்றலாம் என்று சென்ற வருஷத்தில் சென்னை சர்க்கார் ஒரு யோசனையை வெளியிட்டார்கள். மேற்படி கட்டாயக் கடன் திட்டத்துக்கு எதிர்ப்பு கடுமையாக இருந்தது. நல்ல காரியமாயிருந்தாலும் கட்டாயப்படுத்திச் செய்வதைப் பலர் விரும்பவில்லை. ஆகவே அந்தக் கட்டாயக் கடன் திட்டம் கைவிடப்பட்டது.

எனினும் காரியத்தில் கண்ணும் கருத்தும் உள்ள மராமத்து மந்திரி கனம் பக்தவத்ஸலம் அத்துடன் பேசாமல் இருந்து விடவில்லை. நிலச்சுவான்தார்களை நிர்ப்பந்தப் படுத்தாமலே அவர்களாக வலுவில் கடன் கொடுத்து உதவக்கூடிய ஓர் உபாயத்தைக் கண்டு பிடித்தார். ஒரு நீர்ப்பாசனத் திட்டத்தினால் எந்தப் பிரதேசத்து ஜனங்கள் நன்மை அடைவார்களோ, அவர்களிடம் சென்று நேர்முகமாகக் கடன் கேட்கத் தீர்மானித்தார். அவரது விடா முயற்சி வீண் போகவில்லை. திருநெல்வேலி ஜில்லாவின் சுபிட்சத்துக்காகத் தயாரிக்கப்பட்டுள்ள மணிமுத்தாறு நீர்ப்பாசனத் திட்டம் நிறைவேறுவதற்குச் சுமார் மூன்றே முக்கால் கோடி ரூபாய் தேவையாக இருக்கிறது. அதில் ஒருகோடி ரூபாயை மேற்படி ஜில்லா நிலச்சுவான்தார்கள் கடனாகக் கொடுக்க வேண்டும் என்று கேட்டார். கொடுத்தால் திட்டத்தை ஆரம்பிப்பதாகக் கூறினார். குறிப்பிட்ட பிரதேசத்து ஜனங்கள் அவர் கேட்டுக் கொண்டதற்கு மேலே அதாவது ஒரு கோடி இருபத்தெட்டு லட்சம் ரூபாய் கடன் கொடுத்து விட்டார்கள். மிகச் சொற்ப காலத்தில் இந்தப் பெரிய காரியத்தைச் சாதித்து விட்டதுபற்றித் திருநெல்வேலி மக்களைப் பாராட்டவேண்டும். இந்த முயற்சியில் பெரிதும் ஊக்கம் எடுத்துப் பிரயத்தனம் செய்த திருநெல்வேலி ஜில்லா கலெக்டர் ஸ்ரீ சுப்பையா பிள்ளை அவர்களும் நமது பாராட்டுதலுக்கு உரியவராவார். மணிமுத்தாறு திட்டம் கட்டி முடிக்கப்படும்போது, அது சர்க்காரும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் பொது ஜனங்களும் ஒத்துழைத்து ஒரு நல்ல காரியத்தைச் சாதனை செய்ததற்குச் சிறந்த சின்னமாக விளங்கும்.

### கம்பர் மேடு

கவிச் சக்கரவர்த்தி கம்பரிடம் நமது பக்தியைக் காட்டுவதற்குப் பல வழிகள் உண்டு. அவருடைய ஒப்பற்ற கவிதைகளைப் படித்து உணர்ந்து அநுபவிப்பது மிகவும் மேலான வழி. ஞாபகச் சின்னங்கள் அமைப்பதும் விழாக்கள் நடத்துவதும் நல்ல வழிகள். அவர் பிறந்த ஊரை அவருடைய பெயரால் வழங்கச் செய்வதும் ஒரு சிறந்த வழிதான். தேரழுந்தூர் புகை வண்டி நிலையம் இனிக் "கம்பர் மேடு" என்று அழைக்கப்படும் என அறிந்து மகிழ்கிறோம். மக்கள் அந்தப் புகை வண்டி நிலையத்தின் வழியாகப் போகும்போதெல்லாம் கம்பரை நினைவு கூர்வார்கள். அவருடைய கவிதைகளைப் படித்து இன்புற வேண்டும் என்று ஆசை கொள்வார்கள்.

கம்பர் பாடல்களைப் பரீட்சைக்காகக் கட்டாயமாகப் படிக்க நேர்ந்த மாணவமணிகள், "கம்பர் பிறந்த இடம் இப்போது மண்மேடிட்டுப் போயிருக்கிறதல்லவா? ரொம்ப நல்லது. கம்பருக்கு நன்றாய் வேண்டும்!" என்று எண்ணித் திருப்தி அடைவார்கள். கம்பர் மேட்டைப் பாதுகாப்புக்குரிய புராதன ஸ்தலமாகச் செய்து சர்க்கார் தங்கள் நிர்வாகத்தின் கீழ் எடுத்துக் கொண்டிருப்பது பற்றியும் மகிழ்ச்சி அடைகிறோம். எனவே, தமிழன்பர்கள் இனிமேல் கம்பர் மேட்டைப் பற்றிய கவலையின்றிக் கம்பர் புகழை வேறு வழிகளில் வளர்ப்பதற்கு முயலலாம்.

# அக்கப் போர்

"ரயில்வேக்களில் முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்பு, மூன்றாம் வகுப்பு என்று மீண்டும் பழையபடியே மாற்றப்பட்டிருப்பதால் அந்தந்த க்ளாஸ் டிக்கட்டுகளுக்கு வெவ்வேறு நிறம் கொடுக்கப்பட்டிருக்கிறது. முதல் வகுப்புக்கு வெள்ளை நிறம், இரண்டாவது வகுப்புக்குப் பச்சை நிறம், மூன்றாவது வகுப்புக்கு மஞ்சள் நிறம், இண்டர் வகுப்புக்கு ஊதா வர்ணம் என்று ஏற்பாடாகியிருக்கிறது."

—செய்தி

"நிறவேற்றுமையும் வகுப்பு வேற்றுமையும் என்றுதான் நம்மை விட்டு ஒழியுமோ!" என்று அங்கலாய்க்கிறார் ஒரு அபேதவாத டிக்கட் வாங்காப் பிரயாணி.

★

"இப்பொழுதெல்லாம், நாட்டில் உணவுப் பஞ்சம் வந்து விடுமோ என்ற பீதி பரவி வருகிறது. உண்மையில் பீதி யடைவதற்குக் காரணமில்லை. ஆகவே, பீதியைப் பரப்பாதீர்கள். பஞ்சத்தை விடப் பஞ்ச பீதி தேசத்துக்கு மிகவும் கொடிது! அதனாலேயே பஞ்சம் வந்து விடும்!" என்று நம் தலைவர்கள் கூறி வருகிறார்கள்.

இது சம்பந்தமாக ஒரு பழைய கதை நினைவுக்கு வருகிறது.

ஒரு ஊரிலிருந்து அடுத்த ஊருக்கு ஒரு வழிப்போக்கன் போய்க் கொண்டிருந்தானாம். வழியில் மாரியம்மன் (வைசூரி தேவதை) வந்து கொண்டிருப்பதைப் பார்த்தான். உடனே அந்த வழிப்போக்கன் "அம்மா, பரதேவதை! பக்கத்து ஊரில் மிச்சம் யாராவது உண்டா?" என்று கேட்டான்.

"இல்லை; ஊரிலிருந்த அத்தனை பேரும் இறந்து விட்டார்கள்" என்றாள் மாரியம்மன்.

"ஐயோ, இப்படிப் பண்ணலாமா!" என்று கேட்டான் வழிப்போக்கன்.

"நான் வைசூரியினால் கொன்றது நூறு பேரைத்தான். ஆனால் தங்களுக்கும் அம்மை போட்டுவிடுமோ என்று பீதி யடைந்து மற்றவர்கள் இறந்து விட்டார்கள். அதற்கு நான் என்ன செய்யட்டும்!" என்றாள் மாரியம்மன்.

பஞ்சத்தைக் காட்டிலும் பஞ்ச பீதிதான் சில ஆண்டுகளுக்கு முன் வங்காளத்தில் கொடும் பட்டினிச் சாவுகளை விளைவித்தது. இதை நினைவிற்கொண்டு வீண் வதந்திகளைப் பரப்பாமல் இருக்க வேண்டும்.

ஸ்ரீ பிரகாசம்காரு இந்திய தந்தி தபால் இலாகா மந்திரி ஸ்ரீ ரபி அஹமத் கித்வாய்க்கு சென்னை கன்னிமாரா ஹோட்டலில் விருந்தளித்தார். ஸ்ரீ கித்வாய் பேசுகையில் "எங்கும் ஒற்றுமை நிலவினால் உலகமே அஸ்தமித்து விடும்" என்று ஹாஸ்யமாகக் கூறினாராம்.

"நான் இருக்கப் பயமேன்!" என்று பிரகாசம் காரு மிகவும் 'ஸீரியஸ்'ஸாகவே கூறியிருக்கலாம்.

★

"மனித வர்க்கமே அழிந்து விட்டாலும் உலகம் பிழைத்திருக்கும்" என்று ஆட்டோ பிரீஷ் என்ற அணுகுண்டு விஞ்ஞானி சொல்லியிருக்கிறார்.

"மனித வர்க்கம் 'அழிந்து விட்டாலும்' என்று சொல்லுவது தவறு; அழிந்தால்தான் உலகம் பிழைக்க முடியும்" என்று திருத்தம் கொண்டுவருகிறார் ஓர் அணுகுண்டு எதிரி.

★

"நம்முடைய உணவுப் பொருள்களை ஐந்து கோடிக் குரங்குகள் பறித்துச் சாப்பிடுகின்றன. இது வெறும் வேடிக்கையல்ல. உத்தர மாகாணத்தில் வருஷத்துக்கு இருபத்தைந்து கோடி ரூபாய் பெறுமானமுள்ள உணவுப் பொருள் பாழாகிறது. ஆகையினால் குரங்குகளை ஒழித்துக் கட்ட வேண்டும்."

—டில்லிச் செய்தி

"மொத்தத்தில் எல்லா உணவுப் பொருள்களும் மனிதர்களால்தான் பாழாகின்றன. மனிதர்களை ஒழித்துக் கட்டிவிட்டால் சௌகரியமாக இருக்குமே!" என்கிறார் ஸ்ரீ அனுமந்தராயர்.

★

"பாங்கியில் வேலை பார்த்துவந்த ஒரு 'ப்யூன்' திடீரென்று பத்தாயிரம் ரூபாய் சம்பாதித்தான்! சில்லறை மாற்றி வரும்படி கொடுக்கப்பட்ட பாங்கிப் பணத்தை எடுத்துக் கொண்டு மறைந்து விட்டான். பிறகு போலீஸார் அவனைக் கண்டு பிடித்தனர். அவனுக்கு ஆறுமாதம் கடுங்காவல் கிடைத்தது."

—சென்னைச் செய்தி

"பத்தாயிரம் ரூபாயும் கிடைத்து ஆறு மாதம் நிர்ப்பயமாகத் தங்க இடமும் கிடைத்தால் சந்தோஷப்பட வேண்டிய விஷயம்தான்!" என்கிறார், வீடும் அதற்கு முன் பணமும் தேடி அலையும் ஒரு கிருகஸ்தர்!

# ஜனாதிபதியின் விமர்சனம்

பாரத நாடு சுதந்திர நாடுதான் என்பது இப்போது தெள்ளத் தெளிய வெளியாகி யிருக்கிறது.

இதற்கு முன் சர்வதேச மேடைகளிலே இந்தியாவுக்குப் பதிலாக பிரிட்டிஷ் சர்க்கார் பிரதிநிதிகள்தான் கையைத் தூக்குவார்கள்.

எவ்வளவு பெரிய பிரச்னையாயினும் இந்தியாவின் சார்பில் பிரிட்டிஷார் தான் முடிவு செய்வார்கள்.

சிறிய போராயினும் உலக மகா யுத்தமாயினும் அவர்கள் இந்திய மக்களின் அபிப்பிராயத்தைக் கேட்காமலும் இந்தியாவின் நலன்களுக்கு முற்றிலும் விரோதமாகவும் அதில் நம் நாட்டைச் சிக்க வைப்பார்கள்.

இந்திய மக்களின் க்ஷேமத்துக்காகப் பரிந்து பேசும் தலைவர்களைச் சிறையில் போட்டு வாட்டுவார்கள்.

எனவே, இந்திய மகாஜனங்கள் தங்களுடைய நலன்களுக்கும் உயர்ந்த கொள்கைகளுக்கும் உகந்த வகையில் தங்கள் இஷ்டப்படி எந்தக் காரியமும் செய்ய முடியாமல் இருந்தது.

ஆனால் இன்று நிலைமை அடியோடு மாறி பாரத நாடு சுதந்திரம் பெற்று விட்டதால், இந்தியாவைப் பிரிட்டன் தன் இஷ்டப்படி இழுத்துச் செல்லும் விபரீதம் மறைந்து பிரிட்டனைக் கூட இந்தியா தன் இஷ்டப்படி இழுக்கும் வல்லமை பெற்றிருக்கிறது!

எந்த சர்வதேசப் பிரச்னையையும் ஒட்டி இந்தியாவின் நிலைமை என்ன என்று அமெரிக்காவும் பிரிட்டனும் மற்ற வல்லரசுகளும் அக்கறை கொள்வதற்கு அதுதான் காரணம்.

கொரியாவில் நடைபெற்று வரும் யுத்தத்தில் மற்றத் தேசங்களின் நிலைமையைக் காட்டிலும் இந்தியாவின் நிலைமை என்ன என்பதையே அமெரிக்காவும் பிரிட்டனும் ஆர்வத்துடன் கவனித்து வருகின்றன.

ஏனெனில், இந்தியாவின் கட்சியையே ஆசியாவிலுள்ள பெரும்பாலான நாடுகளும் ஆதரிக்கும்.

உலகிலே சமாதானமாயினும் யுத்தமாயினும் ஆசியாவின் ஆதரவின்றி எதுவும் செய்ய முடியாது என்பதை எல்லா வல்லரசுகளும் நன்கு உணர்ந்து கொண்டிருக்கின்றன.

ஆசிய நாடுகளிடையே ஒற்றுமையும் ஒத்துழைப்பும் நிலவுமாயின், வல்லரசுகள் எல்லாம் ஒருங்கே சேர்ந்து கொண்டால்கூட ஆசியாவைத் தங்கள் இஷ்டப்படி ஆட்டி வைக்க முடியாது.

அதனால்தான் ஆசியாவில் அமைதியையும் ஆசிய நாடுகளின் சுதந்திரத்தையும் பாதுகாப்பதற்கு மேற்படி நாடுகளிடையே ஒற்றுமை நிலவ வேண்டியது அத்தியாவசியம் என்று இந்திய ஜனாதிபதி பாபு ராஜேந்திர பிரசாத் சென்ற வாரம் புது டில்லியிலே நடந்த பார்லிமெண்டின் விசேஷக் கூட்டத்தில் வற்புறுத்தினார்.

பண்டித ஜவாஹர்லால் நேரு சமீபத்தில் தென் கிழக்கு ஆசியா நாடுகளுக்கு விஜயம் செய்ததன் மூலம் அந்த நாடுகளுக்கும் இந்தியாவுக்கும் உள்ள தொடர்பு மிகவும் பலம் பெற்றிருக்கிறது என்றும் கூறினார்.

* * *

நமது ஜனாதிபதி பார்லிமெண்டிலே நிகழ்த்திய பிரசங்கத்தில் இந்தியப் பிரச்னைகளைவிடச் சர்வ தேசப் பிரச்னையே முக்கிய இடம் பெற்றிருப்பதை எல்லோரும் கவனிக்க வேண்டும்.

கொரியாவில் யுத்தம் மூண்டிருப்பதன் காரணமாக இந்தியாவின் நிலைமை தர்ம சங்கடமாகி யிருக்கிறது.

உலக அமைதிக்குப் பங்கம் நேராமல் பாதுகாக்க வேண்டும் என்பதே இந்தியாவின் லட்சியம். அதுதான் காந்தி மகான் காட்டிய வழிக்கும் பாரத நாட்டின் பண்பாட்டுக்கும் சாத்துவிகக் கொள்கைக்கும் உகந்தது.

தவிர உலக மகா யுத்தம் ஏற்படுமாயின் அதில் நேரடியாக ஈடுபடக் கூடிய அபரிமிதமான ஆயுத பலமும் இந்தியாவுக்கு இல்லை.

எனவே ஆத்மார்த்த ரீதியாக மாத்திரமல்ல, ராஜதந்திர ரீதியாகப் பார்த்தாலும் பண்டித ஜவாஹர்லால் நேருவின் தலைமையில் இந்தியா தற்போது அனுஷ்டித்து வரும் கொள்கையே சிறந்தது என்று ஏற்படுகிறது.

சீனா, இந்தியா உள்பட எல்லா ஆசியா நாடுகளும் உலக மகா யுத்தத்தைத் தவிர்க்கவும் சர்வதேச அமை

நிலை நீங்க நிறுத்தவும் ஒற்றுமையுடன் தீவிரமாக முயற்சிக்குமாயின் அந்த முயற்சி வெற்றி பெறும் என்பது சர்வ நிச்சயம்.

* * *

உலக சமாதானத்துக்கு அடுத்த படியாக பாரத நாட்டை எதிர் நோக்கி நிற்கும் பல்வேறு உள்நாட்டுப் பிரச்னைகளையும் ஜனாதிபதி குறிப்பிட்டார்.

அந்தப் பிரச்னைகளில் முக்கியமானது காஷ்மீர் விஷயம் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் ஏற்பட்டுள்ள ஒப்பந்தம் பூரண வெற்றி பெறுவது காஷ்மீர் பிரச்னை சுமுகமாகத் தீருவதையே பொறுத்திருக்கிறது எனலாம்.

ஐக்கிய நாடுகள் சபையினால் நியமிக்கப்பட்டுள்ள மத்தியஸ்தர் ஸர் ஓவன் டிக்ஸன் முன்னிலையில் பாகிஸ்தான் பிரதம மந்திரியும் இந்தியா பிரதம மந்திரியும் புது டில்லியிலே சந்தித்துப் பேசினார்கள். மறுபடியும் அவர்கள் மூவரும் கராச்சியில் சந்தித்துப் பேசத் தீர்மானித்திருக்கிறார்கள்.

பல மாதங்களாகக் கோர நடனம் புரிந்து வந்த மத வெறி அடங்கிச் சிறுபான்மையோர் விஷயமாக இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் ஒப்பந்தம் ஏற்பட்டது போல, பல பல மாதங்களாகப் புகைந்து கொண்டிருக்கும் காஷ்மீர் பிரச்னை மறுபடியும் பற்றியெரியத் தொடங்காமல் தீருவதற்கு வழி பிறக்கும் என்று நம்புகிறோம்.

* * *

பாகிஸ்தானிலிருந்து இனிமேல் சிறுபான்மையோர் இங்கு ஓடி வந்து அடைக்கலம் புகும்படியான நிலைமை ஏற்படாமல் தடுக்க வேண்டும்.

இதுவரையில் அடைக்கலம் புகுந்தவர்கள் மீண்டும் நல்வாழ்வு நடத்துவதற்கு வழி வகை செய்யவேண்டும்.

ஐந்நூறு ஆயிரம் கோடி ரூபாய் பெறுமான சொத்துக்களையெல்லாம் விட்டு வந்த அகதிகள் அந்தச் சொத்துக்களைத் திரும்பவும் பெறுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும்.

இவைபோல இந்தியா சமாளிக்க வேண்டியிருக்கும் பல பிரச்னைகளையும் ஜனாதிபதி குறிப்பிட்டு, அவற்றையெல்லாம் சர்க்கார் திருப்திகரமாகத் தீர்த்து வைப்பார்கள் என்றார்.

தற்போது இந்தியா முழுவதையும், குறிப்பாகப் பற்றாக் குறை மாகாணங்களையும் கலங்க வைக்கும் உணவுப் பிரச்னையை அவர் மறக்கவில்லை.

'உணவு உற்பத்தியைப் பெருக்குங்கள்' என்று சர்க்கார் எவ்வளவோ பிரசாரம் செய்தார்கள். பத்து நெல் விளையும் இடத்தில் பதினொரு நெல் விளையும்படி செய்துவிட்டால் இந்தியாவின் உணவுப் பொருள் பற்றாக் குறை பறந்தோடி விடும் என்று கூறினார்கள்.

அத்தகைய பிரசாரங்களினால் பலன் ஏற்படாவிட்டாலும் பல மாகாணங்களிலும் இப்போது கைக் கொள்ளப்பட்டு வரும் நீர்ப்பாசனத் திட்டங்களால் உணவு உற்பத்தி பெருகுவதற்கு வழி பிறக்கலாம்.

சில தினங்களுக்கு முன் ஸ்டாக்ஹோமில் நடந்த உணவுப் பொருள் உற்பத்தியாளர் மகாநாட்டில் இந்தியாவின் உணவு உற்பத்தி நிலையையும் மற்ற நாடுகளின் உணவு உற்பத்தி நிலையையும் ஒப்பிட்டுக் கூறினார்கள்.

பர்மாவில் ஒரு ஏக்கருக்குச் சராசரி 1005 பவுண்டும் சீனாவில் ஒரு ஏக்கருக்கு 1549 பவுண்டும் நெல் விளைகிறது. இத்தாலி தேசத்தில் ஒரு ஏக்கருக்குச் சராசரி 3190 பவுண்டு நெல் விளைகிறது.

ஆனால் இந்தியாவிலோ ஒரு ஏக்கருக்கு 750 பவுண்டு நெல் கூட விளைய வில்லை என்று சொன்னார்கள்.

அதாவது மேலே கூறிய மற்ற நாடுகளைப்போல் இந்தியாவிலும் நெல் விளையுமாயின், தற்போது பற்றாக்குறையாக இருந்து வரும் நம் நாட்டில் உபரியாக வெளிநாடுகளுக்கு அரிசி ஏற்றுமதி செய்யும்படியான சுபிட்ச நிலைமை ஏற்படலாம்.

எனினும் அத்தகைய நிலைமை ஏற்படும் வரையில் ஜனங்கள் என்ன செய்வது? பட்டினி கிடக்க முடியுமா?

1951-ம் வருஷத்துக்குப் பிறகு வெளிநாடுகளிலிருந்து உணவுப் பொருள் இறக்குமதி செய்வதில்லை என்று இந்திய சர்க்கார் உறுதியாகத் தீர்மானித்திருக்கிறார்கள்.

அந்தத் தீர்மானத்துக்குக் குந்தகம் ஏற்படாதவாறு இந்திய சர்க்கார் உணவுப் பற்றாக்குறைக் கஷ்டங்களைச் சமாளித்து விடுவார்கள் என்பதில் தமக்குப் பூரண நம்பிக்கை இருப்பதாக ஜனாதிபதி கூறுகிறார்.

அவரது நம்பிக்கை நிறைவேறி நாடு நலம் பெறவேண்டும் என்று நாம் பிரார்த்திக்கிறோம்.

# உபயகுசலோபரி

இந்தக் "கல்கி" இதழின் அட்டையில் நேயர்கள் கருட தரிசனம் செய்திருப்பார்கள். உங்கள் "கல்கி" பத்திரிகைக்குப் பத்தாவது ஆண்டு பிறந்திருக்கிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். தமிழ் மக்களின் பேராதரவினால் "கல்கி" பத்தாவது ஆண்டில் தலை சிறந்து விளங்கப் போகிறது. "கல்கி"யின் நேயர்கள் சகலவிதமான நலங்களையும் அடையப் போகிறார்கள். இந்த வருஷத்தில் நன்றாக மழை பெய்து நாடு சுபிட்ச மடைந்து தை மாதம் பிறந்ததும் அரிசி ரேஷன் மறுபடியும் பன்னிரண்டு அவுன்ஸாக உயரலாம் என்ற நம்பிக்கையும் இருக்கிறது. "நம்பியவர் நலமடைவர் நாலு மறை தீர்ப்பு!"

* * *

நிகழும் ஆண்டில் "கல்கி" நேயர்களுக்கு இன்னொரு மகிழ்ச்சிதரும் செய்தி. சென்ற இரண்டு வருஷங்களாகக் "கல்கி" தீபாவளி மலர் வெளிவர வில்லை. இதற்குக் காரணம் போதிய அச்சு இயந்திர வசதி இல்லாமையே யாகும். தீபாவளி அவசரத்தில் வேறு அச்சுக்கூடங்களில் சில பகுதிகளை அச்சடிப்பதில் மனதிற்குத் திருப்தி ஏற்படுவதில்லை. இப்போது தீபாவளி மலர் சிறந்த முறையில் அச்சிட்டு வெளி விடுவதற்குரிய இயந்திர வசதிகள் நமது அச்சுக்கூடத்திலேயே ஏற்பட்டு விட்டன. எனவே, இந்த ஆண்டில் "கல்கி" தீபாவளி மலர் உண்டு. தமிழ் நாட்டில் இந்த வருஷத்துத் தீபாவளிக் கொண்டாட்டமே ஒரு தனிக் குதூகலத்துடன் விளங்கப் போகிறது. கவிதைகள், கதைகள், கட்டுரைகள், சித்திரப் படங்கள் ஆகிய பல அம்சங்களில் இந்த வருஷத்துத் தீபாவளி மலர் இணையற்றுத் திகழும் என்று எதிர்பார்க்கலாம்.



* * *

'அகில உலகச் சிறுகதைப் போட்டி'யைப் பற்றிய விவரங்களை நேயர்கள் கவனித்திருப்பார்கள். தமிழ்நாட்டு எழுத்தாளருக்கு அகில இந்தியாவிலும், கூடுமானால் அகில உலகத்திலும் சிறப்பு ஏற்பட வேண்டுமென்பதற்காகவே மேற்படி போட்டிக்குத் தமிழ்க் கதைகளைச் சேகரிக்கும் பொறுப்பை நாம் ஏற்றுக்கொண்டோம். தமிழ் எழுத்தாளருக்கு ஏற்படும் சிறப்பு தமிழ் நாட்டுக்கே ஏற்படும் சிறப்பாகும் அல்லவா? இந்தச் சிறு கதைப் போட்டி மூலம் "கல்கி" நேயர்கள் அடையப் போகும் லாபம் ஒன்றும் இருக்கிறது. இந்தியாவின் பதினொரு பாஷைகளில் ஒவ்வொன்றிலும் நாலு கதைகள் வீதம் அகில இந்தியப் பரிசுப் பரிசோதனைக்காகத் தேர்ந்தெடுத்து அனுப்புவார்கள். அவை யெல்லாம் மிகச் சிறந்த சிறு கதைகளாகவே இருக்க வேண்டும். அத்தகைய பதினொரு பாஷைகளிலும் சிறந்த சிறு கதைகளை மொழிபெயர்த்துப் பிரசுரிக்கும் உரிமை தமிழ்நாட்டில் நமக்குக் கிடைக்கும். உரிய காலத்தில் நேயர்கள் படித்து மகிழலாம்.

* * *

மற்றொரு முக்கியமான விஷயத்தையும் இந்தச் சந்தர்ப்பத்தில் அதாவது "கல்கி"யின் பத்தாவது வருஷ ஆரம்பத்தில் சொல்லி வைக்க விரும்புகிறோம். "கல்கி" ஆசிரியர் எழுதிய "பார்த்திபன் கனவு" "சிவகாமியின் சபதம்" என்னும் சரித்திரக் கதைகளை நேயர்களில் பலர் படித்திருப்பார்கள். சென்ற வாரத்தில் டி. எஸ். சங்கரன் பீ. ஏ. என்னும் இளம் வாசகரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. "'பார்த்திபன் கனவு' 'சிவகாமியின் சபதம்' என்னும் இரண்டு சரித்திரக் கதைகளும் ஆயிரம் ஆண்டு நிலைத்திருக்கக் கூடிய அமர கதைகள். அந்த இரண்டு கதைகளையும் இது வரை நான் பத்துத் தடவை படித்து விட்டேன். இன்னமும் அலுக்கவில்லை. மேலும் படிக்க விரும்புகிறேன்!" என்று அந்த இளைஞர் எழுதியிருக்கிறார். பின்னர் "அம்மாதிரி சரித்திரத் தொடர் கதை மறுபடியும் எப்போது எழுதுவதாக உத்தேசம்?" என்றும் கேட்டிருக்கிறார். இதே கேள்வியை வேறு பல நேயர்கள் வேறு சந்தர்ப்பங்களில் கேட்டிருக்கிறார்கள்

'பார்த்திபன் கனவு' 'சிவகாமியின் சபதம்' போன்ற இன்னொரு சரித்திரக் கதை "கல்கி"யில் சீக்கிரம் வெளியாகப் போகிறது என்பதை மிக்க மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

தமிழ் நாட்டின் பழைய சரித்திரத்தில் மகோந்நதமான காலங்கள் இரண்டு. அவற்றில் ஒன்று, காஞ்சியில் மகேந்திர பல்லவனும் அவனுடைய மகன் நரசிம்ம வர்மனும் அரசு புரிந்த காலம். இந்தக் காலத்துத் தமிழ் நாட்டுச் சரித்திரத்தை அடிப்படையாகக் கொண்டவை பார்த்திபன் கனவும் சிவகாமியின் சபதமும். மறுபடியும் தஞ்சையில் ராஜ ராஜ சோழனும் அவனுடைய மகன் ராஜேந்திர சோழனும் அரசுபுரிந்த நாட்களில் தமிழ் நாடு மகோந்நதத்தை அடைந்தது. பல்லவர் ஆட்சியைக் காட்டிலும் இந்தச் சோழ மன்னர்களின் ஆட்சி பலவிதங்களிலும் சிறந்து விளங்கிற்று. இராஜராஜன்-இராஜேந்திர சோழன் நாட்களில் தமிழ் நாடு அடைந்த மகிமையைப் போல் அதற்கு முன்னும் அடைந்ததில்லை; பின்னும் அடைந்ததில்லை. தமிழ் மக்களின் சாம்ராஜ்யம் அவ்வளவு விஸ்தீரணமாகப் பரவியிருந்த காலம் முன்னும் இல்லை; பின்னும் இல்லை. "கல்கி" ஆசிரியர் இப்போது எழுதத் தொடங்கியிருக்கும் சரித்திரக் கதை இராஜராஜ சோழனுடைய இளம் பிராயத்தில் நடந்த சரித்திர சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டது. அக்டோபர் மாதத்தில் "கல்கி"யில் வெளியாகத் தொடங்கும்.

* *

சென்னை தண்டையார்பேட்டையில் ஸ்ரீ வி. என். குமாரசாமி என்னும் நண்பர் ஒருவர் வசிக்கிறார். திருவொற்றியூர் சாலையில் அவருடைய வீடு இருக்கிறது. அங்கே தமது மனைவியாருடனும் ஆண் பெண் குழந்தைகளுடனும் வசித்து வருகிறார். அவர்கள் வசிக்கும் வீட்டில் இதுவரை டாக்டர் பிரவேசித்தது கிடையாது. ஆயுர்வேத வைத்தியர், சித்த வைத்திய பண்டிதர், யூனானி ஹக்கீம் — ஆகிய எவரும் நுழைந்தது கிடையாது. எந்த முறை மருந்தும் அவர் கடையில் வாங்கியதில்லை; வீட்டுக்குள் கொண்டு வந்ததுமில்லை. அவருடைய குடும்பத்தில் யாரும் மருந்து சாப்பிட்டது கிடையாது.

ஸ்ரீ வி. என். குமாரசாமிக்கு வயது ஐம்பது ஆகிறது. (பார்த்தால் நாற்பது வயதுக்குக் குறைவாகவே தோன்றும்.) "எனக்கு இதுவரையில் நோய் என்பதே வந்ததில்லை. சுரம், தலைவலி ஒன்றும் வந்ததில்லை!" என்று பெருமையுடன் அந்த நண்பர் சொல்லிக் கொள்கிறார். "நான் இன்னும் ஐம்பது வருஷம் உயிரோடு இருப்பேன். நோய் நொடி இல்லாமலே இருப்பேன்!" என்று கையடித்துச் சத்தியம் செய்யவும் முன் வருகிறார்!

இத்தகைய பூரண ஆரோக்கியத்துடன் தாம் இருப்பதற்கு முக்கிய காரணம் யோகாசனப் பயிற்சிதான் என்று அவர் சொல்லுகிறார். அவருடைய மனைவி, குழந்தைகள் எல்லாருமே ஒழுங்காக யோகாசனப் பயிற்சி செய்து வருகிறார்கள்.

காந்தி பக்தரும், காந்தி குல்லா பக்தரும், காங்கிரஸ் வாதியும், ஆரியசமாஜியுமான ஸ்ரீ வி. என். குமாரசாமி "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்னும் கொள்கையுடையவர். ஆகையால், யோகாசன முறைகளையும் மற்றும் தாம் அனுசரிக்கும் ஆரோக்கிய விதிகளையும் அனைவருக்கும் சொல்ல விரும்புகிறார். "கல்கி"யின் மூலமாக இந்தத் தொண்டைச் செய்வதற்கு முன் வந்திருக்கிறார்.

"ஆரோக்கிய இரகசியம்" என்னும் தலைப்பில் அவர் எழுதியுள்ள முதல் கட்டுரை அடுத்த வார இதழில் வெளியாகிறது. பின்னர் தொடர்ந்து வெளியாகி வரும். முதலில் அவசியமான சில ஆரோக்கிய முறைகளைச் சொல்லிவிட்டுப் பிறகு யோகாசனங்களைப் பற்றி எழுதுவார். நேயர்கள் தொடர்ந்து படித்துக் கூடிய வரையில் அனுசரித்துப் பலனடையும்படி கோருகிறோம். அனுசரிக்கும் அளவுக்குப் பலன் நிச்சயம் அடையலாம். **வந்தனம்.**



# ஹரிஜன் ஐயங்கார்

**ஸ்ரீ** வைகுண்டத்தில் ஸ்ரீயப்பதியாகிய ஸ்ரீமந்நாராயணர் நித்திய சூரிகளும் பக்த கோடிகளும் சூழ்ந்திருக்க, நாரதர் தும்புரு தேவகானம் செய்ய, ஆதிசேஷ சயனத்தில் வீற்றிருக்கும் போது, நமது வெம்பாக்கம் ஸ்ரீ வி. பாஷ்யம் அய்யங்கார் அவர்களைப் பெருமானின் சந்நிதியில் கொண்டுபோய் நிறுத்தினால், என்ன விண்ணப்பித்துக் கொள்வார் தெரியுமா?

"சுவாமி! இங்கே வைகுண்டத்தில் எல்லோரும் நித்தியானந்தத்தை அநுபவித்துக் கொண்டு குதூகலமாகச் சுக வாசம் செய்கிறார்கள். ஆகையால் இங்கே இருப்பதில் எனக்கு அவ்வளவாக விருப்பம் இல்லை. பூலோகத்தில் உள்ள ஹரிஜனங்களோ பலவித இன்னல்களுக்கு ஆளாகி வருந்திக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்குச் சேவை புரிவதில் எனக்கு ஏற்படும் ஆனந்தம் இங்கே தங்களுடைய சந்நிதியில் ஏற்படவில்லை. ஆகையால் கிருபை கூர்ந்து பூலோகத்துக்கு என்னைத் திருப்பி அனுப்பிவிடுங்கள்!" என்றுதான் விக்ஞாபனம் செய்து கொள்ளுவார்.

ஸ்ரீ மகாவிஷ்ணுவுக்குச் சேவை செய்யும் தொண்டர் கூட்டத்தில் முதன்மையான ஸ்தானம் கருடாழ்வாருக்கு உரியது. ஆகையினாலேயே கருடனுக்குப் 'பெரிய திருவடி' என்று பெயர். கருடாழ்வாருடைய பக்த பரம்பரையில் தமிழ்நாட்டில் பெரியாழ்வார், நம்மாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார் முதலிய மகான்கள் அவதரித்தார்கள். பிறகு ஸ்ரீ ராமானுஜர், மணவாள மாமுனிகள் முதலிய ஆச்சாரிய புருஷர்கள் தோன்றினார்கள். அத்தகைய பாகவத சேவா பரம்பரையில் கடைசியாக உதித்து நம்மிடையே வாழ்ந்து நமது வாழ்வைத் தூய்மைப் படுத்தி வருகிறவர் ஸ்ரீ வி. பாஷ்யமய்யங்கார் அவர்கள்.

பெரிய உத்தியோகங்களை வகித்தவர்கள் பலர் 'ரிடயர்' ஆனபிறகு என்ன செய்வது என்று தெரியாமல் தவிப்பதுண்டு. சர்க்கார் கொடுக்கும் பென்ஷன் போதவில்லையென்று வேறு ஒழிந்த நேர உத்தியோகம் கிடைக்குமா என்று தேடிப் போவாரும் உண்டு.

ஸ்ரீ வி. பாஷ்யம் ஐயங்கார் அவர்கள் ஹைகோர்ட் ஜட்ஜ் உத்தியோகம் பார்த்து விலகியவர். அவருக்கும் ஏதாவது வேலை அவசியமாயிருந்தது. ஆனால் அவர் வேலை கிடைக்கவில்லையே என்று கஷ்டப்படவில்லை: வேலை செய்வதற்கு நேரம் போதவில்லையே என்று கஷ்டப்படுகிறார்! உத்தியோக வாழ்க்கையிலிருந்து விலகிய பிறகு சமூக சேவைக்கே தமது வாழ்வை அர்ப்பணம் செய்திருக்கிறார். முக்கியமாக ஹரிஜன சேவையில் ஈடுபட்டிருக்கிறார். வைதிக பரம்பரையில் பிறந்து வளர்ந்த பரம பக்தர் ஆன போதிலும், ஹரிஜனங்களுக்குச் சேவை செய்வது சாதி குல ஆசாரத்துக்கு விரோதமானது என்று அவர் கருதவில்லை. உண்மையான வைஷ்ணவ தர்மம் காந்தி மகான் உபதேசித்த சேவா தர்மந்தான் என்பதை உணர்ந்து தீனர்களின் சேவையில் ஈடுபட்டிருக்கிறார். அவர் செய்து வரும் தொண்டுகளில் சிலவற்றைத்தான் இங்கே சொல்ல முடியும். சென்னை ஹரிஜன சேவா சங்கத்தின் தலைவர்; முன்னர் கோடம்பாக்கத்தில் இருந்து இப்பொழுது தியாகராஜநகருக்கு வந்து சிறந்த இலட்சிய முறையில் நடத்தப்பட்டு வரும் தக்கர் பாபா வித்தியாலயத்தின் தலைவர்; ஜீவஹிம்ஸை நிவாரணச் சங்கத்தின் தலைவர்; சென்னை சர்க்கார் ஏற்படுத்தியிருக்கும் ஹரிஜன க்ஷேம இலாகாவின் ஆனரரி டைரக்டர் (அதாவது சம்பளமில்லாத உத்தியோகஸ்தர்.) இன்னும் அநேக சமூக சேவை ஸ்தாபனங்களின் தொடர்பு கொண்டவர்.

நீண்ட காலமாக ஹரிஜனங்களுக்குச் சேவை செய்து வருவதால் திவான் பகதூர் ஸ்ரீ வி. பாஷ்யம் ஐயங்கார் அவர்களுக்கு 'ஹரிஜன் ஐயங்கார்' என்னும் சிறப்புப் பெயரும் ஏற்பட்டிருக்கிறது!

காந்தி மகானுக்கு உகந்த கீதமாகிய "வைஷ்ணவ ஜனதோ தேனே கஹியே" என்று தொடங்கும் பாடலில் உண்மையான வைஷ்ணவனுக்குரிய குணங்களையெல்லாம் விவரித்திருக்கிறதல்லவா? அந்தக் குணங்களையெல்லாம் பூரணமாகப்பெற்று தொண்டு வாழ்க்கை நடத்தி வரும் ஸ்ரீ வி. பாஷ்யம் அவர்களைப் போற்றி வணங்குகிறோம். அவரைப் போன்று இன்னும் பல வைஷ்ணவர்கள் இந்தப் புனிதத் தமிழ் நாட்டில் தோன்றிச் சேவா தர்மத்தை மேற்கொள்ள வேண்டும் என்று விரும்புகிறோம்.

# பொய்மான் கரடு

கல்கி

— சந்திரா.

14

[சேலத்திலிருந்து நாமக்கல்லுக்குச் சென்ற வழியில் மோட்டார் சாரதி சொன்ன கதை இது என்பதை நேயர்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன். அவர் சொன்ன கதையை ஏதோ எனக்குத் தெரிந்த பாஷையிலும் பாணியிலும் எழுதிக் கொண்டு போகிறேன். சேலம் ஜில்லா கிராமங்களில் குடியானவர்கள் கையாளும் சக்தி வாய்ந்த பேச்சு நடையை என்னால் அவ்வளவு நன்றாகக் கையாள முடியுமா? அல்லது அவர்களுடைய பேச்சில் காணும் ரஸத்தைத்தான் எழுத்திலே கொண்டு வர முடியுமா?

செங்கோடன் வாந்தரைப் பொருத்திக்கொண்டு குடிசைக்குள்ளே நுழைந்த கட்டத்தில் கதை நின்று போயிற்று. ஏனெனில், அதற்குள் நாமக்கல் வந்து விட்டது. "இந்த நாமக்கல்லுக்குக் கொஞ்சங் கூடப் புத்தியில்லை. இன்னும் கொஞ்சம் அப்பால் தள்ளியிருக்கக்கூடாதோ! கதையின் நடுவில் வந்து குறுக்கிட்டு விட்டதே!" என்று நொந்து கொண்டேன்.

நாமக்கல்லுக்கு வந்த காரியம் முடிந்து முன்னிரவில் திரும்பிப் புறப்பட்டோம். மணி சுமார் ஒன்பது இருக்கும். காலையில் போட்ட தூற்றலைக் காட்டிலும் இப்போது கொஞ்சம் அதிகமாகவே விழுந்து கொண்டிருந்தது. "மழை" என்றுகூட அதைச் சொல்லலாம். மேலே வானமும் கீழே நான்கு திசைகளும் இருண்டிருந்தன. மோட்டார் வண்டியின் முன் விளக்குகள் அந்த இருட் கடலைக் கிழித்துக் கொண்டு, சாலையில் சற்று தூரத்துக்கு வெளிச்சமாக்கிக் கொண்டு சென்றன. அந்தப் பிரகாசமான ஒளியில் மழைத் துளிகள் வைரத் துளிகளாக ஒளிர்ந்தன. ஒவ்வொரு சமயம் வானத்தை வெட்டிய மின்னல் பூமியில் நெடுந்தூரத்தைப் பிரகாசமாக்கி விஸ்தார வெட்ட வெளிகளையும் ஆங்காங்கு நின்ற மொட்டைப் பாறைகளையும் குட்டை மரங்களையும் ஒரு கணம் காட்டிவிட்டு மறைந்தது.

பாக்கிக் கதையைக் கேட்க வேண்டும் என்ற என் ஆர்வத்தை மோட்டார் சாரதியிடம் தெரிவித்துக்கொண்டேன். அவரும் கதையைத் தொடங்கினர்.]

* * *

குடிசைக்குள் செல்லும்போதே செங்கோடனின் உள்ளம் பதைபதைத்தது. என்னத்தைப் பார்க்கப் போகிறோமோ என்று திகில் கொண்டிருந்தது. அங்கே அவன் பார்த்த காட்

கியோ பதைபதைப்பையும் திகிலையும் அதிகமாக்கியது. மனிதன் ஒருவன் அலங்கோலமாய் விழுந்து கிடந்தது தெரிந்தது. தன்னைக் கெடுப்பதற்கு முயன்ற இருவரில் ஒருவன்தான் அவன்! பங்காருசாமி என்ற பெயரை உடையவன். அவன் பக்கத்தில் ஒரு கூரிய கத்தி கிடந்தது. அதில் இரத்தக் கறை பட்டிருந்தது. அப்புறம், அடுப்பைத் தோண்டி எடுத்து அப்பால் படுத்தி விட்டு அங்கே குழி தோண்டியிருந்ததையும் அவன் பார்த்தான். குழி காலியாயிருந்ததையும் கவனித்தான். ஆனால் அந்தச் செப்புக் குடம் பக்கத்தில் எங்கேயாவது இருக்கிறதா? இல்லை! மாயமாய் மறைந்து விட்டது! தான் எண்ணியது சரிதான்! ஆனால் இது என்ன?—ஒரு சிறிய பெட்டி திறந்து கிடக்கிறதே! அதற்குள்ளே,.......ஆத்தாடி! நோட்டுகள்! ரூபாய் நோட்டுகள்! பெட்டிக்கு வெளியில் பக்கத்திலும் ரூபாய் நோட்டுகள்! இன்னும் ஏதோ கருப்பாகச் சுருள் சுருளாகக் கிடந்தது! ஒன்றும் புரியாமல் திக்பிரமையுடன் செங்கோடன் அந்தப் பெட்டிக்குச் சமீபத்தில் சென்று குனிந்து பார்த்தான். அப்போது தரையில் விழுந்து கிடந்த மனிதன் முனகினான். செங்கோடன் விளக்கை அவன் பக்கம் திருப்பினான். அந்த மனிதன் கொஞ்சம் தலையைத் தூக்கித் தன் சிவந்த கண்களினால் செங்கோடனை விழித்துப் பார்த்தான்! அதனால் செங்கோடனுக்குக் குலை நடுக்கம் ஏற்பட்டது.

"நீயா?......நீயா வந்து தொலைந்தாய்?.........அவள் எங்கே? அந்தப் பெண் பேய் எங்கே? — அவள்தான் என்னைக் கொன்றவள்!" என்று மெல்லிய குரலில் முணுமுணுத்தான் கீழே கிடந்த பங்காருசாமி. "பாவி! சண்டாளி!........." என்று சபித்துக் கொண்டே எழுந்திருக்க முயன்றான். முடியாமல் கீழே விழுந்தான். அவன் தலை சாய்ந்தது. கோரமாக விழித்த சிவந்த விழிகள் மூடிக்கொண்டன.

செங்கோடன் உடனே மந்திர சக்தியிலிருந்து விடுபட்டவன் போலானான். கீழே கிடந்த இரத்தம் தோய்ந்த கத்தியைக் கையில் எடுத்துக் கொண்டு வெளியே ஓடிவந்தான். அந்தச் சமயத்தில்தான் எஸ்ராஜுவும் குமாரி பங்கஜாவும் தயக்கத்துடன் நெருங்கி வந்து குடிசைக்குள்ளே எட்டிப் பார்க்க முயன்றார்கள்.

அவர்களைப் பார்த்ததும், செங்கோடன் ஆவேசம் வந்தவனைப் போல் கத்தியைக் காட்டி, "உள்ளே வராதீர்கள்! வந்தால் உங்களையும் பலி கொடுத்து விடுவேன்!" என்று கத்தினான். அவர்கள் பயந்து அப்பால் விலகிக் கொண்டார்கள். செங்கோடன் வெளியில் வந்து குடிசையின் கதவைச் சாத்தினான். "ஓகோ!" "கொலை!" "கொலை!" என்று கத்திக் கொண்டு கேணியைப் பார்த்து ஓடி மேட்டின் மீது ஏறினான். கேணி ஓரத்தில் வந்ததும் மடியை அவிழ்த்து அதிலிருந்த பொருளைக் கேணியில் விழும்படி செய்தான்.

அதேசமயத்தில் பக்கத்துத் தென்னை மரத்துக்குப் பின்னாலிருந்து போலிஸ் கான்ஸ்டேபிள் சின்னமுத்துக் கவுண்டர் வெளிப்புறப்பட்டார்.

"அப்பனே, செங்கோடா! என்ன விஷயம்? எதற்காக இப்படி அலறுகிறாய்? கேணியில் என்னத்தைப் போட்டாய்?" என்றார்.

ஒரு நிமிஷ நேரம் செங்கோடன் திகைத்து நின்று விட்டு, "நானா? நான் ஒன்றும் கேணியில் போடவில்லை! இனிமேலேதான் போடப் போகிறேன்!" என்றான்.

"என்னத்தைப்போடப்போகிறாய்?"

"ஒரு மனுஷனைத் தூக்கிப் போடப் போகிறேன்."

"மனுஷனையா? மனுஷனைக் கேணியிலே தூக்கிப் போடலாமா? செத்துப் போவானே?"

"அவன் முன்னமே செத்துப் போய் விட்டானுங்க!"

"யார் செத்துப் போனது? செத்தவனை எதற்காகக் கேணியில் போடப் போகிறாய்?"

"ஒருவனைக் கொலை செய்தால், அவனைச் சாக்கிலே கட்டிக் கிணற்றிலே போடலாம் என்று சினிமாவிலே காட்டினாங்களே!"

"யாரை நீ கொலை செய்தாய்?"

"அந்தப் பங்காருசாமியை நான் கொலை செய்து விட்டேன்! இந்தக் கத்தியினால்தான்!......" என்று செங்

கோடன் சொன்னபோது அவன் கை கொஞ்சம் நடுங்கிற்று.

"இங்கே கொடு, அந்தக் கத்தியை!" என்று போலீஸ்காரர் கேட்டதும் செங்கோடன் கொடுத்து விட்டான்.

"சரி! வா! நீ கொன்ற ஆளைப் போய்ப் பார்க்கலாம். அவனைத் தூக்கிப் போடுவதற்கு நானும் ஒரு கை கொடுக்கிறேன்!" என்று சொல்லி விட்டுப் போலீஸ்காரர் குடிசையை நோக்கிப் போனார். செங்கோடனும் அவர் பின்னால் போனான்.

குடிசை வாசலில் எஸ்ராஜும் குமாரி பங்கஜாவும் நின்று கொண்டிருந்தார்கள். பங்கஜா அழுது கொண்டிருந்தாள். எஸ்ராஜ் அவளைத் திட்டிக் கொண்டிருந்தான். கான்ஸ்டேபிளைப் பார்த்ததும் பங்கஜா "ஐயோ! இங்கேயும் வந்து விட்டாயா! இந்தப் பாவிகளால் என் கதி இப்படி யாச்சு!" என்று அலறினாள்.

## 15

போலீஸ்காரர் அங்கே அந்தச் சமயத்தில் எப்படி வந்தார் என்று சொல்வதற்குக் கொஞ்சம் கதையை முன்னால் கொண்டு போக வேண்டும். கான்ஸ்டேபிள் சின்னமுத்துக் கவுண்டர் முன்னம் சேலத்தில் வேலை பார்த்து வந்தார். அடிக்கடி அவர் 'கை காட்டி மர' வேலை செய்ய வேண்டியதாயிருக்கும். அதாவது வீதி முனையில் நாற்சந்தியின் நடுவில் நின்று வண்டிகள் போகவும் நிற்கவும் கை காட்ட வேண்டி வரும். அப்படி நின்றிருந்த நாட்களில் ஒருநாள், நடுப்பகலில் ஒரு இளம் பெண் அவரிடம் வந்து, "போலீஸ்கார ஐயா, நேற்று முதல் சாப்பிடவில்லை! பசியினால் பிராணன் போய்விடும் போலிருக்கிறது. ஒரு நாலு அணாக் கொடுத்தால் ஒரு அநாதைப் பெண்ணைக் காப்பாற்றிய புண்ணியம் கிடைக்கும்" என்றாள். போலீஸ்காரருக்குப் பாவ புண்ணியத்தில் அவ்வளவு நம்பிக்கையில்லை. ஆயினும் அந்தப் பெண்ணின் அநாதைத் தோற்றத்தைப் பார்த்துப் பரிதாபங் கொண்டார். "நீ யார், அம்மா! ஏன் உன்னை அநாதை என்று சொல்லிக் கொள்கிறாய்?" என்றார். "ஆம், ஐயா! நான் அநாதைதான். நாங்கள் மலாய் நாட்டில் கிள்ளானில் இருந்தோம். அப்பா பெரிய வியாபாரி. யுத்தம் ஆரம்பித்த சில நாளைக்கெல்லாம் புறப்பட்டு ஓடி வந்து விட்டோம். வழியிலே கப்பலிலேயே அப்பா செத்துப் போய்விட்டார். நானும் என் தம்பியும் அம்மாவும் மட்டும் இங்கே வந்து சேர்ந்தோம். இங்கே நாங்கள் எதிர்பார்த்து வந்த பந்துக்கள் யாரும் இல்லை. மலாய் நாட்டிலிருந்து சொத்து வருவதற்கும் வழியில்லை. ஜப்பான்காரன் பறிமுதல் செய்துவிட்டான். நாங்கள் கையோடு கொண்டு வந்த நகை நட்டுக்களை விற்று இத்தனை நாள் காலட்சேபம் செய்தோம். எல்லாம் தீர்ந்து போய் விட்டது! இப்போது பிச்சை வாங்கிப் பிழைக்க வேண்டியதாயிருக்கிறது!" என்று சொன்னாள்.

"ஐயோ! பாவம்! நீ படித்த பெண் மாதிரி தோன்றுகிறதே! ஏதாவது வேலை பார்த்துக் கொள்வதுதானே?" என்றார் போலீஸ் கான்ஸ்டேபிள்.

"வேலைக்கு நான் எவ்வளவோ பிரயத்தனம் செய்தேன். கிடைக்கவில்லை. வேலை கேட்கப்போன இடத்தில் ஆண் பிள்ளைகளாயிருந்தால் கண்ணை அடித்துத் துன்மார்க்கத்துக்குக் கூப்பிடுகிறார்கள். பெண்களாயிருந்தால் நன்றாகத் திட்டி அனுப்புகிறார்கள். நான் என்ன செய்யட்டும்!" என்றாள் அந்தப் பெண்.

"வாஸ்தவந்தான்; உலகம் அப்படிக் கெட்டுப்போய்க் கிடக்கிறது. மனிதர்களுடைய நெஞ்சில் இரக்கம் என்பதே இல்லை!" என்றார் போலீஸ்காரர். இப்படிச் சொல்லிவிட்டு நாலு அணாவுக்கு எட்டு அணாவாகக் கொடுத்து அனுப்பினார்.

அந்தப் பெண் போய் விட்டாள். ஆனால் போலீஸ்காரருடைய மனதிலிருந்து அவள் போகவில்லை. சில நாளைக்கெல்லாம் மறுபடியும் அந்தப் போலீஸ்காரரை அவள் சந்தித்தாள். சாப்பாட்டுக்கு நாலு அணாக் கொடுக்கும்படி கேட்டாள். போலீஸ்காரர் ஒரு ரூபாய் கொடுத்தார். அவர்களுக்குள் மேலும் கொஞ்சம் பழக்கமும் சிநேகமும் ஏற்பட்டன. பெண்ணின் பெயர் பங்கஜா என்று தெரிந்து கொண்டார். ஒழிந்த நேரங்களில் அந்தப் பெண்ணின் வீட்டுக்குப் போய் அவளுடை

ளும அவன் அம்மாவுடனும் பேசிக் கொண்டிருப்பதில் அவர் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார்.

போலீஸ்காரருடைய மூதல் மனைவி காலமாகி விட்டாள். இரண்டாவது கலியாணம் செய்துகொள்ளும் எண்ணமே அவருக்கு இருக்கவில்லை. ஆனால் குமாரி பங்கஜாவைப் பார்த்தபிறகு அவருடைய மனம் சிறிது சிறிதாக மாறிக் கொண்டு வந்தது.

இன்னொரு நாள் வழக்கம்போல் போலீஸ்காரர் கைகாட்டி உத்தியோகம் செய்த இடத்துக்குக் குமாரி பங்கஜா வந்து, "வீட்டில் அரிசி ஆகிவிட்டது. ஒரு ரூபாய் தரமுடியுமா? உங்களை அடிக்கடி கேட்க வெட்கமாயிருக்கிறது" என்றாள். போலீஸ்காரர், "ஏன் வெட்கப் படவேண்டும்? கூடிய சீக்கிரத்தில் நான் மாதா மாதம் வாங்கும் சம்பளத்தை அப்படியே உன்னிடம் கொண்டுவந்து மொத்தமாகக் கொடுக்கும் காலம் வரலாம். இல்லையா? உன் தாயாரைக் கூடக் கேட்டாகி விட்டது. உனக்குச் சம்மதம் என்றால் உடனே கலியாணத்தான்!" என்றார்.

"ஓ! நீங்களும் மற்றவர்களைப் போலத்தானா?" என்றாள் பங்கஜா.

"மற்றவர்களையும் என்னையும் ஒப்பிட்டுப் பேசுகிறாயே? மற்றவர்கள் உன்னைக் கலியாணம் செய்துகொள்ளுகிறேன் என்று சொன்னார்களா?" என்று கேட்டார்.

"ஆமாம்; பின்னே என்ன? எல்லாரும் என்னைக் காந்தர்வ மணம் செய்து கொள்வதாகத்தான் சொன்னார்கள். ஒரு அநாதைப் பெண் அகப்பட்டால் நீங்கள் ஆண் பிள்ளைகள் என்ன வேணுமானாலும் செய்வீர்கள்! சீச்சீ! உன்னுடைய பணம் எனக்கு வேண்டாம்!" என்று ரூபாயை விட்டெறிந்து விட்டுக் குமாரி பங்கஜா நடையைக் கட்டினாள்.

போலீஸ்காரர் மிக்க ஏமாற்றத்துடனும் வருத்தத்துடனும் அவள் போவதைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவள் பத்து அடி தூரம் போனதும் ஒரு விசித்திரமான சம்பவம் ஏற்பட்டது. அந்த வழியே வந்த சைகிள்காரன் ஒருவன் குமாரி பங்கஜாவின் மீது தன் வண்டியை மோதினான். அந்த வேகத்தில் அவள் கையில் இருந்த சிறிய பெட்டி தவறிக் கீழே விழுந்தது. விழுந்த வேகத்தில் அதன் கதவு திறந்தது. திறந்த பெட்டிக்குள் கான்ஸ்டேபின் பார்த்தார். ரூபாய் நோட்டுக் கத்தைகளாகக் குவித்து வைத்திருந்தது! சில நோட்டுகள் வெளியிலும் சிதறி விழுந்தன. குமாரி பங்கஜா அவசர அவசரமாக அந்த நோட்டுகளைப் பொறுக்கி எடுத்துப் பெட்டியில் வைத்துக் கதவை மூடிப் பூட்டினாள். அதே சமயத்தில் கடைக்கண்ணால் போலீஸ்காரர் தன்னைக் கவனிக்கிறாரா என்று பார்த்துக் கொண்டாள். பெட்டிக் கதவைப் பூட்டியதும் அவசரமாக நடையைக் கட்டினாள்.

போலீஸ்காரர் ஆச்சரியத்தில் ஆழ்ந்தார். பெட்டிநிறைய ரூபாய் நோட்டை வைத்துக் கொண்டு தன்னிடம் அரிசி வாங்கப் பணம் இல்லை என்றாளே! இது என்ன விந்தை? ஆரம்பத்திலிருந்தே என்னை ஏமாற்றிக் கொண்டு வருகிறாளா? அல்லது இன்றைக்குத் தானா? திடீரென்று இவ்வளவு பணம் இவளுக்கு எப்படிக் கிடைத்தது!......

மறுநாள் குமாரி பங்கஜா அவரைத் தேடிக்கொண்டு வந்தாள். "நேற்றே ஒரு விஷயம் சொல்ல வேண்டும் என்றிருந்தேன். ஆனாலும் உங்கள் மனதைச் சோதிக்க விரும்பியதால் சொல்லவில்லை. மலாய் நாட்டில் எங்கள் வீட்டையும் தோட்டங்களையும் விற்றுப் பணம் அனுப்பியிருக்கிறார்கள். நேற்றுத்தான் வந்தது. ஒரு சிநேகிதர் வீட்டில் கொண்டு போய்க் கொடுத்துவிட்டு வந்தேன்!" என்றாள்.

"அவ்வளவு பணத்தை நம்பிக் கொடுக்கும்படி அப்படிப்பட்ட சிநேகிதர் உனக்கு இருக்கிறாரா? அதை விடப் பாங்கியில் போட்டுவைப்பது தானே?" என்றார் போலீஸ்காரர்.

"பாங்கியிலே போட்டால் வட்டி எங்கேகொடுக்கிறார்கள்? நான்கொடுத்தது பங்காருசாமி என்பவரிடம். நல்ல இடத்தில் கடன் கொடுத்து நிறைய வட்டி சம்பாதித்துக் கொடுப்பதாகச் சொல்லியிருக்கிறார்."

பங்காருசாமி என்பவன் கே. டி. ஜாபிதாவில் இல்லையே தவிர, மற்றப்படி அவன்பேரில் போலீஸ் இலாகா



வுக்குப் பல சந்தேகங்கள் இருந்தன. அப்படிப்பட்டவனிடமா இவன் பணத்தை நம்பிக் கொடுத்திருக்கிறான்? ஐயோ! விழுங்கி ஏப்பம் விட்டுவிடுவானே! — இன்னொரு சந்தேகமும் போலீஸ்காரரின் மனதில் தோன்றியது. அதைக் கேட்டு விட்டார்.

"நேற்று எதற்காக என்னிடம் பணம் கேட்க வந்தாய்?" என்றார்.

"அதுவா? உங்களிடம் ஏதாவது ஒரு வியாஜத்தை வைத்துக்கொண்டு பேசவேண்டும் என்று இருந்தது. அதனாலேதான் வந்தேன். மன்னித்துக் கொள்ளுங்கள். நான் கஷ்டதசையில் இருந்தபோது நீங்கள் செய்த உதவிகளுக்காக மிக்க வந்தனம். ஒரு நாள் அதற்கெல்லாம் வட்டியும் முதலுமாகச் சேர்த்துக் கொடுத்து விடுகிறேன்!" என்று சொல்லி விட்டு, விடு விடு என்று போய் விட்டான்.

போலீஸ்காரருக்கு அவன் சொன்ன சமாதானத்தில் நம்பிக்கை ஏற்படவில்லை. இந்தப் பேதைப் பெண்ணை அந்தப் பங்காருசாமி ஏதோ குழியில் கவிழ்க்கப் பார்க்கிறான் என்று சந்தேகித்தார். ஆகையால் குமாரி பங்கஜாவையும் பங்காருசாமியையும் கவனிக்கத் தொடங்கினார்.

திடீரென்று சேலத்திலிருந்து பங்காருசாமி, குமாரி பங்கஜா இருவரும் காணாமற் போனார்கள். பங்கஜாவின் தாயாரைப் போய்ப் பார்த்துக் கேட்டதிலும் தகவல் தெரியவில்லை.

போலீஸ்காரரின் மனது சஞ்சலத்தில் ஆழ்ந்திருந்தது. இந்த நிலையில் அவரைச் சேலத்திலிருந்து சின்னம நாயக்கன் பட்டிக்கு மாற்றினார்கள்.

அங்கே பங்காருவையும் பங்கஜாவையும் கண்டு போலீஸ்காரர் ஆச்சரியப்பட்டார்.

பங்கஜா ஒரு நாள் அவரைத் தனிமையில் சந்தித்துத் தன்னைத் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ள வேண்டாம் என்று மன்றாடினன். போலீஸ்காரர் அப்படியே வாக்களித்தார். ஆயினும் இங்கே ஏதோ கிருத்திரமம் நடக்கப் போகிறது என்ற சந்தேகம் அவர் மனதில் உதித்தது. ஆகையால் மேற்படி ஆசாமிகளுக்குத்தெரியாமலேயே அவர்களைக் கவனித்துக் கொண்டு வந்தார்.

போலீஸ்காரருடைய சந்தேகத்தை அதிகப்படுத்தும்படியான சம்பவம் ஒன்று ஒரு நாள் நேரிட்டது. நாமக்கல் சாலையில் அவர் போக நேரும்போதெல்லாம் பொய் மான் கரட்டையும், அந்தக் கரட்டின் சந்தில் தெரிந்த பொய் மானையும் பார்த்து வியக்காமல் போவதில்லை. "அருகிலே போய்ப் பார்த்தால் இருட்டைத் தவிர ஒன்றுமில்லை; சாலையில் இருந்து பார்த்தால் தத்ரூபமாக அழகிய மான் தெரிகிறதே! இது என்ன விந்தை? எப்படி நேருகிறது?" என்று அடிக்கடி அவர் யோசிப்பதுண்டு. ஒரு நாளைக்குத் திடீரென்று மேற்படி குன்றின் குகையில் பொய்மானுடைய முழுத் தோற்றத்தையும் காணமற் போகவே, அவருக்கு ஒரே வியப்பாய்ப் போய் விட்டது. ஒரு காலும் ஒரு காதும் முகத்தில் பாதியும் மட்டும் தெரிந்தன. மானின் முழு உருவத்தைக் காணவில்லை. இந்த அதிசயத்தைக் கண்டுபிடிக்க எண்ணிக் குன்றின்மீது ஏறிப் பார்த்தார். பொய்மான் குகையில் ஒரு சாக்கு மூட்டையும் ஒரு கள்ளிப் பெட்டியும் வைக்கப்பட்டு இருந்தன! 'மானின் நிழல் தோற்றத்தின் மேல் இச் சாமான்களின் நிழல் எப்படியோ விழுந்திருக்கின்றது! ஆகையினலேதான், முழு மானின் அழகிய தோற்றம் கீழேயிருந்து பார்க்கும் போது காணப்படவில்லை!' என்று தெரிந்து கொண்டார்.

அதிசயத்தின் காரணத்தைக் கண்டுபிடித்தாகிவிட்டது. ஆனல் குகையில் வைத்திருக்கும் சாமான்களின் மர்மங்களைக் கண்டு பிடித்தாக வேண்டும். அந்தச் சாமான்கள் யாருடையவை?



எதற்காக அங்கே வைத்திருக்கிறார்கள்? சாமான்களை உடனே பரிசோதித்துப் பார்க்கப் போலீஸ்காரர் விரும்பவில்லை. மற்றவர்கள் யாரும் கவனிக்க முடியாத சமயத்தில் பரிசோதித்துப் பார்க்கவேண்டும். வைத்தவர்கள் யார் என்றும் கவனித்து வரவேண்டும்.

பங்காருசாமி, பங்கஜா, எஸ்ராஜ், இவர்களைச் சுற்றிக் கொண்டிருந்த செங்கோடன்,— ஆகியவர்கள் மீது போலீஸ்காரருக்குச் சந்தேகம் தோன்றியிருந்தது. பொய்மானை மறைத்த பொருள்களை அவர்களில் யாராவது வைத்திருக்கவேண்டும் என்றும், அவை திருட்டுப் பொருள்களாயிருக்கலாம் என்றும் எண்ணினார்.

ஒருநாள் பங்கஜா போலீஸ்காரரைத் தேடிப் பிடித்து, "எனக்காக ஒரு உதவி செய்ய முடியுமா?" என்று கேட்டான். செங்கோடனிடம் தன் கடிதத்தைக் கொண்டுபோய்க் கொடுக்கச் சொன்னான். கூழைக்காலன் புதையல் இருக்குமிடம் செங்கோடனுக்குத் தெரியும் என்றும், அவனிடமிருந்து அந்த இரகசியத்தைத் தெரிந்து கொள்வதற்காகவே அவனிடம் சிநேகங் கொண்டதாக நடிப்பதாகவும் கூறினான். புதையல் கிடைத்தால் போலீஸ்காரருக்கும் பங்கு கொடுப்பதாகச் சொன்னான். போலீஸ்காரர் மர்மம் இன்னதென்று கண்டு பிடிக்கும் நோக்கத்துடன் கடிதத்தைக் கொண்டு போய்க் கொடுக்கச் சம்மதித்தார்.

மறுநாள் பொய்மான் கரட்டுக் குகையில் மானின் முழு உருவமும் தெரிந்தது. ஆகையால், தான் செங்கோடக் கவுண்டனுக்குக் கடிதம் கொடுக்கப் போன சமயத்தில் ஆசாமிகள் அச் சாமான்களை எடுத்துக் கொண்டு விட்டார்கள்! அவை என்னவாயிருக்கும்?

மறுபடியும் போலீஸ்காரர் ஏமாற விரும்பவில்லை. செங்கோடன் பொய்மான் கரடுக்குப் பின்னால் குமாரி பங்கஜாவைச் சந்தித்ததும் செங்கோடனுடைய குடிசையை நோக்கிச் சென்றார். மற்ற இரண்டு மனிதர்களும் அங்கே வருவார்கள் என்பது நிச்சயம். ஆகையால் முன்னாலேயே போய்க் கேணிக்கரை மேட்டில் தென்னைமரத்தின் பின்னால் மறைந்து கொண்டார். அங்கிருந்து பார்த்தால் குடிசையின் சமீபத்தில் சுற்றுப் புறமெல்லாம் நன்றாய்த் தெரியும். ஆனால் துரதிர்ஷ்டவசமாக அவர் எதிர்பாராதது ஒன்று நிகழ்ந்து விட்டது. போலீஸ்காரர் போன திசையை மோப்பம் பிடித்துக் கொண்டு அவருடைய நாயும் செங்கோடனுடைய குடிசையை நோக்கி வந்தது. குடிசைக்குச் சமீபத்தில் அதன் குரைப்புச் சத்தமும், மரண ஓலமும் போலீஸ்காரருக்குக் கேட்டது. அவருடைய இரத்தம் கொதித்தது. ஆனாலும் கான்ஸ்டேபிள் சின்னமுத்துக் கவுண்டருக்கு டியூடி என்றால் டியூடிதான்; வேலை என்றால் வேலைதான்! ஒரு பெரிய மர்மத்தைக் கண்டு பிடிக்கப் போகிற கட்டத்தில் தன்னை வெளிப்படுத்திக் கொண்டு, காரியத்தைக் கெடுத்துவிட விரும்பவில்லை! நடந்ததையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்து விட்டு வெளிப்பட வேண்டிய சமயத்தில் வெளிப்பட்டு வந்தார்.

குடிசைக்கு வெளியில் செங்கோடனை நிற்கச் சொல்லி விட்டுப் போலீஸ்காரர் உள்ளே போனார். சுற்று முற்றும் பார்த்தார். கீழே விழுந்து கிடந்தவனையும் லாந்தர் வெளிச்சத்தில் கூர்ந்து கவனித்தார். கவனித்து விட்டு அவர் வெளியில் வந்து செங்கோடனைப் பார்த்து, "ஏனப்பா! நீயா கொலை செய்தாய்? யாரோ பெண் பேய் தன்னைக் கொன்றதாக வல்லவா உள்ளே கிடக்கிறவன் பழி சொல்லுகிறான்?" என்றார்.

"ஐயோ! என் பேரிலா பழி சொல்லுகிறாய்? எனக்கு ஒன்றும் தெரியாதே? நான் உள்ளேயே போகவில்லையே?" என்று பங்கஜா கூவினான்.

"கொலைகாரி! ஏன் பொய் சொல்லுகிறாய்? என்னையும் இந்தக் கவுண்டனையும் சண்டை போட விட்டு விட்டு நீதானே குடிசைக்குத் தனியாகப் போனாய்?" என்றான் எஸ்ராஜ்.

"இப்படி அபாண்டமாய்ப் பொய் சொல்லுகிறாயே?" என்று பங்கஜா ஓவென்று அலறி அழத் தொடங்கினான்.

• • •

சேலத்திலிருந்து போலீஸ் இன்ஸ்பெக்டர் முதலிய மேலதிகாரிகள் இரவுக்கிரவே வந்து சேர்ந்தார்கள். போலீஸ் அதிகாரிகள் மட்டும் அல்ல. அக்கம் பக்கத்துக் கிராமங்களிலிருந்தும் ஜனங்கள் வந்து கூட ஆரம்பித்து விட்டார்கள். செங்கோடனுடைய புதையலை யாரோ திருடன்

அடித்துக் கொண்டுபோகப் பார்த்தான் என்றும் அதற்காகச் செங்கோடன் அவனைக் கொன்றுவிட்டான் என்றும் அக்கம் பக்கங்களில் வதந்தி பரவி விட்டது.

ஜனங்களையெல்லாம் தடுத்துக் குடிசைக்குத் தூரத்தில் நிறுத்தி வைத்துவிட்டுப் போலீஸ் இன்ஸ்பெக்டரை மட்டும் கான்ஸ்டேபிள் உள்ளே அழைத்துச் சென்றார்.

ரங்காருசாமியின் உதடுகள் இன்னும் ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தன. "அந்தப் பெண் பிள்ளையை விடாதீர்கள்! அவள்தான் கொலைகாரி!" என்ற வார்த்தைகள் இன்ஸ்பெக்டரின் காதிலும் விழுந்தன.

பிறகு, காயம்பட்ட அந்த மனிதனை எடுத்துப் போவதற்கு இன்ஸ்பெக்டர் ஏற்பாடு செய்தார். செங்கோடன், எஸ் ராஜ், குமாரி பங்கஜா ஆகிய மூவரையும் கைது செய்து கையில் விலங்கு போட்டுக் கொண்டு போனார்கள்.

இதற்குள்ளே சிவராமலிங்கக் கவுண்டரின் குடும்பமெல்லாம் அங்கே வந்துவிட்டது! செம்பவள வல்லி செங்கோடனைப் பார்த்துப் பார்த்துக் கண்ணீர் பெருக்கினாள். அவளுடைய மனதில் சொல்ல முடியாத வேதனை குடி கொண்டிருந்தது என்பதை அவளுடைய முகக்குறி தெரியப்படுத்தியது. வேதனை இல்லாமல் எப்படி இருக்கும்? இரண்டு நாளைக்கெல்லாம் கலியாணத் துக்குத் தேதி வைத்திருக்கிறபோது இந்தமாதிரி கொலைக் குற்றம் சாட்டி மாப்பிள்ளையைக் கையிலே விலங்கு போட்டுக் கொண்டு போனால் கலியாணப் பெண்ணின் உள்ளம் துடிக்காமல் என்ன செய்யும்?

வேதனைக்கு உள்ளாகியிருந்த செம்பவளவல்லிக்குச் செங்கோடக் கவுண்டன் ஜாடை மாடையாகவும் வாய் வார்த்தை மூலமாகவும் பலவிதமாக ஆறுதல் கூறினான்.

"நீ கொஞ்சம் கூடக் கவலைப்படாதே! என்னை ஏழு வருஷம் ஜெயிலில் போட்டாலும் சரி, திரும்பி வந்து உன்னையே கட்டிக் கொள்கிறேன்!" என்று அவன் சொன்னதைக் கேட்டவர்கள் சிரித்தார்கள்.

"எதற்காகச் சிரிக்கிறீர்கள்? சிரிப்பதற்கு என்னத்தைக் கண்டு விட்டீர்கள்?" என்று செங்கோடன் அதட்டிவிட்டு, மறுபடியும் செம்பாவைப் பார்த்துச் சொன்னான்:—"நான் இல்லாதபோது நீதான் வயல் காடுகளைப் பார்த்துக் கொள்ள வேண்டும். எல்லாவற்றையும் நீதான் கவனித்துக் கொள்ள வேண்டும். தெரிகிறதா? உன் அப்பா கவனிக்க மாட்டார்; அலட்சியமாய் இருந்துவிடுவார். நீயும் அலட்சியமாயிருந்து விடாதே. என் சொத்தெல்லாம் இனிமேல் உன்னுடையதுதான். கேணி வற்றும்படி தண்ணீர் இறைத்துவிடப் போகிறார்கள்! ஒட்ட இறைத்துவிட்டால் தண்ணீர் ஊறாது. ஜாக்கிரதை! உன் அழகான தம்பிமார்கள் சோளக் கொண்டைகளைத் தீர்த்துவிடப் போகிறார்கள். கொல்லையில் கால் வைக்காமல் பார்த்துக்கொள். அப்படி ஏதாவது உன் தம்பிகள் செய்தார்களோ, தூக்கு மேடைக்குப் போனாலும் திரும்பி வந்து அவர்களுடைய முதுகுத் தோலை உரித்துப் போடுவேன்! ஜாக்கிரதையாயிருக்கும்படி சொல்லி வை...!"

இப்படிச் செங்கோடன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அவனைப் போலீஸ்காரர்கள் பிடித்து இழுத்துக் கொண்டு போனார்கள்!

செம்பா அங்கேயே விம்மிக்கொண்டு நின்றாள். அவளுக்குச் சமாதானம் சொல்லவே முடியவில்லை! (தொடரும்)

# பெல்ஜியம் மன்னர் பேட்டி

[நமது விசேஷ விடாக்கண்ட நிருபர்]

இருதலைக் கொள்ளி எறும்பு போல் இப்படியும் போக முடியாமல் அப்படியும் போக முடியாமல் அரண்மனைக்குள் அகப்பட்டுத் திண்டாடும் பெல்ஜியம் மன்னர் லீபோல்டைப் பேட்டி காண பிரஸ்ஸல்ஸில் போய்க் குதித்தேன். பிரஸ்ஸல்ஸ் நகரம் அல்லோல கல்லோலப் பட்டுக் கொண்டிருந்தது. வெடிகுண்டு வீச்சுகளும், எதிர்ப்பு கோஷங்களும், ஸ்டிரைக்குகளுமாக பிரஸ்ஸல்ஸ் நகரமே போர்க்களமாக மாறியிருந்தது. எங்கெங்கும் லீபோல்டு மன்னரின் பந்தோபஸ்துக்காகப் போலீஸ் வீரர்கள் அணியணியாகப் பாராவில் இருந்தார்கள். உடனே தலைக் கிராப்பைக் கலைத்து விட்டுக் கொண்டு தயாராக வைத்திருந்த அழுக்கு உடைகளை எடுத்து மாட்டிக்கொண்டேன். மாட்டிக் கொண்ட உடைகள் மீது இங்கு கொஞ்சம் அங்கு கொஞ்சமாக நிலக்கரியை எடுத்துப் பூசினேன். பிறகு ஒரு ஸலூனுக்குள் புகுந்தேன். க்ஷவரம் செய்து கொள்வதற்கல்ல. அங்கே மாட்டப்பட்டிருந்த நிலைக் கண்ணாடியில் என் அலங்கோலத்தைப் பார்ப்பதற்காகத்தான்! ஆகா! கண்ணாடியில் அசல் சுரங்கத் தொழிலாளி போலவே காட்சி யளித்தேன். பேஷ்! பெல்ஜியம் மன்னரைக் காண இதுதான் சரியான யுக்தி! என்னையும், என் வேஷத்தையும் கண்டதும் லீபோல்டு மன்னருக்கு எதிராக, அவருடைய அரண்மனை வாயிலில் புரட்சி செய்து கொண்டிருந்த சுரங்கத் தொழிலாளர்கள் நானும் ஒரு தொழிலாளி என்று எண்ணிக் கொள்வார்கள். எனவே, சுலபமாகக் கும்பலில் புகுந்து மன்னர் மாளிகையை அடைந்து விடலாமல்லவா?

"ஒழிக! ஒழிக!" என்று பலமாகக் கூச்சல் போட்டுக் கொண்டே அரண்மனை வாசலை அடைந்தேன். அங்கே போலீஸ் படைகளும், ஸோஷலிஸ்டு கோஷ்டிகளும் மூட்டி மோதிக் கொண்டிருந்தார்கள். சுரங்கத் தொழிலாளி ஒருவன் என்னைப் பார்த்து "யாரை ஒழிக என்று சொல்லுகிறாய்?" என்று கேட்டான்.

"ஆறு வருஷ அஞ்ஞாத வாசத்திற்குப் பிறகு சிம்மாசனத்துக்குத் திரும்பி வந்துள்ள லீபோல்டு மன்னரைத்தான் சொல்கிறேன்" என்றேன்.

"அப்படிச் சொல்லு; இப்படி முன்னால் போய் இன்னும் கொஞ்சம் பலமாகச் சொல்லு" என்று கூறி என்னை முன்னால் தள்ளிவிட்டார். அரண்மனைக்கு முன்னால் நெருங்கியதும் "ஒழிக! ஒழிக!" என்று மேலும் பலமாகக் கூச்சலிட்டேன். இரண்டு மூன்று போலீஸ்காரர்கள் என்னிடம் ஓடி வந்து "பயலே! இதோ பார்த்தாயல்லவா?" என்று சொல்லிக் கீழே சுட்டிக் காண்பித்தார்கள். தெருவில் இரத்த ஆறு ஓடிக் கொண்டிருந்தது.

"உன்னுடைய உதிரமும் இத்துடன் கலக்க வேண்டுமானால் கூச்சலிடு!" என்று என் மண்டைமீது தடியை ஓங்கினார்கள்.

"ஒழிக! புரட்சிக்காரர்கள் அடியோடு ஒழிக!" என்று நான் என் சுலோகத்தை மாற்றிக் கொண்டேன்.

"ஓகோ! புரட்சிக்காரர்களைச் சொன்னாயா? அப்படிச் சொல்லு. வா, உள்ளே; போ, அரண்மனைக் குள்ளே!" என்று என்னைத் தள்ளி விட்டார் போலீஸ்வீரர்.

"அவ்வளவுதான்! தலை தப்பியது லீபோல்டு மன்னரின் புண்ணியம்!" என்று நேராக மன்னரின் அறைக்குள் புகுந்தேன்.

லீபோல்டு மன்னர் அறைக்குள் குட்டி போட்ட பூனைபோல் இங்கும் அங்கும் தவித்துக் கொண்டிருந்தார்.

என்னைக் கண்டதும், நான் ஒரு எதிர்ப்புக்காரன் என்று எண்ணி அவர் மிரள மிரள விழித்தார்.

"பயப்படாதீர்கள்; நான் தொழிலாளி அல்ல; இந்தியாவிலிருந்து வந்திருக்கிறேன். என் பெயர் விடாக் கண்டர். தங்களை இந்தப் பேராபத்திலிருந்து தப்புவித்து இந்தியாவுக்குக் கூட்டிப் போகவே வந்திருக்கிறேன்" என்றேன்.

"என்ன, என்ன? இந்தியாவுக்கா? அங்கே ராஜாக்களே இல்லாத குடியரசு ஆட்சி அல்லவா நடக்கிறதாம். இந்தியாவில் எனக்கென்ன வேலை? அதோடு உங்கள் ஸர்தார் படேல் ரொம்பப் பொல்லாதவராமே! அவரைக் கண்டால் எனக்கு ஏககாலத்தில் இரண்டாயிரம் ஸோஷலிஸ்டு புரட்சிக்காரர்களை ஒருங்கே காணுவதைவிட பயமாயிருக்கிறது. இந்தியாவில் சமஸ்தான மன்னர்களின் வாயிலெல்லாம் மண்ணைப் போட்ட புண்ணியாத்மா அல்லவா அவர்?" என்றார்.

"அப்படியெல்லாம் ஒன்றுமில்லை; ஸர்தார் படேல் மிகவும் நல்ல மனிதர். மன்னர்களை அவருக்கு ரொம்பப் பிடிக்கும். மன்னர்களின் மணிமகுடமும், சிம்மாசனமும்தான் பிடிக்காது. தாங்கள் இந்தியாவுக்கு வந்தால் உங்களுக்கு ஏதாவது ஒரு மாகாணத்தில் கவர்னர் பதவி கொடுத்தாலும் கொடுப்பார். அப்படியும் இல்லை யென்றும் எங்கள் ஹைதராபாத்

நிஜாமுக்குப் பொழுதே போகவில்லையாம். தாங்கள் அவரோடு சீட்டாடிப் பொழுது போக்கலாம். இந்த யோசனைப்படி நடந்தால் நீங்களும் நிம்மதியாக வாழலாம். பெல்ஜிய மக்களும் நிம்மதியாக வாழ்வார்கள். வீண் புரட்சி, சண்டை, சச்சரவு, ரகளை, எதிர்ப்பு, ஆர்ப்பாட்டம், இரத்த ஆறு இதெல்லாம் அப்படி அப்படியே அடங்கிவிடும்" என்றேன்.

"என்னை மறுபடியும் சிம்மாசனத்துக்கு அழைத்து வந்த கத்தோலிக்க கட்சிக்காரர்கள் என்னை விட மாட்டார்களே?" என்றார் பெல்ஜிய மன்னர்.

"தங்களைச் சிம்மாசனத்தில் உட்கார வைத்துவிடக் கத்தோலிக்க சர்க்கார் கங்கணம் கட்டிக் கொண்டிருப்பதைப் போலவே, ஸோஷலிஸ்டு புரட்சி வீரர்கள் தங்களை அந்த சிம்மாசனத்திலிருந்து இறக்கிவிடக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறார்களே? அதற்கென்ன செய்யப் போகிறீர்கள். தங்களை ஸோஷலிஸ்டுகள் அடியோடு வெறுக்கிறார்கள். சென்ற யுத்தத்தில் தாங்கள் ஹிட்லருக்கு உடந்தையாக இருந்தீர்களாம். அதனால் தான் தங்களை நாட்டைவிட்டுத் துரத்தினார்களாம். இப்போது கத்தோலிக்கர் பதவிக்கு வந்ததும் தங்களைத் திரும்ப அழைத்து வந்திருக்கிறார்களாம். ஸோஷலிஸ்டு புரட்சிக்காரர்களோ, தாங்கள் ஹிட்லருடன் கைகுலுக்கும்போது எடுத்துள்ள போட்டோவை இப்போது ஊர் வலமாக எடுத்து வந்து 'துரோகி!' எனக் கூச்சல் போடுகிறார்களே!" என்றேன்.

"நான் என்ன செய்வேன்? ஹிட்லர் என்னைச் சந்தித்தபோது 'கையைக் கொடு' என்று கேட்டார். கை கொடுத்தேன். அதை யாரோ போட்டோ எடுத்துவிட்டார்கள். மற்றப்படி நான் ஒரு பாவத்தையும் அறியேன்" என்று பிரலாபித்தார் லீபோல்டு.

"தாங்கள் தப்பிக்க நான் ஒரு வழி சொல்கிறேன். என்னுடைய அழுக்கு உடைகளைத் தாங்கள் அணிந்து கொண்டு 'லீபோல்டு ஒழிக!' என்று கும்பலோடு கோவிந்தா போட்டுக் கொண்டே போய் விடுங்கள். நான் எப்படியாவது வெளியே வந்து விடுகிறேன்" என்றேன்.

"விடாக் கண்டரே! நல்லயோசனை தான். ஆனால் கத்தோலிக்கர்கள் அல்லவா என்னைப் பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள்?" என்று ஏங்கினார் லீபோல்டு.

இந்தச் சமயம் காவலாளர்கள் என்னைச் சற்று முறைத்துப் பார்த்தார்கள். தெருவில் ஓரே ஆரவாரமாயிருந்தது.

"அப்படியானால் ஒன்று செய்யுங்கள். தங்களுக்கு இருபது வயதில் ஒரு பையன் இருக்கிறானாமே? அவன் தலையில் இந்தப் பாரத்தைச் சுமத்திவிடுங்கள். எங்கள் நாட்டில் பிரசித்தி பெற்ற இராமாயண இதிகாசத்தில் தசரத சக்ரவர்த்தி அப்படித்தான் செய்தார்!" என்று சொல்லிக் கொண்டே நழுவினேன்.

"ஆகட்டும்: பார்க்கலாம்!" என்ற மன்னரின் வார்த்தைகள் காதில் விழுந்தன.

## இதய கீதம்

"ஞான சௌந்தரி" என்ற படத்தின் மூலம் தமிழ்ப்பட உலகில் புகழடைந்த சிட்டாடல் கம்பெனியார் "இதய கீதம்" என்ற படத்தைத் தயாரித்து வெளியிட்டிருக்கின்றனர். அது இப்பொழுது சென்னை நகரத்தில் உள்ள நல்ல தியேட்டர்களில் ஒன்றான "காஸினோ" தியேட்டரில் ஓடிக்கொண்டிருக்கிறது.

அரசகுமாரன் ஜீவனின் இதயகீதமாக விளங்குகிறாள் குமாரி தாரா. அரசைக் கைப்பற்றி நாடாள எண்ணும் வஞ்சக மந்திரி, ஜீவனின் இதயகீதமான தாராவை அவன் சகோதரன் பிரதாபனுக்கு மணம் முடிக்க ஏற்பாடு செய்கிறான். இதனால் சகோதரர்களுக்குள் சண்டை ஏற்படுகிறது. நாட்டின் மீது எதிரிகள் படையெடுக்கின்றனர். கடைசியில் மந்திரியின் சூழ்ச்சி அம்பலமாகிறது. வஞ்சக மந்திரியும் அண்ணன் பிரதாபனும் மாளுகின்றனர். தாரா ஜீவனின் இதயகீதமாகி விடுகிறாள்.

கதையில் கத்திச் சண்டைகளும் காதல் கட்டங்களும் நடனக் காட்சிகளும் ஏராளமாக இருக்கின்றன. வீரதீர சம்பவங்கள் நிகழும் கோட்டை கொத்தளங்கள் முதலிய காட்சி ஜோடனைகள் அபாரம்.

கதாநாயகி தாராவாக டி. ஆர். ராஜகுமாரியும், ஜீவனாக டி. ஆர். மகாலிங்கமும், பிரதாபனாக பி. எஸ். வீரப்பாவும், ஜீவனின் தோழனாகக் காமெடியன் கே. சாரங்கபாணியும் நன்கு நடித்திருக்கின்றனர்.

படத்தின் பல இடங்களில் டைரக்டர் ஸ்ரீ ஜோஸப் தளியத் தம்முடைய திறமையைக் காண்பித்துச் சோபிக்கச் செய்திருக்கிறார்.

# அகில உலகச் சிறுகதைப் போட்டி

★ ★ ★

- இருபத்தொரு தேசங்களைச் சேர்ந்த பிரசித்தமான பத்திரிகைகள் ஒத்துழைத்து அகில உலகச் சிறு கதைப் போட்டி ஒன்று நடத்துகிறார்கள்.
- இந்த முயற்சியை ஆரம்பித்த பத்திரிகை நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன்.
- இந்தியா தேசத்தில் மேற்படி சிறு கதைப் போட்டியை நடத்தும் பொறுப்பைப் புது டெல்லி "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது.
- இந்தியாவின் முக்கியமான பதினொரு பாஷைகளிலாவது ஆங்கிலத்திலாவது மேற்படி போட்டிக்குச் சிறுகதை எழுதலாம்.
- இந்தியாவின் முக்கிய பாஷைகளில் தமிழ் மொழி ஒன்று என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. ஆகையால் தமிழ் எழுத்தாளர்கள் இந்த அகில உலகச் சிறு கதைப் போட்டியில் கலந்துகொள்ளலாம்.
- இந்தியா தேசத்தில் எழுதப்படும் கதைகளில் சிறந்த எட்டு கதைகளுக்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை மொத்தம் ரூ. 6,250 பரிசு அளிக்கிறது. இதில் முதல் பரிசு ரூ. 1,500.
- அகில உலகச் சிறுகதைப் போட்டிக்கு ஒவ்வொரு நாட்டிலிருந்தும் இரண்டு அல்லது மூன்று கதைகள் பொறுக்கி அனுப்பப்படும். இப்படி மொத்தம் சேரும் 52 கதைகளில் எல்லாவற்றிலும் சிறந்த கதைக்கு "நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன்" பத்திரிகை ஐயாயிரம் டாலர் (ரூ. 22,250) பரிசு அளிக்கும்.
- மேற்படி அகில உலகச் சிறு கதைப் போட்டிக்குத் தமிழ் நாட்டிலிருந்து கதைகளைச் சேகரிக்கும் பொறுப்பைக் "கல்கி" பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது.
- சிறு கதைகள் சுமார் மூவாயிரம் வார்த்தைகள் அடங்கியதாக இருப்பது நலம். நாலாயிரம் வார்த்தைகளுக்கு மேலே போகக் கூடாது.
- 1950-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 30-ந் தேதிக்குள் மேற்படி சிறுகதைப் போட்டிக்குக் கதைகள் அனுப்பப்பட வேண்டும்.
- போட்டிக்கு அனுப்பும் கதைகள் சொந்தக் கற்பனையென்று கதை ஆசிரியரின் உறுதி மொழி சேர்க்கப்படவேண்டும்.
- கதையின் விஷயம் எதைப்பற்றி வேண்டுமானாலும் இருக்கலாம். காதல், குரோதம், நன்றி, வாஞ்சை, தேசபக்தி, தியாகம், லோபம், துரோகம், கலியாணம், மரணம்,— ஆகிய எந்த விஷயமானாலும் சரி; உணர்ச்சிப்பெருக்கு, அமைப்புத்திறன், வாழ்க்கைப் பண்பு, நடையின் சிறப்பு, கதையின் ஓட்டம், — ஆகிய சிறுகதையின் அம்சங்களே முக்கியமாகக் கருதப்படும்.
- ஒரே ஆசிரியர் போட்டிக்கு இரண்டு கதைகள் அனுப்பலாம்.
- தமிழ்க் கதைகளை அனுப்ப வேண்டிய விலாசம்:—ஆசிரியர், "கல்கி", கீழ்ப்பாக்கம், சென்னை.
- தயவு செய்து உறையின் மேல் "அகில உலகச் சிறுகதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டுகிறோம்.
- பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுப்பதற்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி தகுந்த நீதிபதிகளை நியமனம் செய்வார்.
- மேற்படி போட்டிக்காக வரும் தமிழ்க் கதைகளை ஸ்ரீ தேவதாஸ் காந்தி நியமிக்கும் நீதிபதிகள் பரிசீலனை செய்து அவற்றில் சிறந்த நாலு கதைகளைத் தேர்ந்தெடுத்து மத்திய பரிசீலனைக் கமிட்டிக்கு அனுப்பி வைப்பார்கள். இந்த நாலு கதைகளுக்கும் "கல்கி" நிர்வாகிகள் ஒவ்வொன்றுக்கு ரூ. 250 வீதம் பரிசு அளிப்பார்கள்.
- அகில இந்தியப் போட்டிக்காகப் பஞ்சாயத்தார் தேர்ந்தெடுக்கும் நாலு கதைகளையும் அவற்றின் ஆசிரியர்கள் தாங்களேயோ, பிறரைக் கொண்டோ ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தரவேண்டும்.
- பரிசுக்காகத் தேர்ந்தெடுக்கப்படும் கதைகளைத் தவிர மற்றக் கதைகளில் பிரசுரிப்பதற்குத் தகுதியான கதைகள் "கல்கி"யில் பிரசுரிக்கப்படும். அப்படிப் பிரசுரிக்கப்படும் ஒவ்வொரு கதைக்கும் ரூ. 50 வீதம் சன்மானம் அளிக்கப்படும்.
- பரிசு பெறாத, பிரசுரிக்கப்படாத கதைகளைத் திரும்பப்பெற விரும்புவோர் கையெழுத்துப் பிரதியுடன் போதிய தபால் தலைகள் அனுப்பவேண்டும். திருப்பி அனுப்புவதாக உத்தரவாதம் செய்ய முடியாது.
- இந்தப் போட்டி சம்பந்தமாக ஏற்படும் சந்தேகங்களில் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி கூறும் தீர்ப்பே முடிவானது.

துணிகள்
வெண்மையாக
சலவை செய்யப்
பட்டுள்ளன...





துணிகள்
பிரகாசமாக
சலவை செய்யப்
பட்டுள்ளன...




# ஸன்லைட் சோப்பினால்

தான்

துணிகளை அடித்துத் துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும் சலவை செய்கிறது!

S. 123-60 TM




## 21. அடிப்பாறை

பிரபஞ்சத்தின் ஒரு மிகச் சிறு பாகமே நம்முடைய ஆராய்ச்சிக்குள் அடங்கும். ஒரு வரம்புக்கு மேல் எந்த மேதாவியின் மூளையும் செல்லாது. ஆராயவேண்டிய ரகசியமும் ஆராய்ந்து அறியக் கூடிய அறிவும் அறிவு நிலையை அடைவதற்கு இருக்கும் மூலக் கருவியான நம்முடைய மனமும் எல்லாமே விடுவிக்க முடியாத புதிர்கள். ஆகவே, நாம் செய்யும் ஆராய்ச்சிகள் எல்லாம் புதிருக்குள் புதிராய்த்தான் முடியும்.

எல்லாப் பொருள்களும், உயிர்களும் உயிரற்ற பொருள்களும் சேதனங்களும், அசேதனங்களும் ஒரே மூலப் பொருளின் விகாரங்கள்.

தண்ணீரில் தோன்றும் குமிழிகளும் தண்ணீரும் ஒரே பொருள். தண்ணீரில் தோன்றித் தண்ணீரிலே மிதந்து கொஞ்சம் அசைந்து பிறகு அந்தத் தண்ணீரிலேயே குமிழிகள் மறைந்து லயித்துப் போகின்றன. அந்தக் குமிழிகள் போன்றனவே உயிர்கள். நீரைப் பரம் பொருளாகவும் ஜீவனையும் மற்ற வேறுபட்ட எல்லாப் பொருள்களையும் அந்த நீரில் தோன்றும் குமிழிகளாகவும் வைத்துக் கொள்ளலாம். அனைத்தையும் கடந்த மெய்ப் பொருள் கடவுள். அதுவே சகல உயிர்களும் தோன்றும் கருவிலன். அதிலேயே ஜீவராசிகள் அனைத்தும் லயித்து மறைந்து போகும்.

கடவுள் தனித்து நிற்கும் பொருள். சேதன உயிர்களும் அசேதனப் பொருள்களும் நீரை விட்டுத் தனித்து நிற்க முடியாத குமிழிகளைப் போன்றவை. அவை தனித்து நிற்க முடியாது.

காவேரி ஆற்றின் வெள்ளத்தைப் போன்றது மெய்ப் பொருள். காவேரியினின்று ஒரு கை ஜலம் எடுத்து இதுவே காவேரி என்று எண்ணுதல் போன்றது நம்முடைய ஆணவ மயக்கம்.

சேதனங்களின் வேதாந்த ஆராய்ச்சியெல்லாம், உப்பினால் செய்யப்பட்ட ஒரு பொம்மை உப்புக் கடலில் மூழ்கிக் கடலின் ஆழத்தைப் பார்ப்பது போன்ற முயற்சியே யாகும். நீரில் மூழ்கியவுடன் உப்புப் பிரதிமை கரைந்து போகிறது. பிறகு அது என்ன ஆராய்ச்சி செய்ய முடியும்? ஈசனை அளக்கும் ஜீவன் ஈசனில் மூழ்கியதும் ஈசனோடு ஒன்றாகப் போகிறது. பிறகு அது ஈசனின் ஆழத்தை அளப்பது எப்படி?

மனிதனுடைய தேகம் ஒரு பானை. பானைக்குள் வேகும் அரிசியும் பருப்பும் தண்ணீரும் போன்றன மனிதனுடைய மூளையும் இந்திரியங்களும். அடுப்பின் மேல் பானை கொதிக்கிறது. பானையைத் தொட்டால் சுடும்; சோற்றில் கை வைத்தால் கை வெந்து போகும். பானையிலும் சோற்றிலும் உள்ள சூடு உண்மையில் பானையுடையதுமல்ல; சோற்றினுடையதுமல்ல. கீழே உள்ள அடுப்பின் நெருப்பே இவற்றின் சூடாகிறது. அவ்விதமே பிரம்மம் உயிர்களுக்குள்ளும் அசேதனப் பொருள்களுக்குள்ளும் அவற்றின் குணவிசேஷங்களாக உருவெடுக்கிறது. மூளையும் புலன்களும் செய்யும் வேலையனைத்தும் பிரம்மத்தின் வேலையே. அதுவின்றி அணுவும் அசையாது.

எந்தச் சிறு பொருளைத் தீர ஆராய்ச்சி செய்யப் போனாலும் கடவுள் பேரில் மோதுகிறோம். சேலம் ஜில்லாவில் எங்கே கிணறு வெட்டினாலும் ஒரு ஆழத்துக்கு மேல் பாறைதான். அந்தப் பாறையைப் போலத்தான் பிரம்மமும். எந்தச் சிறு பொருளாயினும் அடியில் வெட்ட முடியாத அந்தப் பாறை நிற்கிறது.

# பாஹுவஷாவின் காதல்

ஆசிரியர்: ஸுதர்சன்

மொழிபெயர்ப்பு: ரா. வீ

## 4. காதலர் தப்பினர்! ஆனால்........




க்ரோவர்களிடையே கல்யாணம் நடப்பதற்கு முன் நீர்க்கரைக்குச் சென்று குடங்களில் நீர் மொண்டு வந்து மணமகளை ஸ்நானம் செய்விப்பது வழக்கம். அம்மாதிரி மங்களக் குடங்கள் கொண்டு வரும்பொழுது தப்பித் தவறிக் கீழே விழுந்து அது உடைந்துவிட்டால் அது மிகவும் அபசகுனமாகக் கருதப்படும். அம்மாதிரி அபசகுனம் போல ஏதாவது அசம்பாவிதங்கள் நேர்ந்துவிட்டால் பற்பல பேராபத்துக்களுக்கு இலக்காக நேரிடும் என்பது அவர்களுடைய ஐதிகம்.

ஆகவே அவர்கள் அம்மாதிரி ஏதாவது அபசகுனங்கள் நேரும் பொழுதெல்லாம், 'இந்த விவாக சம்பந்தம் சரியல்ல, இது நடைபெறவும் பெறாது. இதன் காரணமாகப் பெண்ணின் தந்தை பலவித அவமானங்களுக்கும் ஆபத்துக்களுக்கும் இலக்காக நேரப் போகிறது' என்னும் விஷயத்தை முன் கூட்டியே அசரீரி அறிவிப்பதாகக் கருதி வந்தனர்.

குடம் உடைந்ததைக் கண்ட இளவரசியின் கோபம் எல்லை மீறியது. அவள் பற்களை 'நறநற' வென்று கடித்துக் கொண்டாள். அதைக்கண்ட நியூனஸ் வெலவெலத்துப் போய்விட்டாள். உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரை அவளுடைய உடல் ஒரே ஆட்டமாக ஆடியது. இளவரசியின் இருபது ஆயுதம் தாங்கிய குதிரைப் படை வீரர்களும் இளவரசியின் கட்டளையை எதிர் நோக்கித் தயாராகக் காத்துக் கொண்டிருந்தனர். எகிப்து நாட்டு இளைஞனுக்கோ இந்த விஷயங்கள் எல்லாம் புரியவில்லை. அவன் இங்கும் அங்கும் பார்த்துப் பார்த்து நிலைமையைப் புரிந்து கொள்ள எவ்வளவோ விதமாக முயன்றான். எத்தனை முயன்றும் அவனால் நிலைமையைச் சரிவரப் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆகவே, அவன் அந்தக் காட்சியைக் கண்டு வெகு அசிரத்தையாக நகைத்துக் கொண்டிருந்தான்.

இவர்களுக்கெதிரே ஓடிக் கொண்டிருந்த நீலநதியின் ஆழமான நீர்ப்பெருக்கு, காற்றில் நெளிந்து நெளிந்து கொடுத்துக் கொண்டும், 'சல சல' வென்று சப்தித்துக் கொண்டும் தன் இச்சைப்படி ஓடிக்கொண்டிருந்தது. வானுலக வீதியிலே எண்ணற்ற தாரகை விளக்குகள் 'மினுக், மினுக்' கென்று மினுக்கிக் கொண்டிருந்தன. நீல நதியின் ஆழ்ந்த நீர் மட்டத்திலே, நட்சத்திரங்கள் நிறைந்த நீல வானத்தின் பிரதி பிம்பம் விழுந்து, முத்துக்களும், மாணிக்கங்களும், வைர வைடூரியங்களும் பதித்திருப்பது போன்ற பிரமையை உண்டாக்கிக்கொண்டிருந்தது.

இயற்கையரசி இம்மாதிரி மகா சௌந்தரிய வதியாக விளங்கிய அந்த வேளையிலே, கண்களுக்கெட்டிய தூரத்தில் இருந்த தீபா நகரத்து வீதி விளக்குகளும், வானத்தை முத்தமிட்டுக் கொண்டிருந்த எழில் மிகுந்த மாட மாளிகைகளுக்குள்ளே எரிந்து கொண்டிருந்த விளக்குகளும், 'தக தக' வென்று ஒளிக் கிரணங்களைப் பரப்பிக் கொண்டிருந்தன. அதன் மூலம், சுகபோக வாழ்க்கை நிறைந்து விளங்கிய அந்த மாபெரும் நகரம் இன்னும் தூங்கவில்லை. என்று தெரிந்தது. இன்பகரமான யௌவனக் கேளிக்கைகளிலேதான் இன்னமும் ஈடுபட்டிருக்கிறது என்பதை மாட மாளிகைகளுக்குள்ளிருந்து கண்களைச் சிமிட்டி 'மினுக், மினுக்' கென்று பிரகாசித்துக் கொண்டிருந்த வெளிச்சம் பறைசாற்றித் தெரிவித்துக் கொண்டிருந்தது.

ஆனால் நீலநதிக் கரையிலே நின்று கொண்டிருந்த அந்த ஜனங்களுக்கு இதைப் பற்றியெல்லாம் துளியாவது அக்கறையோ கவலையோ இருந்தால் தானே? நீக்ரோவர்களின் இளவரசி, சிறு பிராயத்திலிருந்து யௌவனப் பிராயத்துக்குக் காலடி எடுத்து வைத்துக் கொண்டிருந்தவளான அடிமைப் பெண் நியூனஸ், எகிப்து நாட்டு இளைஞன்—இம் மூவரும் தங்கள் தங்கள் சிந்தனையில்

லயித்திருந்தனர். அம்மூவருடைய சிந்தனைப் போக்கும் ஒன்றுக்கொன்று சிறிதும் சம்பந்தமற்றவை, முற்றிலும் மாறுபாடு கொண்டவை.

திடீரென்று இளவரசி ஒரு நீண்ட பெருமூச்சுவிட்டாள். அடுத்த கணம் தன் குதிரை வீரர்களின் பக்கம் திரும்பிப் பார்த்தாள். அதைக் கண்டதும் நியூனஸ் இன்னும் கதி கலங்கிவிட்டாள். அவளுடைய மான்விழிகள் மிரண்டு எகிப்து நாட்டு இளைஞனின் பக்கம் திரும்பின. இருவருடைய கண்களும் ஏக காலத்தில் ஒன்றை யொன்று நோக்கின. அந்தப் பெண்ணின் பேசும் விழிகள் அந்த ஒரு கண நேரத்துக்குள் என்னதான் சொல்லிற்றோ, தெரியவில்லை! எகிப்துநாட்டு இளைஞன் ஒருவாறு நிலைமையை ஊகித்தறிந்து கொண்டுவிட்டான். இவ்வளவு நேரமாக எவ்வளவோ மண்டையை உடைத்துக்கொண்டு பார்த்தும் விளங்காமலிருந்த விஷயம் அவனுக்குக் கணப்பொழுதில் விளங்கிவிட்டது. அடுத்த கணமே என்ன செய்வது என்று ஒரு முடிவுக்கும் வந்துவிட்டான். எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே, அவன், தான் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து ஒரே தாவாகத் தாவினான். அடுத்த கணம் நியூனஸை வாரி அணைத்துக் கொண்டு, நீல நதிக்கரையில் நின்றுகொண்டிருந்த படகில் குதித்துவிட்டான்.

குதிரை வீரர்கள் அவனைப் பிடிக்க முன்னேறினர். ஆனால் அவர்களுடைய இளவரசி அதைத் தடுத்து நிறுத்திவிட்டாள். பிறகு உரத்த குரலில், "எகிப்து நாட்டு இளஞ் சிங்கமே! நீயே உன் உயிருக்குச் சத்துரு ஆகாதே! இந்தத் துஷ்டப் பெண் செய்திருக்கும் குற்றம் அற்ப சொற்பமானதல்ல. மிக மிகப் பெரிது. ஆகவே, நீ அவளை என் சிப்பாய்களின் கையில் ஒப்படைத்துவிடு. நான் அவளைத் தீயில் போட்டுப் பொசுக்கிச் சாம்பல் ஆக்கி அவள் செய்த குற்றத்துக்குத் தக்க தண்டனை அளிக்கத் திட்டமிட்டிருக்கிறேன். எவன் ஒருவன் அவளுக்கு உதவி செய்ய முன் வருவானோ, அவன் தன் உயிருக்குத் தானே தீங்கு விளைவித்துக் கொள்பவனாக ஆவான். அதுமட்டும் அல்ல; பருதும் கூட என் தந்தைக்கு வேறு சொல்ல மாட்டான். ஆகவே, ஜாக்கிரதை! அவளை எங்களிடம் ஒப்படைத்துவிடு" என்று கூப்பாடு போட்டாள்.



ஆனால் எகிப்து நாட்டு இளைஞன் இளவரசியின் சொற்களைச் சிறிதும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. கரையோரத்தில் கட்டியிருந்த படகை அவிழ்த்துவிட்டான். அடுத்த கணமே துடுப்பைக் கையில் ஏந்திப் படகைச் செலுத்தவும் தொடங்கினான். படகு ஆடி அசைந்து கொண்டு நீரில் மிதந்து சென்றது. காதலர் இருவரையும் காப்பாற்றும் பொறுப்புத் தனக்குக் கிடைத்ததில் அதற்குத் தான் எத்தனை ஆனந்தம்! அது நீல நதியின் நீரைக் கிழித்துக் கொண்டு மின் வேகத்தில் நீந்திச் செல்லத் தொடங்கியது. அதைக்

கண்ட இளவரசி தொண்டை கொண்ட மட்டில் உரக்கத் தன் சிப்பாய்களைப் பார்த்து, "ஏன் பார்த்துக் கொண்டு சும்மா நிற்கிறீர்கள்? இருவரையும் உங்கள் அம்பைக் கொண்டு துளைத்துத் தள்ளுங்கள்!" என்று மிகவும் கடுமையான குரலில் உத்தரவிட்டான்.

சிப்பாய்கள் அம்புறாத்தூணியி லிருந்த அத்தனை அம்புகளையும் காலி செய்து விட்டனர். ஆனால் எகிப்து நாட்டு இளைஞன் மீதும் நியூனஸ் மீதும் ஒருஅம்பு கூடப் படவில்லை. அவர்கள் தான் படகுக்குள் படுத்துக் கொண்டு விட்டார்களே! அம்பு அவர்கள் மீது எப்படிப் படும்?

அடுத்த சில நிமிஷங்களுக்கெல்லாம் படகு இழுப்பும் வேகமும் அதிகமாயிருந்த நடு ஆற்றில் சென்று விட்டது.

தன் காரியம் கைகூடாமற் போனதைக் கண்ட இளவரசி கோபத்தில் கையைப் பிசைந்தான்; பல்லைக் கடித்தான்; தன்னைத் தானே நொந்து கொண்டான்; தன் சிப்பாய்களையே கடிந்து கொண்டான். அதைத் தவிர அவனால் வேறு என்னதான் செய்ய முடியும்?

## 5. காலனின் வாயில்........

அந்த இளைஞன் வேறு யாரும் இல்லை. பருன் அம்மனின் பொக்கிஷமந்திரியான தல்லத்தின் அருமந்தப் புதல்வன் ரேம்பஸ் என்பவன் தான். தல்லத்துக்கு அவன் ஒரே பிள்ளை. அவன் வாலிபன், வீரன்; அது மட்டும் அல்ல, நல்ல ஆணழகனும் கூட. அவன் எவ்வழியே சென்றாலும், அவ்வழியையே ஆண் பெண் அடங்கலாக அனைவரும் கண்கொட்டாமல் பார்த்தவாறு மெய்ம் மறந்து நின்று விடுவர். அவனுடைய வாள் ஆண்களின் உள்ளத்திலே அச்சத்தையும், புன்னகை பெண்களின் உள்ளத்திலே பலத்த புயலையும் எழுப்பியது என்றால் அவனைப் பற்றி அதிகம் சொல்லுவானேன்?

ரேம்பஸூம் நியூனஸூம் ஒருவரையொருவர் காதலித்தனர்; மனமார விரும்பினர். படைத்த பிரம்மனும் சரியான சந்தர்ப்பம் பார்த்து அவ்விருவரையும் அன்புப் பிணைப்பிலே பிணைத்து ஒன்று சேர்த்து விடவே, அவர்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு ஓர் அளவில்லை. இருவரும் பேரானந்தத்தில் மூழ்கி ஆனந்த சாகரத்தில் மிதக்கலாயினர்.



வயது முதிர்ந்த கிழவனான தல்லத்தும் அந்தக் காதலர் ஜோடியைக் கண்டு களிப்புற்றான். ஆனால் 'நியூனஸ் நீக்ரோவர்களின் சுல்தானான ஷம்லார்க்கின் அடிமையாயிற்றே! அவன் இது விஷயமாகப் பருனிடம் பிராது கொடுத்தால், பருனின் ஒற்றர்கள் ஊர் முழுவதும் ஒரு சந்து-பொந்து, மூலை-முடுக்கு, இண்டு-இடுக்கு விடாமல் சல்லடை போட்டுச் சலித்துத் தேடத் தொடங்கி விடுவார்களே! என்ன செய்வது?' என்ற எண்ணம் சில சமயம் அவனுடைய உள்ளத்திலே இடம் பெறும். அடுத்த கணம் அவனுடைய ஆனந்தமும் களிப்பும் இருந்த இடம் தெரியாமல் பறந்துவிடும். இதயத்தின் ஆழத்தில் இனந்தெரியாத பீதி தலைதூக்கும். அவனுடைய அந்த பயம் ஆதாரமற்றதல்லவே?

கடைசியில் ஒரு நாள் அவன் பயந்தபடியேதான் ஆயிற்று. நீக்ரோவர்களுக்கு இயல்பான கோபத்துடன் உதட்டைக் கடித்துக்கொண்டு ஷம்லார்க் ஒரு நாள் பருனிடம் வந்து சேர்ந்தான். "பருன்! உன்னுடைய அரசாங்கத்து ஆசாமிகளில் யாரோ ஒருவன் என் அடிமைப் பெண் ஒருத்தியைக் களவாடித் தூக்கிக்கொண்டு ஓடி வந்து விட்டான். அதைப் பற்றி உன்னிடம் புகார் செய்வதற்காகவே இப்பொழுது நான் இங்கே வந்திருக்கிறேன். என் அடிமையை என்னிடம் சேர்ப்பிக்க வேண்டியது உன் கடமை. ஆகவே அதற்கான ஏற்பாடு செய்!" என்று மிகக் கடுமையான குரலில் சொன்னான்.

அதைக் கேட்டது தான் தாமதம்; பருன் தன் தங்கச் செங்கோலைக் கையில் எடுத்துக் கொண்டு எழுந்து நின்று, "எகிப்து நாட்டு மண்ணில் எறும்பு கூடப் புக முடியாத இடங்களாக இருந்தாலும் சரி, தேடித் துருவிப் பார்த்துக் நியூனஸை ஷம்லார்க்கின் கையில் ஒப்படைத்துவிட வேண்டும். இது பருனின் அரச ஆக்ஞை. எகிப்து நாட்டு மக்கள் அனைவரும் இந்த ஆக்ஞையைச் சிரமேற் கொண்டு இக்காரியத்தில் இறங்க வேண்டும்!" என்று மிகவும் கடுமையாக உத்திரவிட்டான்.

ஆனால் நியூனஸ் எங்கிருந்தாள்? பொக்கிஷ மாளிகையை ஒட்டினாற்போலிருந்த பொக்கிஷ மந்திரி தல்லத்தின் மாளிகையில் அல்லவா இருந்தாள்! தல்லத்தின் மாளிகையில் நியூனஸ் இருப்பாள். தல்லத் தைரியமாக அவளுக்கு இடம் அளித்து அபயமும் அளித்திருப்பான் என்ற சந்தேகம் எந்த ஒற்றனின் உள்ளத்திலும் எழ நியாயம் இல்லை அல்லவா?

இன்ப போதையூட்டும் இரவு வேளை. வானத்திலே சந்திரனும் நட்சத்திரங்களும் சேர்ந்து ஒரு சபை கூட்டியிருந்தன. ஆமாம், அந்தச் சபை அப்பொழுது எதற்காகக் கூடியிருந்தது? ஒருவேளை பருனின் உத்திரவைப் பற்றிப் பேசுவதற்காக இருக்குமோ? சேச்சே! அவர்களுக்கும் பருனுடைய உத்தரவுக்கும் என்ன சம்பந்தம்? அவர்கள் எதற்காக அந்த அநாவசியமான வீண் பேச்சில் எல்லாம் இறங்கப் போகிறார்கள்? காதல் வளர்வதற்குக் காரணபூதர்களான அவர்கள் காதலைப்பற்றியும் காதலர் உலகத்தைப் பற்றியும்தான் பேசிக் கொண்டிருப்பார்கள்! அப்படியானால் அவர்களிடையே நியூனஸின் பெயரும் அடி பட்டிருக்குமோ? சந்தேகம் ஏன்? கட்டாயம் பட்டிருக்கும். ஏனெனில் எகிப்து நாட்டு எழிலரசிகளில் முதன்மை ஸ்தானம் பெற்றவள் அல்லவா அவள்?

பால் போலக் காய்ந்து கொண்டிருந்த அந்த நில விரவிலே எழிலரசிகளுக்கெல்லாம் எழிலரசியாக விளங்கிய நியூனஸ் பொக்கிஷ மந்திரி தல்லத்தின் மாளிகையில் உள்ள நந்தவனத்தில் ரேம்பஸுடன் கூட மிகவும் ஒயிலாக உட்கார்ந்திருந்தாள். அவளுடைய மலர்க் கரங்களை மென்மலர்கள் அலங்கரித்துக் கொண்டிருந்தன. அவள் தன் கையிலிருந்த அந்தப் பூ விதழ்களுடன் விளையாடிக் கொண்டிருந்தாள். ரேம்பஸ் சில சமயம் அவளுடைய கையிலிருந்த மென் மலர்களைப் பார்ப்பான்; சில சமயம் நியூனஸினுடைய முகமலரைப் பார்ப்பான். பிறகு தலையைக் குனிந்து கொண்டு தன் நினைவு மறந்து ஆழ்ந்த சிந்தனையில் லயித்து விடுவான். ஒருவேளை அவன் மென் மலர்கள் அழகு வாய்ந்தவையா அல்லது நியூனஸ் அதிக அழகு வாய்ந்தவளா என்பதைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தானோ, என்னவோ! எத்தனை நேரம் அவன் அந்த 'மலர்—அழகி'ப் பிரச்னையில் தன் சிந்தனையைச் செலவிட்டிருந்தானோ, தெரியாது. திடீரென்று நியூனஸ் மிகவும் மிருதுவான குரலில், "ரேம்பஸ்!" என்று அழைத்தாள். அவளுடைய அந்தக் குரலில்தான் என்ன கனிவு! என்ன குழைவு! அதில் மதோன்மத்தமான யௌவனத்தின் வாடைதான் எவ்வளவு சுகமாக வீசிற்று!

ரேம்பஸ் அன்பின் அந்த இனிமையான அழைப்பைத் தன் அன்புக் காதுகள் கொண்டு கேட்டான். அவ்வளவுதான்! அடுத்த கணம் ஆனந்தப் பரவசனாகி மெய்ம்மறந்து ஆடத்தொடங்கிவிட்டான். உடனே அவனுக்கு மின்னொளி போன்று தன் கேள்விக்குச் சரியானபதில் கிடைத்துவிட்டது. மலர் என்பது நிறமும் நறுமணமும் வாய்க்கப் பெற்றது. ஆனால்

நியூனஸோ நிறம், நறுமணம், நற்கீதம் இம் மூன்றும் ஒருங்கே வாய்க்கப் பெற்றவள்.

ஆகவே, நியூனஸ் மலரைக் காட்டிலும் மேன்மையுற்று விட்டாள்.

ரேம்பஸ் நியூனஸைப் பார்த்தான். அவனுடைய அந்தப் பார்வையில் தான் என்ன அன்பு! என்ன ஆசை!

ஆண்களின் இதயத்தில் எழும் எண்ணங்களை எவ்வளவு வேகமாகப் பெண்களின் கண்கள் புரிந்து கொள்ளுகின்றனவோ, அவ்வளவு வேகமாக மற்றவர்களால் புரிந்து கொள்ள முடிவதில்லை. நியூனஸ் எழுந்து நின்றாள். அடுத்த கணம் அவள் வெள்ளைப் புறு போன்ற மென்மையும் அழகும் வாய்ந்த தன் அன்பான வெற்றுப் பாதங்களை மலர்ப் பாத்திகளில் வைத்து வெகு ஒயிலாக நடந்து சென்றாள். சிறிது நேரத்துக்குள் அவள் ரேம்பஸை விட்டு வெகு தூரம் சென்று விட்டாள். ரேம்பஸ் எகிப்து நாட்டில் உள்ள எத்தனையோ பெரிய பெரிய நடனராணிகளின் நடனங்களை யெல்லாம் பார்த்திருக்கிறான். ஆனால் அன்று அவன் தன் இதய ராணியான நியூனஸின் நடையிலே கண்ட மனமோகன மந்திர சக்தியையும் கலையழகையும் வேறு யாரிடமும் கண்டதும் இல்லை; கேட்டதும் இல்லை.

ஒருவனுடைய இதயராணி, எழிலைப் பொழிந்து கொண்டிருக்கும் இன்ப நிலவிலே, பூத்துக் குலுங்கும் பூச்செடிகளுக்கு மத்தியிலே, தானும் ஒரு பூங்கொடியாக நின்று கொண்டு, தன் காதலனைக் கடைக் கண்ணால் கண்டு களி நகை புரிகிறாள். அப்பொழுது அக்கம் பக்கத்திலே அந்நியன் யாரும் இல்லை. நாற்புறமும் நல்ல அமைதி நிலவியிருக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். இன்பக் கேளிக்கைகளுக் கேற்ற அந்த மனோரம்யமான வேளையிலே காதலனுடைய மனதில் என்ன என்ன வெல்லாம் இன்பக் கற்பனைகள் பெருக்கெடுத்து ஓடும் என்பதைக் காதலில் கட்டுண்ட ஒரு ஆத்மாவினால் மட்டும்தான் அறிந்து கொள்ள முடியுமே யொழிய மற்றவர்களால் அறிந்து கொள்ள முடியாது; ஆமாம், கட்டாயம் முடியவே முடியாது.

ரேம்பஸ் அவளருகே நடந்து சென்றான். நியூனஸைத் தன் இரு கைகளாலும் கெட்டியாகப் பிடித்துத் தழுவிக் கொள்ள வேண்டும் என்று அவனுடைய உள்ளம் துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தது. ஆகவே அவன் தன் நடையைச் சிறிது வேகமாக்கினான். ஆனால் நியூனஸ் ரேம்பஸினுடைய உள்ளத்தை ரேம்பஸின் கண்களிலேயே படித்துப் புரிந்து கொண்டு விட்டாள். ஆகவே சஞ்சலம் வாய்ந்த மான்குட்டி போலத் துள்ளிக் குதித்துக் கொண்டு ஓடினாள். அடுத்த கணம் அருகிலே இருந்த பொக்கிஷ மாளிகையின் சுவரின்மேல் ஒரே தாவாகத் தாவி ஏறிவிட்டாள்.

அட கடவுளே! ரேம்பஸினுடைய ரத்தம் அப்படியே சுண்டி உலர்ந்துவிட்டது. இன்னும் ஒரு அடி முன்னால் எடுத்து வைத்துவிட்டால் போதும், நியூனஸை மரணத்தின் பிடியிலிருந்து மீட்பது மனித சக்திக்கு அப்பாற்பட்ட விஷயமாகிவிடும். அப்புறம் அவள் எமன் வாயில் போனவள் போனவள்தான்.

ரேம்பஸ் தன் மூச்சைப் பிடித்துக் கொண்டு மிக மிக மெதுவான குரலில், "நியூனஸ்! கடவுளுக்காகக் கீழே இறங்கிவிடு! நீ எங்கே ஏறி விட்டாய் என்பது உனக்குத் தெரியாது. உனக்குத் தெரிந்திருந்தால் இப்படிச் செய்திருக்க மாட்டாய்! அந்தப் பக்கம் நீ குதித்து விட்டால் என்ன ஆபத்து நேரும், தெரியுமா?—நியூனஸ், நான் சொல்லுவதைக் கேள். பெண்களுக்கு இயல்பான பிடிவாதம் பிடிக்காதே! உன்னுடைய இந்த அறியாமை உன்னையும் என்னையும் – நம் இருவரையுமே மாபெரும் சங்கடத்துக்கு உள்ளாக்கிவிடும். அப்புறம் நாம் பிழைப்பது என்பது புனர் ஜன்மம்தான். உனக்குத் தெரியாது, நியூனஸ்! உனக்குத் தெரியாது! நான் சொல்வதைக் கேள்! கீழே இறங்கிவிடு!" என்று மிகவும் மன்றாடினான்.

ஆனால் ரேம்பஸின் அந்த வார்த்தைகளைக் நியூனஸ் காதில் போட்டுக்கொண்டால்தானே? அவள் அதைச் சிறிதும் பொருட்படுத்தாமல் 'திடும்' மென்று பொக்கிஷ மாளிகைக்குள்ளே குதித்து விட்டாள்.

ரேம்பஸ் தன் கண்களால் காண விரும்பாததைக் கண்டான். அவன் ஒரு கணம் யோசித்தான். அடுத்த கணமே அவன், 'மனதுக்குப் பிடித்தவர்கள் பக்கத்திலிருந்தால் தான் மான்வழியோ மீன்வழியோ ஒரு ஆனந்தம் இருக்கிறது. வாழ்ந்தால் நியூனஸுடன் வாழ வேண்டும். இல்லாவிட்டால் நியூனஸுடன் கூடவே உயிரை விடவேண்டும்' என்ற முடிவுக்கு வந்து விட்டான். அந்த முடிவுக்குவந்த அடுத்த நிமிஷமே அவன் பித்தனைப்போல வெகு வேகமாகத் தலை தெறிக்க ஓடிப் பொக்கிஷ சாலையின் சுவர்மீது ஏறிக் கண்மூடிக் கண் திறக்கும் நேரத்தில் காலனின் வாயில் குதித்து விட்டான். (தொடரும்)




# மூன்று சகோதரிகள்

## 5. சகோதரர் மீண்டனர்

சற்று நேரம் கழித்து பாரிஜாதம் பேசும் பறவையைப் பார்த்து, "அன்பு மிக்க பறவையே, மஞ்சன் நீர் இருக்குமிடத்தை எனக்குக் காட்டுவாயா?" என்று கேட்டாள்.

பேசும் பறவை உடனே மஞ்சன் நீர் இருக்குமிடத்தை அவளுக்குக் காட்டிற்று. பாரிஜாதம் அங்கு சென்று தன்னிடமிருந்த வெள்ளி ஜாடி-நிறைய மஞ்சன் நீரை நிரப்பிக் கொண்டாள். உடனே மீண்டும் பேசும் பறவையிடம் வந்து, "பாடும் மரம் எங்கிருக்கிறது?" என்று கேட்டாள். அருகில் உள்ள ஒரு காட்டில் அது இருப்பதாகப் பறவை கூறிற்று. பாரிஜாதம் அந்தக் காட்டுக்குச் சென்றாள். அங்கு பாடும் மரத்தைக் கண்டாள். அது மிகவும் பெரியதாக இருந்தது. அவ்வளவு பெரிய மரத்தை எப்படிப் பெயர்த்து எடுத்துச் செல்வது? ஆகையால் அவள் பேசும் பறவையிடம் யோசனை கேட்டாள். பறவை சொல்லிற்று:—"அம்மணி, அம்மரத்தில் ஒரு கிளையை ஒடித்து எடுத்துக் கொள். அந்தக் கிளையை உன் வீட்டில் கொண்டு போய் கட்டால் அது வெகு சீக்கிரத்தில் பெரிய மரமாகிவிடும்."

அவ்வாறே பாரிஜாதம் பாடும் மரத்தின் கிளை ஒன்றை எடுத்துக் கொண்டு பறவையிடம் கூறினாள்: "பட்சியே! நான் விரும்பிய வஸ்துக்களெல்லாம் கிடைத்துவிட்டன. ஆயினும் எனக்குத் திருப்தி ஏற்படவில்லை. இங்கே கல்லாய்ச் சபிக்கப்பட்டிருப்பவர்களில் என் இரு சகோதரர்களும் இருக்கிறார்கள். அவர்கள் மறுபடியும் உயிர் பெற்றெழ வழி கூற மாட்டாயா?"

முதலில் பேசும் பறவை பாரிஜாதத்திற்குப் பதில் கூறவில்லை. சற்று நேரம் யோசித்துவிட்டுப் பிறகு அது கூறியதாவது:—"நீ விரும்புவதை நிறைவேற்றுவது மிகவும் கடினம். என்றாலும், அவ்வாறே நான் செய்யத் தயாராயிருக்கிறேன். நீ சுற்றிப் பார்த்தாயானால் உன் அருகில் ஒரு குடம் இருப்பதைக் காண்பாய். குடத்திலுள்ள நீரை நீ காணும் கருப்புக் கற்கள் மீது தெளித்தாயானால் அவை மறுபடியும் சுயரூபம் பெற்று எழும்."

பறவையின் பேச்சைக் கேட்ட பாரிஜாதம், அதையும், அது குறிப்பிட்ட குடம், பாடும் மரம், மஞ்சன் நீர் யாவற்றையும் எடுத்துக்கொண்டு மலையுச்சியை விட்டுக் கீழே இறங்கினாள். இறங்குகையில் குடத்திலிருந்த மந்திர

ஜலத்தை எடுத்துக் கருங் கற்கள் மீது தெளித்துக் கொண்டே சென்றான். ஒவ்வொரு கல்லும் ஒரு மனிதனாக மாறியது. அதைக் கண்டு பாரிஜாதம் ஆச்சரியமடைந்தான். குதிரை ரூபத்திலிருந்த கற்கள் யாவும் உயிருள்ள குதிரைகளாக மாறின. உயிர் பெற்றெழுந்த மனிதக் கூட்டத்திலிருந்து தனது இரு சகோதரர்களும் தன்னை நோக்கி வருவதைக் கண்டு பாரிஜாதம் பேரானந்தம் அடைந்தான்.

உயிர் பெற்ற இரு இளவரசர்களும் தங்களுடைய அருமைச் சகோதரியைக் கண்டவுடன் ஓடி அவனைத் தழுவிக் கொண்டனர். “இவ்வளவு காலமாக இங்கே என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?” என்று பாரிஜாதம் கேட்டான். அதற்கு, “நாங்கள் தூங்கிக் கொண்டிருந்தோம்” என்று இருவரும் பதிலளித்தனர். உடனே பாரிஜாதம், “நான் இங்கு வந்திராவிட்டால் இன்னும் நீங்கள் தூங்கிக் கொண்டுதான் இருந்திருப்பீர்கள்!” என்று சிரித்துக் கொண்டே கூறினான். இந்தச் சம்பாஷணைக்குப் பிறகு பாரிஜாதம் தனது அநுபவங்களைச் சகோதரர்களுக்கு எடுத்துரைத்தான். தான் ஆபத்திற்குள்ளாகாமல் தப்புவதற்குச் செய்த யுக்தி, பேசும் பறவையைக் கைப்பற்றிய விதம், அதன் உதவியால் மற்ற இரு அதிசய வஸ்துக்களை அடைந்த முறை - எல்லாவற்றையும் சகோதரர்களுக்கு விரிவாகக் கூறினான்.



பஹ்மானும் பர்விஸூம் தங்களுக்கு அவன் செய்த உபகாரத்திற்கும் காட்டிய தீரத்திற்கும் பன்முறை நன்றி செலுத்தினார்கள். பாரிஜாதம் பெற்ற மந்திர நீரின் உதவியால் உயிர் பெற்றவர்கள் அவனைப் பார்த்துப் பொறாமைப் படவில்லை. தங்களைக் காப்பாற்றியதற்காக, ஆயுளுள்ள மட்டும் அவனுடைய அடிமைகளாக உழைப்பதாக வாக்களித்தார்கள். தன்னை எல்லாரும் பாராட்டுவது கேட்டுப் பரவசமடைந்த பாரிஜாதம் அவர்களுக்குப் பதில் கூறினான். “நண்பர்களே! நீங்கள் யாவரும் சுதந்திரமாக உங்கள் வீட்டுக்குப் போய்ச் சேரலாம். என் இரு சகோதரர்களை நான் திரும்பப் பெற்றதே எனக்குப் போதும். உங்கள் அன்பிற்கு வந்தனம். நீங்கள் உடனே புறப்பட்டு உங்கள் ஊருக்குச் சென்று உறவினர்களைக் கண்டு களியுங்கள்.”

இந்த நற்செய்தியைக் கேட்ட அவர்கள் ஆனந்தம் அடைந்தனர். பாரிஜாதத்துடன் ஊருக்குப் புறப்பட்டார்கள். பாரிஜாதம் குதிரைமீது ஏறி முன் செல்ல அவனுடைய இரு சகோதரர்களும் மற்றவர்களும் மலைப்பிரதேசத்தைவிட்டு குதூகலமாகப் பின்தொடர்ந்து சென்றனர். ஒவ்வொருவரும் தங்கள் வீட்டிற்குச் செல்லும் வழி வந்தவுடன் பிரிந்து சென்றனர். இவ்வாறாக, பிரயாணம் செய்தவர்கள் எண்ணிக்கை குறைந்து, கடைசியில் பாரிஜாதமும் அவனுடைய இரு சகோதரர்களும் தான் மிஞ்சினார்கள். கடைசியில் அவர்கள் தங்கள் வீட்டிற்கு வந்து சேர்ந்தவுடன் அவர்களுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை.

இளவரசர்களையும் இளவரசியையும் அவரவர்களுடைய வேலையாட்கள் உற்சாகமாக வரவேற்றார்கள். வரவேற்பு வைபவம் முடிவடைந்ததும் தோட்

டத்தில் ஒரு கூட்டில் பாரிஜாதம் பேசும் பறவையை அடைத்தான். அதன் குரல் கேட்டு மற்ற குயில் முதலிய பல அருமையான குரல் வாய்ந்த பறவைகள் அங்கு கூட்டம் கூட்டமாக வரத் தொடங்கின.

பாடும் மரத்தின் கிளையை ஒரு பூந் தொட்டியில் நட்டான். அது சில நாட்களில் பெரிய மரமாக மாறி அதன் ஒவ்வொரு இலையும் பாட ஆரம்பித்தது. பிறகு சலவைக் கல்லால் ஒரு பெரிய தொட்டி அமைத்து, அதில் தான் கொணர்ந்த மஞ்சள் நீரை ஊற்றினாள். அது தொட்டி நிரம்பிப் பெருகினாலும் பொங்கி வழியவில்லை. அதிலிருந்து கிளம்பிய குமிழிகள் இருபது அடி உயரம் எழும்பினாலும் ஒரு சொட்டு நீர் கூடக் கீழே சிந்தாமல் தொட்டியிலேயே விழுந்தது.

இந்த அதிசயங்களைப் பற்றிக் கேட்ட ஜனங்கள் ஏராளமாக அவற்றைப் பார்த்துக் களித்தனர். நாளுக்கு நாள் கூட்டம் அதிகரித்துக் கொண்டே வந்தது.

அதிசயப் பொருள்களுடன் திரும்பி வந்த சில நாட்களுக்குப் பிறகு, பஹ்மானும் பர்விஸூம் வெகு தூரத்துக் கப்பால் உள்ள ஒரு காட்டில் வேட்டையாடச் சென்றனர். வேட்டையில் ஈடுபட்டுக் களித்துக் கொண்டிருக்கையில் அதே காட்டிற்குப் பாரசீக சுல்தானும் வேட்டையாட வந்தான். சுல்தானைப் பார்த்தவுடன் இளவரசர்கள் அந்த இடத்தை விட்டு வெளியேற முயற்சித்தனர். ஆனால் அதற்குள் சுல்தான் அவர்களருகில் வந்து விட்டான். உடனே இளவரசர்கள் குதிரையை விட்டிறங்கி சுல்தானை வணங்கினார்கள்.

தன் முன் தலை வணங்கி நிற்கும் இரு இளைஞர்களையும் பார்த்து சுல்தான் பிரமித்துப் போனான். அவர்களுடைய வசீகரம் மிக்க அழகிய முகத்தோற்றத்தையும், மரியாதையான சுபாவத்தையுங் கண்டு 'அவர்கள் யார்? எந்த ஊர்?' என்று விசாரித்தான்.

"அரசே, தங்களிடம் நந்தவனத் தலைவராயிருந்த பிரபுவின் குமாரர்கள் தான் நாங்கள்!" என்றான் பஹ்மான்.

இனிய குரலில் இளவரசன் கூறிய பதிலைக் கேட்டு சுல்தான் மகிழ்ச்சியடைந்தான். அவர்கள் வேட்டையாடுவதில் பிரியமுள்ளவர்களாயிருந்ததால் தன்னுடன் சேர்ந்து வேட்டையாட வரும்படி அவர்களை அழைத்தான்.

இளவரசர்கள் சுல்தானுடைய அழைப்பை ஏற்றுக் கொண்டு வேட்டைக்குக் கிளம்பினர். அவ்விருவரும் மிருகங்களைத் துரத்தி மடக்கும் சாமர்த்தியத்தைக் கண்டு சுல்தான் பிரமிப்படைந்தான். மிக ஆபத்தான மிருகங்களைத் துரத்த அவர்கள் புறப்பட விருந்த சமயம், சுல்தான் அவர்களைத் தன்னுடன் பேசிக் கொண்டிருக்கும்படி கூப்பிட்டான்.

அவர்கள் தன்முன் வந்தவுடன் சுல்தான் கூறினான்: "இளைஞர்களே, உங்களுடைய சாமர்த்தியத்தையும் தீரத்தையும் மெச்சினேன். நீங்கள் மிகவும் அடக்கமானவர்களாகவும், மரியாதை தெரிந்தவர்களாகவும் இருப்பது எனக்கு அளவில்லாத ஆனந்தத்தை அளிக்கிறது. நீங்கள் இருவரும் என்னுடன் என் அரண்மனைக்கு வந்தால் எனக்கு மிகுந்த திருப்தியாக இருக்கும்."




முதலில் இளவரசர்கள் தங்கள் வீட்டில் அவசர வேலையிருப்பதால் சுல்தானின் அழைப்பை ஏற்றுக்கொள்ள முடியவில்லை என்று சொல்லிப் பார்த்தார்கள். "அப்படி என்ன அவசர வேலை?" என்று சுல்தான் வற்புறுத்திக் கேட்கவே, இளவரசன் பஹ்மான் பதில் கூறி

னான்: "எங்களுக்கு ஒரு தங்கை இருக்கிறாள். நாங்கள் அன்னியர் வீட்டிற்கு விருந்தினராகச் செல்வதென்றால் அவளுடைய அனுமதி பெறாமல் செல்லுவதில்லை."

அவர்கள் தங்கள் சகோதரியிடம் வைத்துள்ள அன்பைப் பாராட்டி விட்டுச் சுல்தான், "இளைஞர்களே, அப்படியானால் உங்கள் சகோதரியின் விருப்பத்தை அறிந்து கொண்டு நாளைக்கு இதே இடத்தில் என்னைச் சந்தித்துப் பதில் கூறுங்கள்" என்று கூறினான். உடனே சுல்தானிடம் விடை பெற்றுக்கொண்டு இருவரும் தங்கள் வீட்டிற்குச் சென்றார்கள். ஆனால் பாரிஜாதத்திடம் தாங்கள் சுல்தானைச் சந்தித்தது பற்றிப் பேச மறந்து விட்டார்கள். அடுத்த நாள் சுல்தானைச் சந்திக்கும்போதுதான் சுல்தான் தங்களை அழைத்தது அவர்களுக்கு ஞாபகம் வந்தது. தங்களை மன்னிக்கும்படி சுல்தானை வேண்டிக் கொண்டதுடன், "நாளை நிச்சயமாகக் கேட்டுக் கொண்டு வருகிறோம்" என்றார்கள்.

மறுநாளும் அதைப் பற்றித் தங்கள் தங்கையிடம் கூற மறந்து விட்டனர். அன்று சுல்தானைச் சந்தித்த பொழுதும் தங்கள் தவறை மன்னிக்கும்படி மறுபடியும் கேட்டுக் கொண்டனர்.

(தொடரும்)



சென்ற வாரப் புதிருக்கு விடை :

# அவர் கவலை!



இரவு மணி எட்டு இருக்கும். அந்த ரஸ்தாவில் ஒரு கார் கனவேகமாகப் போய்க் கொண்டிருந்தது. கார் ரஸ்தாவின் கோடிக்குச் சென்று மறைவதற்குள் ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒரு விநாடிக்குள் தம் மோட்டார் சைக்கிளில் ஏறிக் கொண்டு ராம பாணம் மாதிரி அந்தக் காரைத் தொடர்ந்தார்.

சற்று நேரத்துக்கெல்லாம் இன்ஸ்பெக்டர் காருக்குப் பக்கவாட்டில் தம் மோட்டார் சைக்கிளை விட்டுக் கொண்டு போய், "நிறுத்து ஐயா, மோட்டாரை!" என்று அதட்டிக் கூவினார்.

கார் நின்று விட்டது. காரை ஓட்டி வந்தவர் காரிலிருந்து கீழே இறங்கி வந்து பரபரப்புடன் காரின் பின் பக்கம் பார்த்தார். சற்று நேரம் திகைத்து நின்று விட்டார்.

இன்ஸ்பெக்டர் அவரை ஏளனமாகப் பார்த்து, "என்ன, ஸார்! அப்படியே பிரமித்துப்போய் விட்டீர்களே! உங்களுடைய தவறு இப்பொழுதுதான் உங்களுக்குப் புரிந்ததா?" என்று மிகவும் கோபத்தோடு கேட்டார்.

"எதை என் தவறு என்று சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டார் காரின் சொந்தக்காரர்.

"ஓகோ! இது வேறேயா? கார் ஓட்டுகிறீரே, பின்னால் சிவப்பு விளக்கு இல்லாமல் ஓட்டக் கூடாது என்று உமக்குத் தெரியாதா?" என்று கோபித்தார் இன்ஸ்பெக்டர்.

"அதைச் சொல்லுகிறீர்களா? பின் விளக்கைப் பற்றி நான் கவலைப்படவேயில்லை. இதோடு மாட்டி இழுத்து வந்த 'டிரெயிலர்' வண்டி எங்கே போய்விட்டது என்றுதான் அப்பொழுதிலிருந்து யோசிக்கிறேன்!" என்றார் காரின் சொந்தக்காரர்.

— விஜயம்.



# சாரதாவின் கடிதம்

எம். எஸ்: வி.

சசிதரன் தன்னுடைய பங்களாவின் முகப்பு வாசலில் போட்டிருந்த ஊஞ்சலில் படுத்து அரை நித்திரையில் ஆழ்ந்திருந்தான். நல்ல வெய்யில் வேளை. தெருவில் 'ஜல் ஜல்' என்று ஜட்காவண்டி வந்து நிற்கும் ஓசை கேட்டுச் சட்டென்று எழுந்து பார்த்தான். நடுத்தர வயதுள்ள ஆசாமி ஒருவரும் நீலவர்ணச் சேலை உடுத்திய அழகிய பெண்ணொருத்தியும் ஒருவர்பின் ஒருவராக வண்டியை விட்டுக் கீழே இறங்கிக் கொண்டிருந்தார்கள்.

சசிதரனுக்கு ஒருகணம் வியப்பாகவும் மறுகணம் திகைப்பாகவும் இருந்தது. வண்டியிலிருந்து இறங்கிய இருவரையும் எங்கேயோ எப்போதோ பார்த்தமாதிரி தெரிந்தது. சசிதரனுடைய வியப்புத் தீர வெகுநேரம் ஆகவில்லை. வந்தவர்கள் யாரென்பது மின்னல் மின்னும் வேகத்துக்குள் அவனுடைய ஞாபகத்துக்கு வந்துவிட்டது. அவர்கள் வேறு யாரும் இல்லை; சாட்சாத் அவனுடைய மனைவி சாரதாவும் அவளுடைய சித்தப்பாவும் தான்!—இதென்ன ஆச்சரியம்! இவர்கள் ஏன் வந்தார்கள்? எப்படி வந்தார்கள்? இப்போது எதற்காக வந்தார்கள்—சசிதரன் தன்னுடைய மனதில் பொங்கிய கோபத்தையும் கொந்தளிப்பையும் அடக்கிக் கொண்டான்.

* * *

சசிதரன் சாரதாவுக்கு மாலையிட்டு வருஷங்கள் மூன்றாகி யிருந்தன. மாங்கல்யதாரணம் நடைபெற்ற அந்தச் சமயத்தில் ஓமப் புகையினிடையே கண்ட சாரதாவுக்கும் இப்போதுள்ள சாரதாவுக்கும் தோற்றத்தில் எவ்வளவோ வித்தியாசம் இருந்தது. உடல் வளர்ச்சியிலும், முகப் பொலிவிலும், ஆடை அலங்காரத்திலும் முன்னைக்கு இப்போது மிகவும் கவர்ச்சிகரமாக விளங்கினாள்.

கையில் பிடித்த வெள்ளிக்கூஜாவுடன் சசிதரனை விழுங்கி விடுபவளே போல் பார்த்தவண்ணம், முகத்தில் வெட்கமும் பயமும் தோன்ற, தயங்கித் தயங்கி நடந்து வந்தாள் சாரதா. அவளோ, அவளுடைய சித்தப்பாவோ, சசிதரன் தாங்கள் வரும்போது 'வா'வென்று அழைத்து உபசரிப்பான் என்று எதிர்பார்க்கவில்லை. கடும் வார்த்தைகள் சொல்லித் தங்கள் இருதயத்தை உடைக்காமல் இருக்கவேண்டுமே என்றுதான் அஞ்சினார்கள்.

சாரதாவின் சித்தப்பா அவனையும் அழைத்துக்கொண்டு உள்ளே பிரவேசித்தார். "மாப்பிள்ளைவாள், சாரதாவை அழைத்து வந்திருக்கிறேன். எங்கள்மீது குற்றங்கள் இருந்தாலும் அதையெல்லாம் மறந்து அவளை அன்போடு ஏற்றுக் கொள்ளுங்கள். உங்களுக்கு உரிய பொருளை உங்களிடத்திலே ஒப்படைத்து விட்டோம். நான் அவசரமாக இப்போதே ஊருக்குத் திரும்பிச் செல்ல வேண்டும்" என்று கூறிக்கொண்டே, வந்த ஜட்காவிலேயே ஸ்டேஷனுக்குத் திரும்பிச் சென்றார். சசிதரன் வாயைத் திறந்து ஒரு வார்த்தையும் பேசவில்லை. சாரதாவின் கண்கள் இதற்குள் கலங்கி இரு முத்தைச் சிந்தத் தயாராயிருந்தன.

சில நிமிஷங்களுக்குப் பிறகு சசிதரன் சாரதா இருந்த திசையை நோக்கினான். "உன் தகப்பனாருக்கு இப்போதுதான் புத்தி வந்ததோ? கலியாணமான பெண்ணைக் கிழவியாகும் வரை விட்டோடு வைத்துக் கொண்டிருப்பதுதானே?...... ...சரி, சரி; ரொம்பப் பசியோடு இருப்பாய். சமையல் அறையில் பிளாஸ்கில் காப்பி இருக்கிறது. அதை எடுத்துச் சாப்பிடு. பிறகு வெந்நீர் போட்டுக் குளித்துவிட்டு வந்து சமையல் செய்யலாம்" என்று சசிதரன் கூறிய வார்த்தைகளைக் கேட்டபோது சாரதாவுக்குப் போன உயிர் திரும்பி வந்தமாதிரி இருந்தது. இந்தமட்டில் இவ்வளவாவது அன்புடன் பேசுகிறாரே என்று எண்ணிப் பெருமூச்சு விட்டாள்.

சாரதா காப்பி அருந்தியானதும் ஸ்நான அறைக்குச் சென்று குளித்து விட்டு வந்தாள். இதற்குள் சசிதரன் சமையலறையில் கும்மட்டியில் நெருப்புப்பற்ற வைத்துச் சாதம் வடிக்க உருளியைப் போட்டிருந்தான். சாரதா வெட்கத்துடன் உள்ளே நுழைந்தபோது சசிதரன் பணிக்கையாக அடுப்பருகில் உட்கார்ந்து வீசிக் கொண்டிருந்தான். இது அவளுக்குப் பெரும் அதிசயமாக இருந்தது. இந்த மூன்று வருஷ காலத்தில் 'அவ'ருக்குச் சமையலறை வேலை என்னமாய்ப் படிந்திருக்கிறது என்று மனதிற்குள் வியந்து கொண்டாள். பருப்பு ரசம் வைத்துச் சாதம் வடித்துக் கொண்டாள் சாரதா. கணவன் ஜாடியில் வைத்திருந்த ஆவக்காய் ஊறுகாயை எடுத்து வைத்துக்கொண்டு தயிர் சாதம் சாப்பிட்டபோது சாரதாவுக்கு பிரம்மானந்தமா

யிருந்தது. ஆகா! தனிக் குடித்தனத்தின் ஆனந்தமே ஆனந்தம்!

* * *

சாரதாவின் கல்யாணத்தின்போது சசிதரன் பி. எஸ்ஸி. படித்துக் கொண்டிருந்தான். ஏழைக் குடும்பத்தில் பிறந்தவன். எனவே, கடைசி வருஷப் படிப்புச் செலவை அவனுடைய மாமனாரே ஏற்றுக் கொண்டார். அவனைத் தம்முடைய வீட்டோடு 'மாமனார் வீட்டு மாப்பிள்ளை'யாக வைத்துக்கொண்டு விடலாம் என்று சாரதாவின் தந்தை மனப்பால் குடித்தார். சாரதா அவருடைய ஒரே அருமை மகள். அவருக்கு ஏராளமான சொத்தும் சில புலனும் இருந்தன. வேறு பிக்கல் பிடுங்கல் ஒன்றுமில்லை. மாப்பிள்ளை உத்தியோகம் பார்த்தாலும் பார்க்காவிட்டாலும் அதை அவர் பொருட்படுத்தத் தயாராயில்லை. மகளும் மாப்பிள்ளையும் தம் வீட்டோடு இருப்பதையே அவர் பெரிதாகக் கருதினார். கலியாணம் முடிந்த ஒரு வாரத்துக்குள்ளாக இந்த அபிப்ராயத்தைச் சசிதரனிடம் கூறினார். சசிதரன் 'மாமனார் வீட்டு மாப்பிள்ளை'யாக இருந்து மதிப்பற்ற வாழ்க்கை நடத்துவதை அடியோடு வெறுத்தான். எனவே, மாமனார் மேற்படி அபிப்பிராயத்தைத் தன்னிடம் அறிவித்தபோது உதாசீனமாகப் பதில் கூறிவிட்டு வெளியே போய்விட்டான். அதற்குப் பிறகு மாமனார் வீட்டை எட்டிப் பார்க்காமலேயே இருந்து விட்டான். தீபாவளி, கார்த்திகை முதலிய பண்டிகைகள் சாரதாவின் வீட்டில் சசிதரன் இல்லாமல் வெறும் வறட்டுப் பண்டிகைகளாக ஆயின. நாளடைவில் மாப்பிள்ளை வழிக்கு வருவான் என்று சாரதாவின் பெற்றோர் எதிர்பார்த்தார்கள். வருஷம் மூன்றாகியும் சசிதரன் மாமனார் வீட்டுப் பக்கமே திரும்பாமற் போகவே, சாரதாவின் தந்தை பெரும் ஏமாற்றத்துக்குள்ளானார்.

மூன்று வருஷங்கள் கழிந்தன. சிமெண்டு ஆராய்ச்சி ஸ்தாபனம் ஒன்றில் சசிதரனுக்கு உத்தியோகம் கிடைத்தது. ஆறுமாதம் டில்லியிலும் ஆறுமாதம் சென்னையிலும் அவன் உத்தியோகம் பங்கு போடப் பட்டிருந்தது. இப்போது சென்னைக்கு மாற்றலாகி யிருந்தான். இந்த மூன்று வருஷ காலத்தில் அவன் சாரதாவைப் பற்றி எத்தனையோ விதமாக எண்ணிப் பார்த்ததுண்டு. தன்



மாமனாரின் பணச் செருக்கையும் அகம்பாவத்தையும் எண்ணிப் பொருமியதுண்டு. அதற்கெல்லாம் காலம் வரும் என்று எண்ணி பொறுமையுடன் காத்திருந்தான்.

இதற்கிடையில் உற்றார் உறவினர் சாரதாவின் பெற்றோரைப் பிடுங்கி எடுத்தார்கள். வயது வந்த பெண்ணை வாழாவெட்டியாக வைத்துக் கொண்டிருப்பதைக்குறித்துக் குளத்தங்கரை ஸ்திரீகளுக்கிடையே வம்புப் பேச்சு நடந்தது. கடைசியில், சமூக தூஷணைக்குப் பயந்து ஒரு நாள் சாரதாவின் தந்தை தம்முடைய தம்பியை அழைத்துச் சாரதாவை அவரோடு மாப்பிள்ளையிடம் அனுப்பி வைத்தார்.

* * *

**தூ**ங்கி எழுந்த சாரதாவைப் பார்த்த சசிதரன் சில கண்டிப்பான நிபந்தனைகளைப் போட்டான்.

“சாரதா! இனி எந்தக் காரணத்தைக் கொண்டும் நீ பிறந்தகத்துக்குப் போகக் கூடாது. உன் தாய் தகப்பன் முகத்திலும் விழிக்கக் கூடாது. அதற்குச் சம்மதமானால் நீ இங்கே வாழலாம். இல்லையானால் இப்போதே திரும்பிப் போய்விடலாம்” என்று ராமபாணம் போன்ற அஸ்திரத்தைப் போட்டான்.

சாரதா துக்கம் தொண்டையை அடைக்கத் தலையை அசைத்தாள்.

“இத்தனை நாளும் புருஷன் ஒருவன் இருப்பதாகவே உனக்கு ஞாபகம் இல்லை அல்லவா?” என்று பதில் கூற முடியாத சங்கடமான ஒரு கேள்வியைப் போட்டான் அடுத்தபடியாக.

“நான் என்ன செய்வேன்? ஒரு பெண் கணவரிடம் ஒப்படைக்கப்படும் வரை பெற்றோர்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டியவள்தானே? நானும் அவர்களிடம் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன்......”

சசிதரனுடைய மனம் சற்றுக் கரைந்தது. பழைய மனஸ்தாபத்தை மறந்து சாரதாவுடன் சந்தோஷமாக வாழத் தொடங்கினான். ஆனால் சாரதாவுக்கும் அவள் பெற்றோருக்கும் இடையில் சசிதரனால் போடப்பட்டிருந்த இரும்புத் திரை அகலவே இல்லை. சாரதாவின்மீது சசிதரனுக்குச் சந்தேகமாகவே இருந்தது. தனக்குத் தெரியாமல் பெற்றோருக்குக் கடிதம் எழுதுகிறாளோ என்பதே அச் சந்தேகம். ஆகையால் தினம் தவறாமல் தானே ஆபீஸுக்குச் செல்லும்போது தபாலாபீஸுக்குச் சென்று தபால் வந்திருக்கிறதா என்று பார்ப்பான். சாரதாவின் தந்தையிடமிருந்து எப்போதாவது கடிதம் வரும். சசிதரன் அவற்றைத் தபாலாபீஸிலேயே வாங்கிப் படித்து அங்கேயே கிழித்துப் போட்டு விடுவான். சாரதாவுக்கும் இது தெரிந்தே இருந்தது.

* * *

**வா**ழ்வும் தாழ்வும் மனிதர்களுக்கு சகடக்கால் போல் வருவது இயல்பே அல்லவா? சாரதாவின் பெற்றோர்களுடைய சொத்து கடந்த சில வருஷங்களுக்குள் வெகுவாக அழிந்து விட்டது. பணத்திலே மிதந்து கொண்டிருந்த குடும்பம் எளிய வாழ்க்கையை ஏற்கும்படி நேர்ந்தது. சசிதரனுக்கோ உத்தியோகத்தில் மேலும் மேலும் படிப்படியாகப் ‘பிரமோஷன்’ ஆகிச் செல்வாக்கும் உயர்ந்து வீடு, வாசல், கார் வேலைக்காரர்கள் முதலிய அந்தஸ்துகளெல்லாம் உண்டாயின.

சாரதாவுக்கு ஒரு நாள் அவளுடைய தந்தையிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதமும் வழக்கம்போல் சசிதரனுடைய ‘ஸென்ஸா’ருக்கு உள்ளாயிற்று. மேற்படி கடிதத்தில் சாரதாவின் தந்தை தம்முடைய துக்கத்தைக் கொட்டியிருந்தார். தம்முடைய பணமும், பணச் செருக்கும் அழிந்ததென்றும், சசிதரனையும் சாரதாவையும் ஒரு தடவை பார்க்க விரும்புவதாகவும் எழுதியிருந்தார். சசிதரன் மேற்படி கடிதத்தைப் படித்த போது சற்றுக் கலக்கமடைந்தான். ஆனாலும் கடிதம் வந்த விஷயத்தைச் சாரதாவிடம் சொல்லவே யில்லை.

அன்று சாரதா கணவன் ஆபீசுக்குப் புறப்பட்டுச் சென்றதும் அவசரம் அவசரமாகத் தன் அப்பாவுக்கு ஒரு கடிதம் எழுதி வேலைக்காரி வள்ளியம்மையிடம் கொடுத்துத் தபாலாபீசில் கொண்டு போட்டுவிட்டு வரும்படி அனுப்பினாள். ஆபீசுக்குப் புறப்பட்ட சசிதரன் தபாலாபீசில் நின்றுகொண்டிருந்தான். வள்ளியம்மை கடிதத்துடன் வருவதைக் கண்டதும் அவளைக் கூப்பிட்டு அந்தக்கடிதத்தை வாங்கி உறையைக் கிழித்துப் படிக்க ஆரம்பித்தான்:

“அன்புள்ள அப்பாவுக்கு, நமஸ்காரம். புருஷன் வீட்டிற்கு வந்த பிறகு நான் எழுதும் முதல் கடிதம் இது. இதை நான் எழுதுவதாக என் கணவருக்குத் தெரிந்தால் கூட ஆபத்துதான். தங்களுடைய பணத்தையும், பணச்செருக்கையும் அவர் அடியோடு வெறுக்கிறார். தங்கள் கைப் பொம்மையைப்போல் அவர் தங்கள் வீட்டில் இருக்க வேண்டுமென்று தாங்கள் விரும்

பியதுதான் இதற்குக் காரணம். அவருக்கு உத்தியோகமில்லை, சொத்துமில்லை என்று எண்ணித்தானே என்னை அவருடன் வாழத் தாங்கள் சம்மதிக்கவில்லை. இப்போது அவருடைய அந்தஸ்தை எண்ணிப் பார்த்தால் எனக்குப் பெருமையாக இருக்கிறது. நடந்ததை மறந்து விடும்படி அவருக்குத் தாங்களே ஒரு கடிதம் எழுதுங்கள். அவருடைய குணம் தங்கக் கம்பி போன்றது. மன்னித்து விடுவார். வருகிற கார்த்திகை மாதத்தில் தங்களுக்குப் பேரக் குழந்தை பிறக்கப் போகிறது. வளை காப்புச் சீருக்குப் பிறந்தகத்தில் இருக்க வேண்டுமென்று எந்தப் பெண்தான் ஆசைப்பட மாட்டாள்? தங்களையும் தாயாரையும் ஒரு முறை காண விரும்புகிறேன்.

இப்படிக்கு,
சாரதா

சசிதரன் மேற்படி கடிதத்தைப் படித்து விட்டு அப்படியே உறைக்குள் போட்டு ஒட்டித் தபால் பெட்டியில் போட்டான். பிறகு வள்ளியம்மையைப் பார்த்து "இந்தக் கடிதத்தை நான் பிரித்துப் படித்ததாக அம்மாவிடம் சொல்லக் கூடாது. தெரியுமா?" என்று அதிகாரத்துடன் சொல்லி அனுப்பினான்.

அன்று சசிதரன் போஸ்டாபீஸிலிருந்து ஆபீசுக்குச் செல்லும் போது என்றுமில்லாத உற்சாகத்துடன் காணப்பட்டான். சாரதா எழுதியிருந்த கடிதமே அதற்குக் காரணம். முதலாவது சாரதா கர்ப்பவதியாயிருக்கிறாள் என்று அக்கடிதத்தின் மூலம் தெரிந்தது. இரண்டாவது சாரதா தகப்பனார் குற்றங்களைக் கண்டித்தும் தன்னைப் பாராட்டியும் எழுதியிருந்தது. இதனால் சசிதரனுக்கு தன் மாமனார் மீதிருந்த கொஞ்ச நஞ்சம் கோபமும் மறைந்து விட்டது. அன்று சாயந்திரம் வள்ளியம்மையிடமிருந்து தான் கடிதத்தை வாங்கிப் படித்ததைப் பற்றி சசிதரன் சாரதாவிடம் பிரஸ்தாபிக்கவே இல்லை.

ஒரு வாரம் கழிந்தது. ஒரு நாள் மாலை சசிதரன் வீட்டு வாசலில் 'ஜல்ஜல்' சப்தம் கேட்டது. வண்டியில் வந்தவர்கள் வேறு யாருமில்லை. சசிதரன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த சாட்சாத் அவனுடைய மாமனாரும் மாமியும்தான். சசிதரன் அவர்களை அன்புடன் உள்ளே அழைத்து வந்து உபசாரம் செய்தான். சாரதாவுக்கு இந்தக் காட்சி வெறும் பிரமையாக இருந்தது. அவளால் இதைச் சற்றும் நம்ப முடியவில்லை.

"நான்தான் உன் தகப்பனாருக்குக் கடிதம் போட்டிருக்கேன். உனக்கு இந்த மாதத்தில் வளைகாப்பு அல்லவா? அதற்காக உன்னை அழைத்துப்போக வந்திருக்கிறார்கள். நீ போன வாரம் உன் தகப்பனாருக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தாயல்லவா? அதை வள்ளியம்மையிடமிருந்து நான் வாங்கிப் படித்தேன். பிறகு, நானாகவே உன் தகப்பனாரைப் புறப்பட்டு வரும்படி கடிதம் எழுதினேன்" என்றான் சசிதரன்.

சாரதாவின் இருதயம் சந்தோஷத்தால் பூரித்தது. தன் கணவருடைய மேலான குணத்தை மனதிற்குள்ளாகவே பாராட்டிக் கொண்டாள். அத்துடன் தான் செய்த யுக்தியும், போட்ட திட்டமும் நிறைவேறி விட்டதை நினைத்து ஆனந்தப்பட்டாள்.

அன்று தன் கணவன் ஆபீஸுக்குப் புறப்பட்டுச் சென்றதும் சாரதா வள்ளியம்மையிடம் ஒரு கடிதம் எழுதி அனுப்பினாளல்லவா? அதைக் கணவன் பிரித்துப் பார்க்க வேண்டும் என்பதற்காகவே தான் அவ்வளவு அவசரமாக எழுதி அனுப்பினாள். அவள் எதிர்பார்த்தபடியே சசிதரன் அந்தக் கடிதத்தை வள்ளியம்மையிடமிருந்து வாங்கிப் படித்தான். இந்தச் சேதியை சசிதரன் 'அம்மாவிடம் சொல்லக் கூடாது' என்று கட்டுப்படுத்தியிருந்தும் வள்ளியம்மை அம்மாவிடம் சொல்லாமலிருக்கவில்லை.

* * *

மறு தினம் சாயந்திரம் சாரதா, சசிதரன், சாரதாவின் பெற்றோர், வள்ளியம்மை அனைவரும் குடும்ப சகிதமாகச் சாரதாவின் பிறந்தகத்துக்குப் புறப்பட்டுச் சென்றார்கள் என்று சொல்லவும் வேண்டுமோ?

# படித்துப் பாருங்கள்!

## வம்புப் பேச்சு

கைகேயிக்குப் பதிலாகச் சுமித்திரை பரதனுக்குத் தாயாராக இருந்திருந்தால் என்ன நேர்ந்திருக்கும்? மந்தரை அவள் மனதை ஒரு போதும் மாற்றி யிருக்க முடியாது. ராமன், சீதை, லக்ஷ்மணன் மூவரும் கானகம் சென்றிருக்க மாட்டார்கள். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் ராமாயணக் கதையே இவ்வளவு பெரிதாக வளர்ந்திருக்காது — இம்மாதிரி கற்பனை செய்து கொண்டே போனால் நேரங் கழிவதும் தினைப்பின்றிச் சிந்தனைக் கடலில் மூழ்கி இருந்து விடலாம். இது நல்ல பொழுது போக்குச் சாதனம்.

இத்தகைய பொழுது போக்குச் சாதனத்துக்குத் தேவையான பதினாறு கட்டுரைகள் இந்நூலில் இருக்கின்றன. 'காதலில்லாமல் கதை முடியுமா?' 'சமூகமும் நாமும்' 'கடவுளிடம் நம்பிக்கை' 'பெயரும் பொருத்தமும்' முதலிய கட்டுரைகள் ஆசிரியையின் சிந்தனை வேகத்தை நமக்குக் காட்டுகின்றன. இக் கட்டுரைகள் வெறும் வம்புப் பேச்சு அல்ல என்பதற்கு உதாரணம் ராஜாஜி அவர்கள் இந்நூலுக்கு முன்னுரை அளித்திருக்கிறார் என்பதுதான். பிரசுரம்: கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர், சென்னை; விலை: 1—4—0.

## காந்திக் காட்சிகள்

சிரித்துக்கொண்டு சீட்டு விளையாடிக் கொண்டிருந்த பாரிஸ்டர் ஸ்ரீ வல்லபாய் படேலை காந்தி மகாத்மா தம் பொக்கை வாய்ப் புன்னகையால் ஆட்கொண்டு சீடராக்கியது எவ்வளவு அருமையாக இருக்கிறது! தமக்கு வைத்தியம் செய்யவந்த டாக்டரிடம் காந்திஜி தாமே 'பீஸ்' கேட்டது எவ்வளவு விசித்திரமாக இருக்கிறது! குறிப்பிட்ட காலத்தில் பொதுக் கூட்டத்துக்குப் போக வேண்டும் என்பதற்காக மகாத்மாஜி சைக்கிள் எடுத்துக்கொண்டு போனதை நம்பக் கூட முடியவில்லையே நம்மால்! காந்திஜியுடன் நெருங்கிப் பழகியவர்களில் காகா கலேல்கரும் ஒருவர். மகாத்மாஜியின் வாழ்க்கையில் நடந்த பல சம்பவங்களைத் தொகுத்து கொஞ்சகாலத்துக்கு முன்பு அவர் எழுதிய காந்தீக் காட்சிகள் என்ற புத்தகம் இப்போது தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு வெளியாகி யிருக்கிறது. மொழி பெயர்த்தவர் ஸ்ரீ கோ. கிருஷ்ணமூர்த்தி. விலை ரூ. 1—4—0. விலாசம்: சர்வோதயப் பிரசுராலயம், அகில பாரத சர்க்கா சங்கம், வீரபாண்டி, திருப்பூர்.

## திரு அருள்மொழி

அணுகுண்டுகளும் ஜல வாயுக் குண்டுகளும் உலகை பயமுறுத்தும் இக்காலத்தில் 'கடவுள் ஒருவர் இருக்கிறாரா?' என்ற சந்தேகம் ஒரு சிலருக்கு ஏற்படலாம். மற்றவர்கள் 'கடவுளே, நீயே கதி!' என்று கையெடுத்துக் கும்பிடலாம். கடவுளைக் கும்பிடும் இந்தப் பல்லாயிரக் கணக்கான ஆஸ்திகர்களுக்கு திரு அருள்மொழி உறுதுணையாகவும் உற்ற தோழனாகவும் இருக்கும். நமது ஆழ்வார்களும், நால்வர்களும் பக்திப் பெருக்கில் தம்மை மறந்து 'அவனருளாலே' பாடிய தீந்தமிழ்ப் பாடல்கள் சிலவற்றைத் தொகுத்து பொழிப்புரையுடன் வெளியிட்டிருக்கிறார்கள். இந்தப் புத்தகத்தின் முதற்பகுதியாகிய 'பக்திசார'த்தில் பல் வேறு சமயங்களைப் பற்றியும் அவற்றின் சாராம்சத்தைப் பற்றியும் விரிவாகவும் தெளிவாகவும் எழுதியிருக்கிறது. தலைவர் ராஜாஜி இந்த நூலைப் பெரிதும் பாராட்டியுள்ளார். பிரசுரம்: ஸ்ரீ ராமகிருஷ்ணமடம், மயிலாப்பூர்; விலை: 3—8—0.

## பெனிசிலின்

ஒருவருக்கு லக்ஷக்கணக்கில் பணம் இருந்தால் மட்டும் போதாது இந்த நாளில். அவர் எத்தனை லக்ஷம் பெனிசிலின் இஞ்ஜெக்ஷன் செய்து கொண்டிருக்கிறார் என்பதைப் பொறுத்தது அவர் மதிப்பு. அவ்வளவு வேகமாகப் பெனிசிலின் நம் வாழ்க்கையை ஊடுருவிப் பாய்ந்து விட்டது.

அலெக்ஸாண்டர் ப்ளெமிங் என்னும் விஞ்ஞான மேதை, பெனிசிலினைக் கண்டு பிடித்து, ஆராய்ச்சி நடத்தி, நோயர்களுக்கு அதைப் பயன் படுத்தும் முறையையும் வகுத்து மனித சமுதாயத்துக்கு இணையற்ற சேவையை எப்படிச் செய்தார் என்னும் விவரம் முழுவதும் தெளிவாக இந்நூலில் கூறப்பட்டிருக்கிறது.

இத்தகைய ஆராய்ச்சி நூல்கள் இன்றைய வாழ்க்கை நிலையில் எவ்வளவு இன்றியமையாதவை என்பதை நாம் சொல்ல வேண்டியதில்லை. ஆசிரியர்: காப்டன் என். சேஷாத்திரிநாதன்; பிரசுரம்: இந்தியன் லிட்டரேச்சர் சௌகார்பேட்டை, சென்னை; விலை: ரூ. 1—4—0.




## எப்படி ?

அப்பா :—(வாசலில் இடெரென்று வண்டியை விட்டு இறங்கிய தம் பெண்ணைப் பார்த்து) :—வா, அம்மா! வா! இப்போதுதான் ஊரிலிருந்து வருகிறாயா?

பெண் :—ஆமாம், அப்பா! நான் அவரிடம் கோபித்துக்கொண்டு வந்து விட்டேன். அம்மா எங்கே?

அப்பா :— அம்மாவா! என்னிடம் கோபித்துக் கொண்டு அவள் தன் பிறந்த வீட்டுக்குப் போய்விட்டாளே!

★

## அவன் யோசனை!

ராமு தன்னுடைய சின்ன சைக்கிளை எடுத்துக்கொண்டு பள்ளிக் கூடத்துக்குப் போனான். போகிற வழியில் சைக்கிள் சங்கிலி கழன்று போய்விட்டது. ராமு ஒன்றும் தோன்றாமல் இங்கும் அங்கும் பார்த்துக்கொண்டு தெருவில் நின்றுவிட்டான்.

ஒருவர் :—என்ன அம்பி, சைக்கிள் சங்கிலி கழன்று போய் விட்டதா? நான் போட்டுத் தருகிறேன். (சங்கிலியைச் சரிப்படுத்திவிட்டு) நீ இன்னும் பெரியவனானால் நீயே சங்கிலியைப் போட்டுக் கொள்ளலாம்.

ராமு :—இல்லை, மாமா! எனக்கு இப்போது கூடச் சங்கிலியைப் போடத் தெரியும். கையெல்லாம் அழுக்காகி விடுமே என்றுதான் யோசித்துக் கொண்டிருந்தேன்!

★

## அவர் நம்பிக்கை!

ஒருவர் (வீட்டு எஜமானரிடம்) :—ஸார்! இந்த வீட்டில் ஒரு சமையற்காரர் வேண்டும் என்று கேள்விப் பட்டேன். சமையலில் எனக்கு நல்ல தேர்ச்சி உண்டு......

வீட்டுக்காரர் :—அப்படியா? நேற்றே நீ வந்து என்னைப் பார்த்திருக்கக் கூடாதா? இன்று காலையில்தான் ஒருவரை நியமித்து விட்டேனே!

வந்தவர் :—அதனால் என்ன? அடுத்த வாரம் வந்து பார்க்கிறேன்!

## உண்மை!

ஒரு கப்பல் சென்னைத் துறைமுகத்துக்கு வந்து நின்றது. மாலுமிகள் எல்லோரும் லீவு வாங்கிக் கொண்டு கப்பலை விட்டுச் சென்றனர். ஒருவன் மட்டும் கப்பலிலேயே தங்கி விட்டான்.

ஆபீஸர் (ஆச்சரியத்துடன்) :—ஏன், நீ மட்டும் லீவு கேட்கவில்லை? அவர்களெல்லோரும் மனைவியையும் குழந்தைகளையும் பார்க்கவேண்டும் என்று போயிருக்கிறார்களே! உனக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லையா?

மாலுமி :—இல்லை, இல்லை. இந்தக் கப்பல் மாலுமிகளிலேயே நான் ஒருவன்தான் விவாகமானவன். அதனால் தான் வீட்டுக்குப் போகவில்லை!

★

## ‘சாம்பியனோ!’

மணி :—எங்க மாமா குஸ்திகளிலே அடைந்த மெடல்களும், குத்துச் சண்டைகளிலே ஜெயித்த மெடல்களும், புட்பால் ஆடி ஜெயித்த வெள்ளிக் கிண்ணங்களும் எவ்வளவு வைத்துக்கொண்டிருக்கிறார் தெரியுமா?

கோபு :—அடே, உங்க மாமா இதிலேயெல்லாம் பெரிய ‘சாம்பியனோ?’

மணி :—இல்லேடா! அவர் சாமான்களை அடமானம் வாங்கிக்கொண்டு பணம் கொடுக்கிறவர்!

★

## ஆப்த நண்பர்!

“உங்கள் அகத்துக்காரர் டாக்டருக்கு ரொம்ப சிநேகிதர் போலிருக்கிறது!”

“ஆமாம்; டாக்டரிடம் பிராண சிநேகிதம் அவருக்கு! ஒருநாள் கூட அவரைப் பார்க்காமல் இருக்க மாட்டார். அவருக்கு உயிரைக் கூடக் கொடுத்து விடுவார்!”

★

## நல்ல யோசனை!

பையன் :—எங்க தாயார் படிப்பை இன்னியோடே நிறுத்திப்பிடச் சொல்லியிருக்கிறாங்க, ஸார்!

உபாத்தியாயர் :—ஏன்? எதுக்காக அப்படிச் சொன்னாங்க?

பையன் :—வயது ஆனவங்களுக்கெல்லாம் சம்பளம் இல்லாமே இனாமாகப் பாடம் சொல்லிக் கொடுக்கிறாங்களாம். அந்த வயசு வந்த அப்புறம் நானும் படிச்சுக்கலாம்னு சொல்லிப்பிட்டாங்க!

# பூங்கோதையின் கணவன்

**வேம்பு**

பிறந்த வீட்டிற்கு வந்திருந்த சமயம் பொழுது போகாமல் மொட்டை மாடியின் மீது நின்றுகொண்டு, தொலைவில் தெரியும் ரயில்வே ஸ்டேஷனையும் அதற்கு அப்பால் தெரியும் நீல ஏரியையும் பார்த்துக் கொண்டிருந்தபோது பூங்கோதையின் நினைவு வந்தது. 'வந்து இரண்டு நாட்கள்தானே ஆகியிருக்கின்றன? நாளைக்குக் கேட்போம், நாளைக்குக் கேட்போம்' என்று நாளைத் தள்ளிக் கொண்டிருந்தேன். கடைசியில் இனியும் அம்மாவிடம் பூங்கோதையைப் பற்றிக் கேட்காமல் இருக்க முடியாது என்று என் மனம் தீர்மானித்துவிட்டது.

"என் அம்மா! எதிர்வீட்டுப் பூங்கோதை எங்கே? அந்த ஜன்னல் அருகே யாரையும் காணுமே? வீடு ஏன் பூட்டிக் கிடக்கிறது?" என்று கேட்டேன்.

"அவளுக்குக் கலியாணமாகி விட்டது; புக்ககம்கூடப் பட்டணத்தில்தான்!" என்றாள் தாயார்.

"கலியாணத்துக்கு ஒரு கடிதாசிகூடப் போடவில்லை பார்த்தாயா, அம்மா! சிநேகிதம் எல்லாம்......" என்று நான் கூறுவதற்குள், "இல்லை, இல்லை. நான்தான் அவளுக்கு உன் விலாசத்தைக் கொடுத்தேன்; கடிதம் வந்து சேரவில்லைபோலிருக்கிறது!" என்றாள் தாயார்.

நான் கலியாணக் கடிதாசி கிடைக்காமல் போனதைப் பற்றிக்கூடக் கவலைப் படாமல், உடனே பூங்கோதையின் விலாசத்தை வாங்கிக் கொண்டேன். அன்று மாலையே என் பெண் கருணாவுடன் பூங்கோதையைச் சந்தித்தேன்.

பூங்கோதை என்னை அடையாளம் கண்டு கொண்டு விட்டாள். என்னால்தான் அவளைப் புரிந்துகொள்ள முடியவில்லை. கன்னங்கள் ஒட்டி, கவலைக் கோடுகள் அவள் முகத்தில் படர்ந்திருந்தன.

கூடத்தில் அவளுடைய தகப்பனார் ராமநாத ஐயர் உட்கார்ந்திருந்தார். "வா, அம்மா!" என்று அவர் என்னை வரவேற்றார்.

நான் வந்த ஆனந்தத்தில் பூங்கோதைக்கு என்ன செய்வது என்றுகூடப் புரியவில்லை. என் பெண் கருணாவை அழைத்து அன்புடன் அணைத்துக்கொண்டாள். "உன்னை அப்படியே உரித்து வைத்திருக்காளடி! ஆனால் மூக்குத்தான் அப்பாவின் மூக்கு!" என்றாள்.

"நீ எப்போது அவரைப் பார்த்திருக்கிறாய்?" என்றேன்.

"ஏன், கலியாணத்தின்போது! அப்புறம் தீபாவளிக்கு; அதற்குப் பிறகு பொங்கலுக்குக்கூட வந்திருந்தாரே! நீதான் என் கலியாணத்துக்கும் வராமல் என்னையே மறந்துவிட்டாய்! நீ என்னை மறந்தாலும் நான் உன்னை மறப்பேனா?" என்றாள்.

"அப்படியெல்லாம் நினைக்காதே, கோதை! உன்னை மறந்துவிட்டிருந்தால் இப்போது தேடி வந்திருப்பேனா? அது இருக்கட்டும்; உன் கணவர் வெளியே போயிருக்கிறாரா, குழந்தைகள் ஏதாவது உண்டா, உனக்கு?" என்று கேள்விமேல் கேள்வியாக அடுக்கிக் கொண்டே போனேன்.

அவள் முகம் கறுத்தது. "ராஜி, வா! மாடிக்குப் போகலாம்" என்று அவள் என்னை அழைத்துக் கொண்டு போனாள். கருணா தெருவில் விளையாடப் போய் விட்டாள்.

மாடியில் மனம் விட்டு இருவரும் பேசிக் கொண்டிருந்தோம். கருணா வந்து வீட்டுக்குப் போகத் தொந்தரவு செய்ய ஆரம்பித்த பிறகே எனக்குச் சுய நினைவு வந்தது.

"அடிக்கடி நீ வந்து போனால்தான் என் மனதுக்கு ஆறுதல் அளித்தது போலிருக்கும்" என்றாள் பூங்கோதை. இதைச் சொல்லும்போது அவளை அறியாமல் இரு துளி நீர் முத்துக்கள் கீழே விழுந்ததை நான் கண்டேன்.

## 2

"பாவம், பூங்கோதை! அவளுக்கு இப்படியா நேரவேண்டும்?" என்ற எண்ணத்துடன் வீடு சென்ற எனக்கு மனமே சரியாக இல்லை.

பூங்கோதையின் பெற்றோர்கள் சுமாரான பணமுள்ளவர்கள். பூங்கோதை ஒரே பெண். எனக்குக் கலியாணமாகும்போது அவள் தாயார் அவளுக்கும் கலியாணம் செய்துவிட வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தாள். பூங்கோதைக்கு அப்பொழுதிலிருந்தே வரன்

பார்த்து வந்தார்கள். சுலபமாக முடியும் தறுவாயிலிருக்கும் வரன்களை அவள் தந்தை தட்டிக் கழித்து வந்தார். கடைசியில் தூரத்து உறவு ஒருவரின் பிள்ளையாண்டான் கிடைத்தான். அந்த வரனையே தேர்ந்தெடுத்து விடுவதென்று அவள் தந்தை தீர்மானித்தார்.

பூங்கோதையை மணப்பதற்கு அவர்கள் வீட்டில் சில நிபந்தனைகளைப் போட்டனர். 'பையனுக்குச் சீர் நிறையச் செய்ய வேண்டும்; பையன் மெடிகல் காலேஜில் படிக்கப் பிரியப்படுகிறான். அதற்காகும் செலவைப் பெண் வீட்டாரே ஏற்கவேண்டும். அதுவரை பெண் பிறந்த வீட்டிலே இருக்க வேண்டும்.'

ராமநாத ஐயருக்கு இந்த நிபந்தனைகள் எல்லாம் ஒன்றும் பிரமாதமாகத் தோன்றவில்லை. 'மருமகன் டாக்டருக்குப் படித்துப் பாஸ் செய்தால் பிரபல டாக்டராகப் போகிறான். அதனால் நமக்குத்தானே லாபம்? ஐந்து வருஷம் வரை பெண் வீட்டோடு இருந்தால் தப்பு ஒன்றுமில்லை; கோதைக்குச் சின்னவயசுதானே? அவர்கள் சொல்வது போலப் பள்ளிக்கூடத்தில் சேர்த்து விட்டால் படித்துக் கொண்டே இருப்பாள். நாளைக்கு டாக்டர் கணவனுடன் பழகப் படித்திருந்தால் நல்லதுதானே?' என்று எண்ணி, பிள்ளை வீட்டாரின் நிபந்தனைகளை ஒப்புக்கொண்டு ரொக்கமாகக் காலேஜ் படிப்புக்கென ரூபாய் ஐயாயிரம் எண்ணிக் கொடுத்து விட்டார். கோதையின் தாயாருக்கு இதில் துளிக்கூடப் பிரியம் இல்லை. ஆனால் ராமநாத ஐயர் ஒன்றைச் செய்யத் தீர்மானித்து விட்டால் அதை யாராலும் தடுக்க முடியாது.

கலியாணமான இரண்டு மாதங்களுக்கெல்லாம் ஐயர் பட்டணத்துக்கே போய் விட்டார். பெண்ணை அங்கே படிக்க வைத்துக் கொண்டு, தமது சொந்த வீட்டில் தங்கியிருந்தார்.




மாப்பிள்ளை வீடும் அங்குதான். ஆனால் ஒரு நாள் கூடச் சம்பந்தி வீட்டுப் பக்கம் இவர் பெண்ணை அனுப்ப வேண்டுமே!—கிடையாது. அதனால் மருமகனின் படிப்புக்குக் குந்தகம் நேரிட்டால் என்ன செய்வது?—அதற்காக அவ்வாறு செய்து வந்தார்.

முதல் தீபாவளி; பூங்கோதை பூரண வளர்ச்சியுற்றிருந்தாள். தீபாவளி நெருங்க நெருங்க அவளுக்கு இயற்கையாக உண்டான ஒரு ஆர்வம் அந்த நாளை எதிர்நோக்கியது. முன்கூட்டியே ராமநாத ஐயர் மாப்பிள்ளையைத் தீபாவளிக்கு அழைத்திருந்தார்.

தீபாவளிக்கு முதல் நாள்; ராமநாத ஐயர் மாப்பிள்ளை வீட்டுக்குக் காரை அனுப்பினார். கார் அரை மணி நேரம் கழித்துத் திரும்பி வந்தது. ஜன்னல் வழியே தெருவை நோக்கிக்கொண்டிருந்த கோதையின் கண்கள், காரின் பின் ஸீட்டைத் துழாவின. ஆனால்...

ஆனால் என்ன? "அவர் வீட்டில் இல்லை, ஸார்!" என்று டிரைவர் சொன்னான்.

மறுபடியும் ராமநாத ஐயரே காரில் கிளம்பிப் போனார். ஒரு மணி நேரம் கழித்துத் திரும்பி வந்தார். அவர் முகத்தில் ஈயாடவில்லை. கோதைக்கு ஒன்றுமே புரியவில்லை. அவளுடைய கனவு கலைந்தது.

இந்தச் சம்பவத்தைச் சொன்னபிறகு, "இன்று மூன்று வருஷமாகிறது. இன்னும் நான் அவரைப் பார்க்கவில்லை. அவர் யாரோ ஒரு பள்ளிக்கூடச் சிநேகிதியுடன் சுற்றுகிறாராம். வீட்டிற்குக்கூட வருவதில்லையாம். எனக்குக் கலியாணம் இல்லையென்று நானா அழுதேன்? கலியாணம் என்று ஒன்றைச் செய்து கொண்டு இப்படித் திண்டாடும்படி ஆண்டவன் என் தான் என் தலையில் எழுதினானோ!" என்றாள் அவள். இதைக் கேட்டதும் நான் அழுதே விட்டேன். அதற்குமேல் அவளுடைய சோகக்

கதையை அவள் வாய் மூலமாகக் கேட்க விரும்பாமல் நான் வீடு வந்து சேர்ந்தேன்.

## 3

எனது டாக்டர் சிநேகிதி சுசிலா, எல். ஐ. எம். படித்தவள். மலையாளக்காரி. என் குழந்தையை எடுத்துக் கொண்டு நான் அவளிடம் அடிக்கடி மருந்து வாங்கப் போவேன். அப்படிப் போகும்போது ஏற்பட்ட ஒரு பழக்கம் சிநேகமாக ஆகிவிட்டது. அவளும், வயதான தாயாருமாக அந்த வீட்டில் குடித்தனம் இருந்தனர். பகல் வேளைகளில் அடிக்கடி நான் அங்கு சென்று பேசிக் கொண்டிருப்பேன். நல்ல தமிழ் பேசும் வாலிபன் ஒருவன் அப்போது அங்கே வருவான். 'ஹலோ!' என்று குதூகலமாக அவனுடன் பேசக் கிளம்பி விடுவாள் சுசிலா. நானும் அத்துடன் விடை பெற்றுக் கொள்வேன்.

ஒரு நாள் கலியாணங்களைப் பற்றிப் பொதுவாகப் பேச்சு வந்தபோது ஆடவர்கள் வரதட்சிணை என்றும், படிப்புக்கென்றும் கேட்பதைப் பற்றி நான் அங்கலாய்த்தேன். அத்துடன் பூங்கோதையின் சோகக் கதையையும் கூறினேன். டாக்டருக்குப் படிப்பதற்காக ஐயாயிரம் வேண்டும், பெண் அந்த ஐந்து வருடங்களும் பள்ளியில் படிக்க வேண்டும் என்றெல்லாம் நிபந்தனைகள் போட்டு விட்டு, அப்புறம் திரும்பிக்கூடப் பார்க்காமலிருக்கும் கோதையின் கணவரைப் பற்றிக் கூறினேன். கட்டிய மனைவி இருக்க வேறு யாருடனோ அந்த மகாராஜன் சுற்றுவதாகவும் சொன்னேன்.

சுசிலா எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு பேசாமலிருந்தாள். நான் வழக்கம் போல் அவளிடம் விடை பெற்றுக் கொண்டு வீடு வந்து சேர்ந்தேன்.

நெருங்கின உறவின் முறையார் ஒருவர் வீட்டுக் கலியாணத்துக்குப் போக வேண்டியிருந்ததால் நான் என் கணவருடன் கிளம்பி வெளியூர் சென்று பத்துப் பன்னிரண்டு நாட்கள் கழித்து வந்தேன்.

வரும்போது டாக்டர் சுசிலா வீட்டைப் பார்த்தேன். காலை வேளையில் நோயாளிகளின் கூட்டம் 'ஜேஜே' என்று இருக்கும் அந்த வீடு பூட்டப்பட்டிருந்தது.

'எங்கே போயிருப்பாள்?' என்று யோசித்துக் கொண்டே நான் என் வீட்டை அடைந்தேன். என் தாயார் என்னிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தாள். மிகவும் கஷ்டப்பட்டுக் கொச்சைத் தமிழில் எழுதப் பட்டிருந்த அக்கடிதம் டாக்டர் சுசிலாவால்தான் எழுதப் பட்டிருந்தது என்பதை யறிந்தபோது எனக்கு ஒரு பரபரப்பு ஏற்பட்டது. கடிதத்தைப் பிரித்துப் படித்தேன்.

படித்து முடித்ததும், ஒரு பக்கம் சந்தோஷமும் இன்னொரு பக்கம் வருத்தமும் உண்டாயிற்று.

என்னதான் தைரியமாக இருந்தாலும் பெண்ணுள்ளம் சில சமயங்களில் ஏமாந்து விடுகிறது. அதற்கிணங்க, பூங்கோதையின் கணவன் சுந்தரமூர்த்தியைச் சந்திக்க நேரிட்டபோது அவனது பசப்பு வார்த்தைகளாலும், கவர்ச்சிகரமான பேச்சினாலும் சுசிலா மயங்கி விட்டாளாம். சுந்தரமூர்த்தியும் தனக்குக் கல்யாணமாகவில்லையென்றும் சுசிலாவையே கலியாணம் செய்து கொள்ளுவதாகவும் வாக்களித்தானாம். இதை எழுதிவிட்டு, "......நல்ல சமயத்தில் நீ வந்து உனது தோழியின் துயரக் கதையைக் கூறினாய். எனக்குச் சந்தேகம் வலுத்து விசாரிக்க, உனது தோழியின் கணவன்தான் என்னை ஏமாற்றப் பார்த்தவன் என்று தெரிந்தது. எப்படியோ பெரும் பாதகம் செய்வதினின்று நான் தப்பித்துக் கொண்டேன். இந்தச் சென்னை நகரில் என்னைப் போன்ற இளம் பெண் துணிந்து டாக்டர் தொழிலைத் தனியே செய்வது ஆபத்துத்தான். நான் தாயாருடன் சொந்தக் கிராமம் செல்கிறேன். உனக்கு என் இதயபூர்வமான நன்றி!" என்று அவள் கடிதத்தை முடித்திருந்தாள்.

* * *

கதை, காவியங்களில் வருவது போன்ற இச்சம்பவத்தால் என் மனம் குழம்பிற்று. குழம்பிய உள்ளத்துக்கு ஏதாவது மாறுதல் வேண்டுமென்பதற்காக அன்று மாலை என் கணவருடன் நான் சினிமாவுக்குச் சென்றேன். படம் ஆரம்பமாகும் சமயத்தில் இரு தம்பதிகள் எங்களுக்கு முன் சீட்டில் வந்து அமர்ந்தார்கள். அவர்கள் வேறு யாருமில்லை; பூங்கோதையும் அவள் கணவனும்தான்!

படம் முடிந்து வெளியே வரும்போது அவள் என்னை நெருங்கி, "ராஜி, என் கலி நீங்கிவிட்டதடி! என் கணவர் திடுதிப்பென்று மனம் மாறி ஒரு நாள் வந்து விட்டாரடி. அந்தப் பழைய காதலி இவரை ஏமாற்றி விட்டாளாம். மன்னிப்பு கேட்காத குறையாய், அழமாட்டாத குறையாய் என்னிடம் எல்லாவற்றையும் சொன்னாரடி!" என்றாள். அவளது சோகமிழந்த முகத்தில் அப்பொழுது களை ததும்பி வழிந்தது.

நான் ஒரு மௌனப் புன்னகையுடன் அவளிடமிருந்து விடை பெற்றுக்கொண்டேன்.

# அனுதாபம்

குட்டிக் கதை 9

மனதை மயக்கும் மாலை நேரம். நவ நாகரிகமாக உடை அணிந்திருந்த ஒருவன், இருபதாம் நூற்றாண்டின் தார் போட்ட ரோட்டைப் பத்தாம் நூற்றாண்டின் ராஜபாட்டையாகப் பாவித்துத் தன்னந் தனியாக 'ராஜ நடை' போட்டுக் கொண்டிருந்தான். அவனுடைய பாதங்களை அலங்கரித்துக் கொண்டிருந்த பாதரட்சைகள் 'க்ரீக் க்ரீக், க்ரீக் க்ரீக்' என்று ஓசையிட்டுத் தங்கள் எஜமானருக்குப் 'பராக்' கூறிக் கொண்டு சென்றன. அவன் பூசிக்கொண்டிருந்த மல்லிகை அத்தரின் மணமோ, 'வடிவமில்லா வாசனை தான்!' என்று பாடாமல் பாடிக்கொண்டு சென்றது. நடுக்கடலின் மௌன அலைகளை நினைவூட்டுவதுபோல அவன் உடுத்தியிருந்த பட்டுச் சட்டை தென்றல் காற்றில் ஜிலுஜிலுத்தது. 'தங்கள் மானம் கப்பலேறுவது போதாதென்று என்னுடைய மானத்தையும் கப்பலேற்றுகிறீர்களே!' என்று எண்ணித்தானோ என்னமோ, அவன் கட்டியிருந்த வெள்ளைச் சல்லா வேஷ்டி, எதிர்க் காற்றின் துணைகொண்டு இரு கால்களுக்கும் இடையே நுழைந்து தலைப்பை வெளியே காட்டாமலிருந்தது. இவையொன்றையும் பொருட்படுத்தாமல் அவன் தன்னையும் தன் அழகையும் கண்டு எத்தனை நாரீமணிகள் பெருமூச்சு விடுகிறார்கள் என்று வழி நெடுக உயர்ந்து நிற்கும் மாட மாளிகைகளையும் கூட கோபுரங்களையும் கவனித்துக் கொண்டே சென்றான். அந்தப் பொல்லாத நாரீமணிகளோ, அவனைக் கண்டு தாங்கள் பெருமூச்சு விடாததோடு நிற்கவில்லை; தங்களைக் கண்டு அவனையே பெருமூச்சு விடச் செய்தார்கள்!

இந்த லட்சணத்தில் வழியில் கிடந்த ஒரு வாழைப் பழத் தோலை—பாவம், அவன் எப்படிக் கவனித்திருக்க முடியும்? அதன் மேல் காலை வைத்துவிட்டான்.



அவ்வளவுதான்; 'சரேல்' என்று சறுக்கிற்று. 'தொபுகடீர்' என்று கீழே விழுந்தான்.

அடுத்த நிமிஷம் அவனைச் சுற்றி ஒரு சிறு கூட்டம் கூடி விட்டது.

"த்சொ, த்சொ, த்சொ! பார்த்து வந்திருக்கக் கூடாதா, ஸார்?" என்றார் ஒருவர்.

"ஏதாவது அடி, கிடி பட்டதோ?" என்றார் இன்னொருவர்.

"வேஷ்டி, சட்டையெல்லாம் ஒரே மண்ணாகி விட்டதே!" என்று சொல்லிக் கொண்டே, மற்றொருவர் அவற்றின் மீதிருந்த மண்ணைத் தட்டினார்.

"அதெல்லாம் போனாற் போகிறது, ஸார்! ஆசாமி எந்தவிதமான காயமும் இல்லாமல் தப்பினாரே, அதைச் சொல்லும்!" என்றார் மற்றும் ஒரு வறட்டுப் பேர்வழி.

கீழே விழுந்தவனுக்கு அவர்களுடைய அனுதாபம் அந்தச் சமயத்தில் ஆறுதல் அளிக்கக் கூடியதாயில்லை. அதற்குப் பதிலாக அது அவமானத்தைத் தான் அளித்தது. அவன் 'சட்'டென்று விழுந்த சுவடு தெரியாமல் எழுந்து மேலே நடந்தான். 'இன்னும் கொஞ்ச நேரம் தாமதித்தால் நம் பல்லையே பிடித்து ஆட்டிப் பார்த்தது விடுவார்கள் போலிருக்கிறதே! நல்ல ஜனங்கள், நல்ல அனுதாபம்!' என்று அவனுடைய வாய் முணுமுணுத்தது. அடுத்த கணம் அவனைச் சுற்றிக் கூடியிருந்த கூட்டம் ஒரு 'வந்தனத்'துக்குக்கூட வழியின்றி கலைந்தது!



அவர்கள் அனைவரும் போன பிறகு வாழைப் பழத் தோல் தனக்குத்தானே சொல்லிக் கொண்டது:

"நசுக்கியவனுக்காகத்தான் எல்லோரும் அனுதாபப் படுகிறார்களே தவிர, நசுக்கப்பட்டவனுக்காக யாருமே அனுதாபப் படவில்லையே!"

—விந்தன்

# கண்ணனைக் கண்டாள்!

ஸோமாஸ்

கண்ணனின் மனதை அல்லும் பகலும் அனவரதமும் உறுத்திக் கொண்டிருந்த விஷயம் அம்புஜத்தைப் பற்றியது தான். விவாகத்துக்கு முன்பும் அம்புஜம்தான் அவன் மனதை இடைவிடாது அலைக்கழித்தாள். இப்பொழுதும், விவாகமான பிறகும், அம்புஜம்தான் அவன் மனதில் குடியிருந்து அவனைத் தூங்கவொட்டாமல் செய்தாள்.

அம்புஜத்தைப் பார்த்து ஆசை கொண்ட கண்ணன், அவளை விவாகம் செய்து கொள்ள எடுத்துக் கொண்ட முயற்சி கொஞ்சமல்ல. அதற்காக அவன் ஒரு நாடகமே நடிக்க வேண்டியிருந்தது. தாயாரிடம் 'அம்மா, இந்தப் பெண்ணை எனக்கு ரொம்பவும் பிடித்திருக்கிறது. இவளைத்தான் பாணிக்கிரகணம் செய்து கொள்வேன்' என்று கண்ணனால் தைரியமாகச் சொல்ல முடியாதே! அதற்காக அவன் சுலபமான வழியொன்று கண்டு பிடித்தான். அவன் தாயார் அவனுக்கு எந்தப் பெண்ணைப் பார்த்தாலும் கண்ணன் கண்ணை மூடிக் கொண்டு ஒரேயடியாக "வேண்டாம்" என்று மறுத்து வந்தான். கடைசியில் அம்புஜத்தின் 'சான்ஸ்' வந்தது. கண்ணன் கண்களை அகலத்திறந்து குதூகலத்துடன் அவளைப் பார்த்துத் தன் சம்மதம் தெரிவித்தான். அவ்வளவுதான், விவாகம் முடிந்தது.

அம்புஜத்தைக் கண்ணனுக்கு விவாகம் செய்து வைத்த அவன் தாயார் அவன் பிடிவாதத்துக்காகத்தான் அந்தச் சம்பந்தத்துக்கு இணங்கினாள். இந்த விஷயம் முதலில் கண்ணனுக்குத் தெரியவில்லை. போகப் போகத்தான் தெரிய வந்தது. எத்தனையோ நல்ல இடங்களையெல்லாம் விட்டு விட்டுக் கண்ணன் ஏழை அம்புஜத்தை மணக்க இணங்கியதில் அவன் தாயாருக்கு மிகவும் அதிருப்தி. அந்த அதிருப்தி முழுவதும் அம்புஜத்தின்மேல் திரும்பி விட்டது. கண்ணனின் பிடிவாதத்துக்காக அவளை அவனுக்கு மணம் செய்து வைத்தாளே தவிர, பிறகு அவளை அழைத்துக் கொள்ளுவதைப் பற்றிய பேச்சே எடுக்கவில்லை. அம்புஜத்தின் பெற்றோர் எவ்வளவோ முயன்றும் ஒன்றும் பயன்படவில்லை. இப்படியே இரண்டு வருஷங்கள் சென்று விட்டன.



அப்பொழுது கண்ணன் கலாசாலையிலே படித்துக் கொண்டிருந்தான். சுந்தரம் புதிதாகக் கலாசாலையில் வந்து சேர்ந்தான். கண்ணனும் சுந்தரமும் இணைபிரியாத நண்பர்களானார்கள். ஒரு நாள் சுந்தரத்தோடு கண்ணனும் அவன் மாமா வீட்டுக்குப் போனான். சுந்தரம் தன் மாமா வீட்டில்தான் இருந்து படித்தான்.

கண்ணன் அந்த வீட்டினுள் புகுந்ததும் அம்புஜம்தான் அவன் கண்ணில் பட்டாள். அந்த மின்னல் தாக்குதல் கண்ணனை அசடாக்கி விட்டது. அடுத்த கணம் அம்புஜம் மின்னலைப் போலவே மறைந்து விட்டாள். அப்புறம் கண்ணன் அடிக்கடி அம்புஜத்தின் கண்ணில் பட ஆரம்பித்தான். சுந்தரத்தின் முயற்சி காரணமாக அவன் தங்கை அம்புஜத்துக்கும் கண்ணனுக்கும் விவாகம் நடந்தது.

கண்ணனின் தகப்பனார் காலமாகும் போது கண்ணனுக்கு வீடு, நிலம், ரொக்கம் எல்லாம் வைத்து விட்டுத்தான் போனார். கண்ணன் பி. ஏ. பாஸ் செய்து விட்டு வேலையில்லாமல் இருந்தான். வேலைக்குப் போக வேண்டிய அவசியமே இருக்கவில்லை.

கண்ணன் தான் மனப்பூர்வமாகக் காதலித்த பெண்ணையே மணந்து கொள்ள முடிந்ததில் அடைந்த ஆனந்தத்தை அளவிட முடியாது. ஆனால் இன்னொரு விஷயம் அவன் மனதில் புகுந்து கொண்டு தாங்க முடியாத மகிழ்ச்சியை அளித்துக் கொண்டிருந்தது. அது ஒன்றும் அப்படிப் பிரமாதமான விஷயமல்ல; அவனுக்கு அப்பொழுது வேலை

கிடைக்காததுதான் அந்த மகிழ்ச்சிக்குக் காரணம். கல்யாணம் ஆகும்போது வேலையில் இருப்பதைத்தானே எல்லோரும் விரும்புவார்கள்? கண்ணன் சுத்தப் பைத்தியக்காரன் போலிருக்கிறதே என்று நினைத்து விடாதீர்கள். வேலையில் இருந்தால் தினந்தோறும் மனைவிக்குக் கடிதம் எழுத முடியுமா? அதனால்தான் அவன் வேலைக்குப் போகவில்லை.

ஆனால் கொஞ்ச நாட்களுக்குத்தான் இந்த மகிழ்ச்சி அவன் உள்ளத்தில் நிலைத்திருந்தது.

கல்யாணம் முடிந்ததும் அம்புஜம் தன் பெற்றோர் இருக்கும் ஊருக்குப் போய் விட்டாள்; கண்ணனின் விருப்பப்படி கடிதமும் எழுதினாள். அந்தக் கடிதங்கள் தான் அவன் மகிழ்ச்சிக்கு உலை வைத்தன.

கண்ணன் எங்கேயாவது வேலையில் இருந்தால் அவன் மனைவி எழுதும் கடிதங்கள் ஆபீசுக்கு வந்துவிடும் அல்லவா? இப்பொழுது அந்தக் கடிதங்கள் அவன் வீட்டுக்கு அல்லவோ வந்து தொலைகின்றன? அத்துடன் போதாக் குறைக்கு அவன் அம்மா அல்லவோ அக்கடிதங்களை முதலில் பார்த்துத் தொலைக்கிறாள்! இதற்கு என்ன செய்வது? தனக்கு வரும் கடிதங்களை அம்மா பார்க்கக் கூடாது என்று எப்படி அவன் அம்மாவிடமே சொல்லுவான்? அவன் தாய் வார்த்தை தட்டியறியாத தனயன். 'தாயிற் சிறந்த ஒரு கோயில் இல்லை' என்னும் முதுமொழியைச் சரியாகக் கடைப்பிடிப்பவன். (அந்த ஊரில் கோயில் இல்லை என்னும் விஷயத்துக்கு நாம் முக்கியத்துவம் கொடுக்க வேண்டியதில்லை!)

போனவாரம் அம்புஜத்தினிடமிருந்து கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தைப் பிரித்துப் பார்த்துவிட்டு அம்மா அவனிடம் கொடுத்தாள்.

கண்ணன் ஒன்றும் சொல்ல முடியாமல் சிரமப் பட்டுக் கொண்டு "ஏன் அம்மா, கடிதாசு உன் பெயருக்கு வந்ததா?" என்று கொஞ்சம் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு கேட்டு விட்டான். அதில் ஒருவாறு நாசூக்காகத் தன் அபிப்பிராயத்தையும் வெளியிட்டு விட்டதில் கண்ணனுக்குக் கரை கடந்த சந்தோஷம்.

"இல்லை அப்பா, கடிதாசு உன் பெயருக்குத்தான் வந்தது. எனக்குத் தெரியாமல் உங்கள் இரண்டு பேருக்கும் என்ன இரகசியம் இருக்கப் போகிறது என்று கடிதாசைப் பிரித்துப் பார்த்தேன்!" என்று அவன் தாயார் சர்வ சாதாரணமாகச் சொல்லி அந்த விஷயத்துக்கு முடிவு கட்டி விட்டாள்.



கண்ணனின் மனம் மாத்திரம் அந்த விஷயத்தை அவ்வளவு சீக்கிரம் முடிவு கட்டிவிடுவதாக இல்லை.

'புதிதாக மணம் செய்து கொண்ட தம்பதிகள் கடிதம் எழுதிக் கொள்ளுவது என்றால், அதில் எத்தனையோ இருக்கும். ஏதோ சிறிசுகள் பிதற்றிக் கொண்டிருக்கிறதாக்கும் என்று இருந்தால் நன்றாயிருக்கும். இதற்காக அம்மாவிடம் கோபித்துக் கொள்ளுவதில் பயன் இல்லை. இனிமேல் கடிதம் எழுத வேண்டாம் என்று அம்புஜத்துக்கு எழுதிவிட வேண்டும்'—என்று நினைக்கும்போதே கண்ணனின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகி விட்டது. இந்த இறுதிக் கடிதத்தை அவன் அருமை அம்புஜம் எப்படித் தாங்குவாள்! ஹா!

கண்ணனின் உத்தரவுப்படி அம்புஜம் கடிதம் எழுதுவதை நிறுத்திவிட்டாள். கண்ணன் இறகொடிந்த பறவையைப் போலானான். அவனுக்கு இப்போதெல்லாம் வீட்டில் இருப்புக் கொள்ளுவதேயில்லை. எப்படியாவது வேலை தேடிக் கொண்டுவிட வேண்டும் என்று அவன் எவ்வளவோ முயன்றான். அவன் விரும்பிய உடனே வேலை கிடைத்துவிடுமா? ஊர் சுற்றியதுதான் மிச்சம். இப்பொழுது அம்புஜத்தை நினைத்து அவன் மனம் பல விதத்திலும் தவித்தது.

அம்புஜத்தைப் பிறந்த வீட்டிலேயே விட்டு வைப்பதற்கா கண்ணன் அவளைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டான்? கண்ணனுக்கு ஒரு யோசனையும் ஓடவில்லை. அம்மாவிடம் அம்புஜத்தைப் பற்றிய பேச்செடுப்பதற்கே அவனுக்குத் தைரியம் இல்லாமலிருந்தது.

ஒரு நாள் கண்ணன் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு, "அம்மா, எத்தனை



காலைக்கு நீ ஒருத்தியே சமைத்துப் போட்டுப் பாடு படுவாய்? நீ குனிந்து, நிமிர்ந்து, பரிமாறி, எச்சில் தட்டை அலம்பி எல்லாக் காரியங்களையும் செய்வதைப் பார்க்க என் மனசு தாங்கவில்லை, அம்மா...!" என்று மிகவும் அநுதாபத்தோடு சொன்னான். அந்தக் குரலில் எதையோ எதிர்பார்க்கும் ஒருவித ஆர்வமும் தொனித்தது.

"அப்பா, கண்ணா! உனக்குச் சமைத்துப் போடுவதில் எனக்கு என்னடா சிரமம்? நீ இத்தனை அன்போடு சொன்னதே எனக்கு எவ்வளவோ திருப்தியாயிருக்கிறது. உனக்கு முன்பெல்லாம் ஒன்றும் தெரியாது. இப்பொழுதுதான் உனக்குக் குடும்பக் கஷ்டம் தெரிகிறது. நீ எப்போதும் மனசு மாறாமல் இப்படியே இருந்தால் எனக்கு அதுவே போதுமடா, கண்ணா!" என்று அவன் தாயார் அன்பு ததும்பும் குரலில் சொன்னாள்.

கண்ணனுக்கு இப்போது மிகவும் கஷ்டமாயிருந்தது. இவ்வளவு தூரம் பேச்சை எடுத்த பின்பு அம்புஜத்தைப் பற்றி எப்படி ஆரம்பிப்பது என்று அவனுக்குத் தெரியவில்லை.

"அம்மா, அதற்கு நான் சொல்லவில்லை. அம்புஜத்தை வேணுமானால்... வரச் சொல்லி...எழுதேன். அவள் அங்கே என்ன வெட்டி முறிக்கிறாள்?" என்று ஆரம்பித்தான் கண்ணன்.

"எனக்கு ஒரு சிரமமும் இல்லை. வேணுமானால் உன் அத்தைக்குக் கடிதாசு எழுதி அவளை வரவழைத்துக் கொள்ளலாம். அவளும் இங்கே வந்து இருக்கணும் என்று ரொம்ப ஆசைப்படுகிறாள். உனக்கு ஏதாவது ஒரு வேலை கிடைத்த பிறகுதான் அம்புஜத்தை வரவழைக்கணும். அதற்கு முன்னாலே அந்தப் பேச்சே பேசப்படாது. நாமாக வலியப் போய் அந்த ரம்பையைக் கலியாணம் பண்ணிக் கொண்டதனாலே அவர்களுக்குத் திமிர் ரொம்ப அதிகமாயிருக்கிறது. இன்றைக்கே அத்தைக்கு ஒரு கடிதாசு எழுதிப் போட்டு விடுகிறேன். உன் மனசு கஷ்டப்படாமல், அத்தை எனக்கு ரொம்ப ஒத்தாசையாக இருப்பாள்!" என்று சொன்னதும் கண்ணன் பதில் பேசத் தெரியாமல் திணறிப் போய் விட்டான். கிணறு வெட்டப் பூதம் புறப்பட்ட கதையாக அல்லவா ஆகிவிட்டது? கண்ணன் தலையைக் குனிந்து கொண்டு அங்கிருந்து நழுவிவிட்டான்.

அன்றைய தினத்திலிருந்து கண்ணனின் போக்கே மாறிவிட்டது. எங்கெங்கோ அலைந்து விட்டு இரவு வெகு நேரம் கழித்து வரலானான். சில நாட்கள் நண்பன் வீட்டில் தங்கிவிட்டதாகச் சொல்லி இரண்டு நாள் தாமதித்து வருவான்.

கண்ணனின் அம்மாளுக்குக் கவலை அதிகமாய்ப் போய்விட்டது. அவள் மனம் விபரீத எண்ணங்களையெல்லாம் எண்ணி ஏங்கியது. ஏற்கெனவே குழம்பிக்கிடந்த அவளுக்கு அன்று வந்த அந்தக் கடிதம் இன்னும் குழப்பத்தை உண்டு பண்ணி விட்டது.

"அன்புள்ள கண்ணனுக்கு,

உங்கள் கடிதம் கிடைத்தது. நான் சொன்னபடி எல்லா ஏற்பாடுகளையும் செய்திருப்பீர்கள் என்று நம்புகிறேன். அம்மாவின் கைப் பெட்டியைத் திறக்கச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை என்று எழுதியிருக்கிறீர்கள். சந்தர்ப்பம் தானாகவே வந்து குதிக்குமா? நாம்தான் சந்தர்ப்பத்தை, சமய சந்தர்ப்பம் பார்த்துச் சிருஷ்டித்துக் கொள்ள வேண்டும். அம்மா கோயிலுக்குப் போயிருக்கும் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு கைப் பெட்டியை உங்கள் அறைக்கே எடுத்துச் சென்று காரியத்தை முடித்து விடுங்கள். எனக்கு அவசரமாக நூறு ரூபாய் வேண்டும்.

மஞ்சுளா."

இந்தக் கடிதம் கண்ணனின் தாயாரின் கண்களில் பட்டு விட்டதுதான் கண்ணனுக்குப் பெரிய ஆபத்தாய்ப் போய் விட்டது.

"அப்பா, கண்ணா! அந்த மஞ்சுளா யாருடா? இந்தமாதிரிக் கன்னாபின்னா சிநேகமெல்லாம் வேண்டாம், அப்பா! நம்ம குடும்ப கௌரவமே அடியோடு தொலைந்து போகும். பணம் வேண்டுமானால் என்னைக் கேட்கக் கூடாதா,

கண்ணு? நீ என்னத்துக்காக எனக்குத் தெரியாமல் என் பெட்டியிலிருந்து திருட வேண்டும்?'' என்று அவன் அம்மா பிரலாபிக்க ஆரம்பித்து விட்டாள்.

நடுங்கும் கைகளுடன் கடிதத்தை வாங்கிப் படித்தான் கண்ணன்.

''எனக்கு ஒன்றுமே புரியவில்லையே, அம்மா! இதெல்லாம் யாருடைய சூழ்ச்சி!'' என்றான் கண்ணன்.

பிறகு அவன் தாயார் அவனோடு ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை.

இரண்டு நாட்களுக்குப் பிறகு வாசலில் வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டது. வண்டியிலிருந்து இறங்கி உள்ளே வந்தது வேறு யாரும் இல்லை; அம்புஜம்தான்!

''அம்மா, நமஸ்காரம் பண்ணுகிறேன்'' என்றாள் அம்புஜம்.

''தீர்க்காயுசா யிருடி, அம்மா! இப்பொழுதுதான் என் வயிறு குளிர்ந்திருக்கிறது!'' என்றாள் கண்ணனின் தாயார்.

கண்ணன் பேச்சுக் குரல் கேட்டு வெளியே வந்தான். அம்புஜம் அவனையும் நமஸ்கரித்தாள்.

''அப்பா கண்ணு, இனிமேல் அவள் ஆயிற்று, நீ ஆயிற்று. கடிதாசு எழுதிப் போட்டு அவளை வரவழைத்து விட்டேன். அவள் கண் கலங்காமல் பார்த்துக் கொள்ள வேண்டியது உன் பொறுப்பு!'' என்று சொல்லிவிட்டு அவன் அம்மா உள்ளே போய்விட்டாள். அம்புஜமும் கண்ணனும் ஓரக் கண்களால் பார்த்துக் கொண்டனர்.

''அப்பப்பா! எவ்வளவு கஷ்டப்பட்டு நான் இங்கே வந்திருக்கிறேன், தெரியுமா? அந்தக் கடிதத்தை இடது கையால் எழுதிப் பழகிக் கொண்டு கடைசியில் நல்லதாக ஒன்று எழுதி, அண்ணுவிடம் கொடுத்து வேலூரிலிருந்து சென்னைக்கு வந்து தபாலில் சேர்க்கச் சொன்னேன். இல்லாவிட்டால் நான் வந்திருக்க முடியாது'' என்று அம்புஜம் அன்று இரவு கண்ணனுக்கு எதிரில் உட்கார்ந்து கொண்டு சொன்னாள்.

''நானுந்தான் உன்னை வரவழைக்க ரொம்ப சிரமம் எடுத்துக் கொண்டேன். வெய்யிலில் அலைந்து, வீட்டில் படுக்காமல் இரண்டு நாள் மூன்று நாள் பட்டினி கிடந்து தவித்துப் போனேன். ஆனால் அம்புஜம், நீ ரொம்பக் கெட்டிக்காரி. கடிதம் ரொம்பப் பிரமாதமாக எழுதியிருந்தாய்!'' என்று கூறிக் கண்ணன் அவள் கன்னத்தில் ஒரு தட்டுத்தட்டினான்.

அம்புஜத்தின் கன்னங்கள் சிவந்தன.

# ஏழைகள் வாழ்த்தும் பட்ஜெட்

ரஜனி

கொழும்பு, ஜூலை, 26—

இலங்கை நிதி மந்திரி ஸ்ரீ ஜே. ஆர். ஜயவர்த்தன வெளியிட்டிருக்கும் அடுத்த வருட பட்ஜெட் பொதுவாக எல்லோருக்கும் திருப்தியைக் கொடுத்திருக்கின்றது. இதை ஏழைகளின் பட்ஜெட் என்று வர்ணிக்கலாம். இதுவரை ரூ. 2,400 வரையில் வருஷ வருமான மிருந்தவர்களுக்கு வருமான வரி இல்லாதிருந்தது. இந்த எல்லையை ரூ. 4,800 ஆக அதிகரித்திருப்பது சொற்பச் சம்பள முடையவர்களுக்கு நிவாரண மளிப்பதாகும். அரிசி, மாவு முதலிய அத்தியாவசியப் பொருள்களைக் குறைந்த விலையில் ஜனங்களுக்கு விநியோகிக்கவும் உதவித் தொகை யளிப்பதை நிதி மந்திரி அதிகரித்திருக்கிறார். இதனால் அரிசியின் விலை படி முப்பத்தாறு சதத்திலிருந்து முப்பது சதமாகவும் மாவின் விலை இருபத்தி எட்டரை சதத்திலிருந்து இருபத்திமூன்று சதமாகவும் குறையும். ரொட்டியின் விலையை பவுண்டு முப்பது சதத்திலிருந்து இருபத்தைந்து சதமாகவும் அரசாங்கம் குறைத்திருப்பதை ஏழை ஜனங்கள் வாயார வாழ்த்துவார்கள். இவை தவிர அனேகம் அத்யாவசியப் பொருள்களின் இறக்குமதித் தீர்வைகளையும் நிதி மந்திரி குறைத்திருக்கிறார். வரி செலுத்த முடியாதவர்களுக்கு நிவாரணம் அளித்து அதிக வருமான முடையவர்களுக்கு அதிக வரி விதிப்பதுதான் தற்கால [வரி விதிப்புக் கொள்கையின் முக்கியமான அடிப்படை. இந்தக் கொள்கையை அனுசரித்து நிதி மந்திரியின் அடுத்த வருட பட்ஜெட் தயாரிக்கப்பட்டிருப்பது உண்மையில் நிதி மந்திரி பெருமைப் படக் கூடிய விஷயமாகும்.

## ஊமை பேசிய அதிசயம்!

இவ்வருட ஆடிவேல் உற்சவங்கள் பிரமாதமான முக்கியத்துவம் பெற்றுவிட்டன. கொடிய வரட்சியினால் குடி தண்ணீருக்குக் கடுமையான தட்டுப்பாடு ஏற்பட்டதால் உற்சவத்துக்கு யாரும் வரமாட்டார்கள் என்று எல்லோரும் கருதினார்கள். அரசாங்கமும் " தண்ணீர் இல்லை; கதிர்காமம் போகாதீர்!" என்று அறிக்கைக்கு மேல் அறிக்கையாக வெளியிட்டுக் கொண்டிருந்தது. ஆனால் முருக பக்தர்கள் இதற்கெல்லாம் அஞ்சவில்லை. ஆயிரக் கணக்கிலே அங்கு திரண்டு சென்றனர். எப்படியும் கடைசி நேரத்தில் மழை வந்துவிடுமென்றும் வேல்முருகன் தங்களைக் கைவிட மாட்டானென்றும் அவர்கள் உறுதியாக நம்பினார்கள். அவர்களுடைய நம்பிக்கை வீண் போகாமல் மலைப் பிரதேசத்தில் மழை பொழிந்து மாணிக்க கங்கையில் நிறைய ஜலம் வந்துவிட்டது. பக்தர்கள் ஆனந்தமாக நீராடி ஸ்வாமி தரிசனம் செய்யும் சந்தர்ப்பம் இவ்வருடம் கிடைக்குமென்று ஒருவரும் எதிர்பார்க்கவே யில்லை.

கதிர் காமத்தில் இவ்வருடம் இன்னொரு அதிசயமும் நடந்தது. சென்ற எழெட்டு வருடங்களாக ஊமையாயிருந்த ஒரு தோட்டத் தொழிலாளி மாணிக்க கங்கையில் ஸ்நானம் செய்ததும் இழந்த குரலைத் திடீரென்று திரும்பவும் பெற்றான். கடுமையான நோயினால் அவனுடைய நாக்கு உள்ளே இழுத்து ஊமையா யிருந்தானும். சென்ற எட்டு வருட காலமாகச் சமிக்ஞையினாலேயே அவன் பிறருடன் பேசி வந்தானும். மாணிக்க கங்கையில் ஒரு முழுக்குப் போட்டு எழுந்தவுடன் அவன் மளமள வென்று பேச ஆரம்பித்து விட்டதாகக் கூறப்படுகிறது.

## பிரசார மும்முரம்

இலங்கையிலுள்ள அனேகம் இந்தியர்கள் பௌத்தர்களாக மதம் மாற விரும்புகிறார்களாம். அவர்களிடம் பௌத்த மதப் பிரசாரம் செய்வதற்காக பாரத் பௌத்தர்கள் சங்கம் என்ற பெயருடன் ஒரு புதிய சங்கம் ஆரம்பிக்கப் பட்டிருக்கிறது. அதற்கு திரு ஏ. எஸ். ஜான் என்பவர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். இந்தியர்களிடையிலும் யாழ்ப்பாணத் தமிழர்களிடையிலும் தீவிரமாக பௌத்த மதப் பிரசாரம் செய்ய இந்தச் சங்கம் திட்டமிட்டிருக்கிறது. எனினும் இச்சங்கத்தினர் நினைப்பதைப் போல மதம் மாறவேண்டுமென்ற எண்ணம் அதிகமாக இந்துக்களிடம் இருப்பதாகத் தெரியவில்லை. இதற்கு மாறாக இந்துமதப் புனருத்தாரணத்தில் அவர்களுக்குப் புதிய ஊக்கம் பிறந்திருக்கிறது. நாடெங்கும் நடக்கும் கூட்டுப் பிரார்த்தனைகள் இதற்குப் பிரத்தியட்ச உதாரணமாகும்.

# பொருளைப் போட்ட இடம்



**பி. எஸ். ராமையா**

என் நண்பர் அருணகிரி முதலியாரிடமிருந்து 'போன்' வந்தது. என்னை உடனே அவசியம் புறப்பட்டு வரும்படி அழைத்தார். மயிலாப்பூர் பஸ் ஏறி அவர் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தேன்.

என்னைக் கண்டவுடன் "நல்ல வேளை, உடனே புறப்பட்டு வந்தீர்களே! இன்னும் ஒரு மணி நேரத்தில் ஊர்வலம் புறப்பட்டு விடும். அதற்குள் கொஞ்சம் காபி சாப்பிடுங்கள்" என்று உபசரித்துக் கொண்டே வீதியின் ஒரு புறமாகக் கையைக் காட்டினார்.

அவர் கைகாட்டிய திசையில், எதிர் சாரியில் பதினைந்து வீடுகள் தள்ளிப் பத்துப் பன்னிரண்டு கார்கள் நின்றிருந்தன. மேள வாத்திய, பாண்டு கோஷ்டிகளும், ஜனங்களுமாக பெரிய ஒரு கூட்டம் கூடி நின்றது. "என்ன ஊர்வலம்?" என்ற பாவனையில் முதலியாரைப் பார்த்தேன்.

அவர் என்னை உள்ளே அழைத்துக் கொண்டு போய் உட்கார வைத்துவிட்டு "எல்லோரும் அவரைப் புரொபஸர் ராதா ரமணன் என்று அழைக்கிறார்கள். வயது இருபத்தைந்துதானாம். வரப் பிரஸாதியாம். அவரிடம் ஒரு அதிசயமான ஏட்டுச் சுவடி அகப்பட்டிருக்கிறதாம். அதிலிருந்து ஒவ்வொருவனுடைய பூர்வ ஜன்மம், நடப்புப் பிறவி, வரப்போகும் நிலை எல்லாவற்றையும் விவரமாகப் படித்துச் சொல்லுகிறாராம். அது வல்லப கணபதி நாடியாம். நடப்புப் பிறவியைப் பற்றிச் சொல்லுவதெல்லாம் நம்முடன் கூடவே பிறந்து வளர்ந்து நேரில் கண்டவர்கள் சொல்லுகிற மாதிரி இருக்கிறதாம். அவருடைய அன்பர்களும் பக்தர்களும் இன்று அவருடைய பிறந்த நாளைக் கொண்டாடுகிறார்கள். யானை மேல் ஊர்வலத்திற்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். நீங்கள் இருந்து பார்த்துவிட்டுத்தான் போக வேண்டும். நான்கூட இன்னும் இரண்டு நாளில் புரொபஸரிடம் போய் எனக்கு நாடி பார்க்கச் சொல்லிக் கேட்கப் போகிறேன்" என்று பொங்கி வரும் உற்சாகத்தைக் கட்டுப் படுத்த முடியாமல் பேசினார்.



நான் கொஞ்சமும் உற்சாகமின்றி "உங்களுக்கு இந்த நாடி சோதிடத்திலெல்லாம் நம்பிக்கையிருக்கிறதா, என்ன?" என்றேன்.

"அதென்ன, அப்படிக் கேட்கிறீர்கள்? மற்றவர்கள் எப்படியோ, புரொபஸர் ராதா ரமணன் வாக்கை நம்பாமல் இருக்கவே முடியாது. ஹைகோர்ட்டில் ஒரு ஜட்ஜ் பதவி காலியென்றால் பெரிய பெரிய வக்கீல்களெல்லாம் ஓடி வருகிறார்கள் அவரிடம், தனக்கு அந்தப் பதவி கிடைக்குமா என்று அறிய!....... காலேஜில் பிரின்ஸ்பால் விலகினாரல்லவா? அந்தப் பதவிக்கு முயற்சி செய்யலாமா என்று கேட்க மூன்று பேராசிரியர்கள் வந்தார்களாம். அவர்களை விடப் படித்தவர்களா நாம்? இதிலெல்லாம் உண்மையில்லையென்றால் அவர்களே ஈடுபடுவார்களா?" என்றார் முதலியார்.

"அவர்களெல்லாம் படித்தவர்கள்தான் முதலியார். ஆனால் நம்ம தேசத்திலே இப்போது படிப்புக்கும் அறிவுக்கும் சம்பந்தமே கிடையாது. உள்ளேயிருக்கிற பாமரத்தை இந்தப் படிப்பினால் போக்க முடியாது; மூடக் கூட முடியாது. அவர்கள் எப்படியாவது போகட்டும். ஒன்றிற்கொன்று கோடிக் கணக்கான காதங்கள் விலகி நின்று சுழன்று கொண்டிருக்கும் பிரகிருதித் துண்டுகளுக்கும், கோளங்களுக்கும் ஒவ்வொரு வடிவம் கொடுத்து, உயிரும் கொடுத்துக் கதைகளாக எழுதிய காலத்தில், அந்த சக்திகள் தனி மனிதனுடைய வாழ்க்கையைப் பாதித்து நடத்தி வைப்பதாக நம்பினார்கள். அவற்றின் தன்மைகளைப் பற்றிய அறிவு வளர்ந்து தெளிவு ஏற்பட்ட பிறகு கூட அதே நம்பிக்கை நீடிப்பது நியாயம்தானா?" என்றேன் கசப்புடன்.

"அதெல்லாம் வெள்ளைக்காரன் ஆராய்ச்சிதானே, ஸார்!

நம்முடைய சோதிட சாஸ்திரம் பொய் என்று இதுவரை யாரும் நிரூபிக்கவில்லை. இனிமேலும் நிரூபிக்கப் போவதில்லை. நம்ம ஊர் அனங்கராஜனைத் தெரியுமல்லவா உங்களுக்கு? அவன்தான் அரியநாத முதலியார் மகன். அவனுக்குச் சோதிடன் சொன்னது என் கண்ணெதிரில் பலித்ததைக் கண்டேனே! அதற்கென்ன சமாதானம் சொல்ல முடியும் உங்களால்?'' என்றார் முதலியார்.

அவர் குறிப்பிட்ட நபரை நினைவுபடுத்திக் கொள்ள முயன்றேன். நான் கிராமத்தை விட்டு வந்து பல வருஷங்களாகி விட்டதால் இயலவில்லை.

"யாரைச் சொல்லுகிறீர்கள்?'' என்றேன்.

முதலியார் உற்சாகத்துடன் சொல்லத் தொடங்கினார்:

"மேலத் தெருவில் எங்கள் வீட்டுக்கு நேர் பின்புறத்திலிருந்தது அவர்கள் வீடு. அதுதான் ஸார், பூவரச மரத்து வீடு என்று கூடச் சொல்லுவார்களே! அங்கேயிருந்த அரியநாத முதலியாரை நினைவில்லையா உங்களுக்கு? சரி, பரவாயில்லை. அவருக்கு ஒரு மகள், ஒரு மகன். மகளைத் தூத்துக்குடியில் கட்டிக்கொடுத்திருக்கிறது. மகன்தான் அனங்கராஜன். முதலியார் உயிரோடிருக்கும் போதே அவனுக்குக் கலியாணம் செய்து விட விரும்பினார். அப்போது அவனுக்குப் பத்தொன்பது வயது.

"அவருக்கு ஜாதகம், சோதிடத்திலெல்லாம் அசைக்க முடியாத நம்பிக்கை. பையனுக்கு ஜாதகம் குறித்து வைத்திருந்தார். அதை ஒரு சோதிடரிடம் கொடுத்துக் கலியாணம் எப்போது நடக்குமென்று பார்த்துச் சொல்லச் சொன்னார். சோதிடர் அதைப் பார்த்துவிட்டு 'ஆயுள் பாவம் பலமாக இல்லை. அவனுடைய இருபத்தியோராவது வயதில் ஒரு மரண கண்டம் இருக்கிறது. அது தாண்டின பிறகு கலியாணம் செய்வதுதான் உசிதம்' என்றார்.

"முதலியாருக்கு மனதிலே கிலி பிடித்துக் கொண்டது. தமது அருமை மகன் அற்பாயுளாகப் போய் விடுவானோ என்ற ஏக்கம் உள்ளூற அரிக்க ஆரம்பித்தது. அதிலேயே உடல் நிலை கெட்டுப் படுத்து விட்டார். ஆறு மாதம் வியாதியுடன் போராடி விட்டுப் போய்ச் சேர்ந்தார்.

"போகுமுன் அப்பாவி மனிதன் தன் மனைவியையும் மகனையும் அழைத்து, சோதிடர் சொன்னதைச் சொல்லிவிட்டார். அவன் அவசரப்பட்டுக் கலியாணம் செய்துகொண்டு ஒரு பெண்ணின் வாழ்க்கையைப் பாழாக்கி விட வேண்டாம் என்ற நல்ல எண்ணத்தோடேயே சொல்லியிருக்கலாம். ஆனால் அது விபரீதமாகப் பலனளித்தது. அவர் மனைவியையும் அது கவலையில் ஆழ்த்திவிட்டது.

"அனங்கராஜன் மனதிலும் அது விசித்திரமான ஒரு மாறுதலைத் தோற்றுவித்தது. சோதிடர் சொல்லியபடி தான் இறக்கப் போவது நிச்சயம் என்றே நம்பி விட்டான்.

"முதலியார் இறந்த இரண்டாம் மாதம் அவர் மனைவி இறந்தாள். கருமாதிச் சடங்குக்காகப் போனவன், அனங்கராஜனைத் தேற்ற முயன்றேன். நான் சொன்னதற்கெல்லாம் அவன் உற்சாகமில்லாமல் பதில் சொல்லவே எனக்குக் கவலையாகிவிட்டது. அவர்கள் எனக்குத் தூர உறவினர்கள். ஆகையால் அவனை எங்கள் வீட்டில் வந்து இருக்கச் சொன்னேன்.

"எங்கள் வீட்டிலிருக்கும்போது அவன் என்னிடம் ஜாதக விஷயத்தைச் சொன்னான். அதைக் கேட்டு என் மனமும் சோர்ந்து போய்விட்டது. 'மரண கண்டம் நேரிடுமென்றால் அது ஏதோ ஒரு கிரகத்தின் கோளாறால்தான் இருக்கும்; ஆகையால் அதற்கு ஏதாவது சாந்தி, பரிகாரம் செய்யலாமா என்று பார்ப்போம்' என்று தைரியமூட்டினேன்.

"அனங்கராஜன் மனதில் நான் அளித்த தைரியம் உறைக்கவேயில்லை. 'மாமா! முடியப்போகிற விதியைத் தடுக்க முடியுமா? இன்னும் ஒரு வருஷம். அதற்குள் அநுபவிக்கக் கூடியதையெல்லாம் அநுபவித்துத் தீர்த்து விடுகிறேன்' என்று சொல்லிவிட்டு என் வீட்டை விட்டு வெளியேறி விட்டான்.

"அடுத்த வாரமே கிராமத்திலிருந்த சொத்தையெல்லாம் பணமாக்கிக் கொண்டு புறப்பட்டு விட்டான்.

"அவன் நேரே சென்னைக்குப் போய் அங்கே 'அநுபவிக்கிற' வழிகளிலே இறங்கி விட்டானென்று கேள்விப்பட்டேன். மனதுக்கு ரொம்ப வருத்தமாக இருந்தது. அதனால் அவனைத் தேடிக் கொண்டு சென்னைக்கு வந்தேன். அப்போது வந்ததுதான்; இங்கேயே தங்கிவிட்டேன். வியாபாரம், மகன், உத்தியோகம் என்று குடித்தனம் வேரூன்றி விட்டது.

"அனங்கராஜனைத் தேடிக் கண்டு பிடித்தேன். இங்கே அவன் யாரோ ஒரு பெண்ணைச் சேர்த்துக் கொண்டு அவளுடன்

பணத்தைக் கரைத்துக் கொண்டிருந்தான். இரண்டு மூன்று தடவை போய் அலைந்து கடைசியாக அவனைக் கண்டேன்.

“என்னைப் பார்த்தவுடன் அவன் உற்சாகத்துடன் ‘மாமா! நான் சாகப் பயப்படவில்லை. அது வரும்போது சந்தோஷமாக வரவேற்பேன். எனக்கு உலகத்திலே இனிமேல் நீர வேண்டிய ஆசையே இல்லை. அவளையும் அனுபவித்து விட்டேன்’ என்றான்.

“உன்னுடன் யாரோ பெண் இருக்கிறாளே, அவளைக் கலியாணம் செய்து கொண்டு விட்டாயா?”

“‘எனக்கென்ன பைத்தியமா, கலியாணம் கட்ட? ஏதோ போகிற வழியில் தங்கும் சத்திரம். அவளிடமும் விஷயத்தைச் சொல்லி விட்டேன். இருக்கிற வரையில் என்னிடம் பற்றிக் கொள்ளுவதில்தான் கண்ணும் கருத்துமாக இருக்கிறாள்.’

“‘இங்கே யார் யாரோ பிரபல சோதிடர்களெல்லாம் இருக்கிறார்களாமே, அவர்களிடம் உன் ஜாதகத்தைக் காட்டி ஏதாவது பரிகாரம் செய்து கண்டத்திலிருந்து தப்ப வழி யுண்டா என்று பார்க்கலாமே!’

“அனங்கராஜன் கடகடவென்று சிரித்தான். ‘யாரோ வழியில் போகிறவனுக்குப் பணத்தைக் கொடுக்க வேண்டுமென்கிறீர்களா? அவர்கள் சாந்தி பரிகாரத்தினால் போகிற உயிரை நிறுத்திவிட முடியுமா, என்ன? நீங்கள் கவலைப்படாமல் போங்கள், மாமா! நான் கையில் டிக்கெட்டு வாங்கிக் கொண்டு பிரயாணத்திற்கு எல்லாம் சித்தம் செய்து விட்டேன். இப்போது வந்து



அதை கிழித்து விடலாம் என்கிறீர்களே!' என்றான்.

"அதுவரையில் நான் அதைப் பற்றிச் சந்தேகப்படக்கூட இல்லை. அப்போது தான் தெரிந்தது, அவன் குடித்திருந்தானென்பது! அவன் வாயிலிருந்து குப்பென்று நாற்றமடித்தது. பதில் சொல்லாமல் பெரிய பாறாங்கல்லைத் தூக்குவதுபோல அழுந்திப் போன நெஞ்சுடன் திரும்பி விட்டேன்.

"ஒரு மாதத்திற்கெல்லாம் அனங்கராஜன் இந்தியா முழுவதும் சுற்றிவரப் பிரயாணம் புறப்படப் போகிறானென்று கேள்விப் பட்டேன். அவன் சோதிடர் சொன்ன சாவை எதிர்கொண்டு அழைக்கப் புறப்படுகிறானென்று பட்டது எனக்கு. உடனே தூத்துக்குடியிலிருந்த அவன் சகோதரிக்கு ஒரு தந்தி கொடுத்து வரவழைத்தேன். ஆனால் அவள் சென்னைக்கு வந்து சேருவதற்கு முன் தினம் அனங்கராஜன் ரயிலேறி விட்டான்!

"அந்தப் பெண் கோவென்று அழுதாள். 'எனக்கு முன்னமேயே தெரியாமல் போய் விட்டதே! என் தம்பி முகத்தை ஒரு முறை பார்க்கும் பாக்கியமாவது கிடைக்கப் போகிறதா, மாமா!' என்று கதறினாள்.

"அவன் எந்தப் பக்கம் போயிருக்கிறானென்று அறிய என்னென்னவோ முயற்சிகள் செய்தோம். பலன் கிடைக்கவில்லை. கடைசியில் அந்தப் பெண் கண்ணீரும் கம்பலையுமாக ஊருக்குப் புறப்பட்டுப் போனாள்.

"மேலும் ஐந்து மாதங்கள் வரையில் அனங்கராஜனைப் பற்றி ஒரு தகவலும் கிடைக்கவில்லை. ஒரு நாள் திடீரென்று எதிர்பாராவகையில் தூத்துக்குடியிலிருந்து ஒரு தந்தி வந்தது. அந்தப் பெண்ணின் கணவர் அனுப்பியிருந்தார். வடக்கே அலகாபாத்துக் கருகில் நடந்த ஒரு ரயில் விபத்தில் உயிரிழந்த நாற்பத்தியாறு பேர்களில் அனங்கராஜன் என்று ஒருவரும் இருப்பதாகவும், அவர் பெட்டியிலிருந்த ஒரு கடிதத்திலிருந்து விலாசம் கிடைத்ததாக ரயில்வேக்காரர்கள் தந்தி கொடுத்திருப்பதாகவும், என்னை உடனே புறப்பட்டுப் போகும்படியும், அவர் பின்னாலேயே மனைவியுடன் வருவதாகவும் தெரிவித்திருந்தார்.

"அன்றிரவே புறப்பட்டு அலகாபாத்துக்குப் போய்ச் சேர்ந்தேன். எஞ்சினுக்கு அடுத்த வண்டியிலிருந்த இருபத்திரண்டு பேர்கள் உயிரிழந்தார்கள். அதில் அனங்கராஜனும் ஒருவன். அந்த வண்டி விபத்திலே சுக்குநூறாகச் சிதறிப் போயிருந்தது. இறந்தவர்களில் சிலர் அடையாளமே தெரியாதபடி சிறு சிறு துண்டுகளாகி விட்டார்கள்.

அப்பளமாக நசுங்கிப் போயிருந்த ஒரு டிரங்குப் பெட்டியை என்னிடம் காட்டினார்கள். அதிலிருந்துதான் அனங்கராஜன் என்று கண்டு பிடித்த காகிதத்தை எடுத்ததாகச் சொன்னார்கள்.

"மறுநாள் அவன் சகோதரியும் அவள் கணவனும் வந்து சேர்ந்தார்கள். அதிகாரிகள் காட்டிய ஒரு குப்பல் உடல் துண்டுகளிலிருந்து அனங்கராஜனுடையவை என்று நாங்கள் நினைத்தவற்றைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு போய்க் கங்கையில் சேர்த்துவிட்டுத் திரும்பினோம்.

"இப்பொழுது என்ன சொல்லுகிறீர்கள்? ஜாதகம் பொய்யா? சோதிடன் சொன்னது பொய்யாயிற்றா? என் கண்ணெதிரில் கண்ட உண்மை இது!"—என்று முடித்து என்னை ஏற இறங்கப் பார்த்தார் முதலியார்.

நான் பதில் சொல்ல வாயெடுக்குமுன் தூரத்திலிருந்து பாண்டும், மேளமும் முழங்கிய ஒலி வந்தது. முதலியார் "சரி, அப்புறம் பேசுவோம்;வாருங்கள்! ஊர்வலத்தைப் பார்ப்போம்" என்று எழுந்திருந்தார். மௌனமாக அவருடன் வாசலுக்குப் போனேன்.

ஊர்வலம் புறப்பட்டு வந்து கொண்டிருந்தது. முன்னால் தெருவின் அகலத்திற்கு எழுதப்பட்ட ஒரு வர்ணப் படுதாவை இரு கொம்புகளில் கட்டிப் பிடித்துக் கொண்டு வந்தார்கள் இருவர். அதில் "கலியுக கணேச அவதாரம் புரொபஸர் ராதாரமணன் நீடூழி வாழ்க!" என்று எழுதப்பட்டிருந்தது. அதன் பின்னால் மேளமும், அடுத்து பாண்டு கோஷ்டியும் வந்தன. அதற்கப்பால் எல்லாரும் படித்தவர்கள் என்று காட்டும் உடைகளணிந்த பலர் வந்தனர். அவர்களில் சிலர் வாழ்க்கையில் பெரிய அந்தஸ்துகளிலும், மேல் படிகளிலும் இருப்பவர்கள் என்பது தெளிவாகத் தெரிந்தது.

அவர்களை யடுத்து வந்தது யானை. அதன் மேல் அம்பாரி வைத்து மலர் தோரணங்களால் அலங்கரிக்கப் பட்டிருந்தது. அம்பாரிக்குள் எதிர் வெய்யிலில் பளபளவென்று மின்னும் ஜரிகை ஆடைகள் தரித்து அமர்ந்திருந்தார் புரொபஸர் ராதாரமணன். யானைக்குப் பின்னால் மறுபடி ஒரு சிறிய ஜனக் கூட்டமும், அதற்கப்பால் வரிசையாகப் பல கார்களும் வந்து கொண்டிருந்தன.

ஊர்வலத்தின் முன் பகுதி நாங்கள் நின்ற வீட்டு வாசலைத் தாண்டியது. யானை வீட்டுக்கு நேரே வந்தவுடன் சற்று நின்றது.

மேன கோணங்களுக்கும் மேலே லாலை உயர்த்தி முதலியார் "பாருங்கள், ஸார்! அந்த முகத்திலே தெய்விகக் களை வீசுகிறதா, இல்லையா?" என்றார்.

புரொபஸர் ராதாரமணனை நிமிர்ந்து பார்த்தேன். அவரும் என் புறம் திரும்பிப் பார்த்தார். ஒரே ஒரு கணம்தான்; முகத்தைத் திருப்பிக் கொண்டு விட்டார்.

முதலியாரை அவசரமாக வீட்டின் உட்புறமாக இழுத்துக் கொண்டு போய் "அனங்கராஜன் இறந்து விட்டானென்பது உங்களுக்கு நிச்சயமாகத் தெரியுமா?" என்று கேட்டேன்.

முதலியார் "என்ன ஸார், இது? ஊர்வலத்தைக்கூட முழுவதும் பார்க்க விடாமல் இதற்காகவா இழுத்துக் கொண்டு வந்தீர்கள்? நான், அவனுடைய அக்காள், அவள் புருஷர் ஆக மூன்று பேரும் அலகாபாத்துக்குப் போய் வந்தோமென்கிறேனே!" என்றார் சலிப்புடன்.

"முதலியார்! புரொபஸர் ராதாரமணனை எனக்கு முன்பே தெரியுமென்று நினைக்கிறேன். நான்கு வருஷங்களுக்கு முன் நன்றாகக் குடித்து விட்டுத் தெருவிலே கிடந்தான் ஒருவன். அவனை ஒரு ரிக்ஷாவில் போட்டு அவன் சொன்ன விலாசத்திற்கு அனுப்பி வைத்தேன். அவன்தான் இந்தப் புரொபஸர். இன்றைக்கு இந்தக் கலாட்டாவெல்லாம் முடியட்டும். நாளைக் காலையில் இருவரும் முதல் வேலையாக புரொபஸரைப் பார்க்கப் போவோம்" என்று சொல்லி விட்டுப் புறப்பட்டேன்.

மறு நாள் காலையில் ஏழரை மணிக்கெல்லாம் அருணகிரி முதலியார் வீட்டுக்குப்போனேன். அவர் என்னை எதிர்பார்த்து ஆவலுடன் தயாராக இருந்தார். இருவரும் புரொபஸர் ராதாரமணன் வீட்டுக்குப் புறப்பட்டோம்.

அங்கே எங்களுக்கு முன்பே வந்து எட்டுப் பேர்கள் காத்திருந்தார்கள். புரொபஸர் பூஜையிலிருப்பதாகவும் வெளியே வர அரை மணி நேரமாகுமென்றும் சொன்னார்கள். காத்திருந்தோம்.

சரியாக எட்டு மணிக்குப் புரொபஸரின் நாடி படிக்கும் அறைக் கதவு திறக்கப்பட்டது. ஒரு குமாஸ்தா வந்திருப்பவர்களை உபசரித்து அந்த விசாலமான அறைக்குள் அழைத்துச் சென்று, தரையில் விரித்திருந்த ரத்ன கம்பளத்தில் உட்கார வைத்தான்.

ஐந்து நிமிஷத்தில் புன்னகை படர்ந்த முகமும், கூப்பிய கரங்களுமாகப் புரொபஸர் அறைக்குள் வந்தார். வந்திருந்தவர்களில் யாரையும் கவனித்துப் பாராமல் தன் ஆசனத்தில் போய் அமர்ந்தார். எதிரில் ஒரு சிக்குப் பலகை பிரித்து நிற்க வைக்கப்பட்டிருந்தது. அருகில் ஒரு மணைப் பலகை மேலிருந்த ஒரு கட்டுச் சுவடியைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டு, அதை எடுத்துப் பிரித்துச் சிக்குப் பலகைமேல் வைத்தார். அப்புறம்தான் வந்திருந்தவர்களை நிமிர்ந்து பார்த்தார்.

எல்லோரையும் பார்த்துக்கொண்டே வந்து எங்கள் இருவர் மேலும் கண்ணை ஓட்டியவர் முகம் பிரமை யடித்ததுபோலத் தோன்றியது ஒரு கணம். ஒரு கணம்தான்; உடனே சமாளித்துக் கொண்டு முகத்தை மற்றவர்கள் பக்கம் திருப்பி விட்டார். பிறகு தன் முன்னிருந்த சுவடிக் கட்டை எடுத்துக் கொண்டு அதிலிருந்து ஒரு எட்டை மாத்





டிபன் சாப்பிட வந்தவர் :—என்ன, ஐயா! இந்தத் தோசை ரப்பர் மாதிரி இருக்கிறதே!

சிப்பந்தி :— உஷ் ...... இரைந்து சொல்லாதீர்கள்! ரப்பர் இப்பொழுது என்ன விலை விற்கிறது, தெரியுமா?

---

திரம் இழுத்து எடுத்து வலக்கையில் பிடித்தபடி பார்த்துக் கொண்டே இருந்தார்.

பத்து நிமிஷம் பதினைந்து நிமிஷமுமாயிற்று. புரொபஸர் பேசவே யில்லை. அதற்குள் புதிதாகச் சிலரும் வந்து சேர்ந்தார்கள் அறைக்குள். கூடி யிருந்தவர்களிடையே கசமுசப்புத் தோன்றியது.

புரொபஸர் திடீரென்று சுவடிக் கட்டைக் கட்டி வைத்து விட்டு நிமிர்ந்து குறிப்பாக யாரையும் பார்க்காமல் "இன்று பூஜையிலே ஏதோ குறை இருந்திருக்கிறது. நாடி எழுத்து மங்கிக் காண்கிறது. எல்லாரும் என்னை மன்னித்து விட வேண்டும். இனி நாளைதான் படிக்க முடியும்" என்று எழுந்து எதிர்ப்புறத்திலிருந்த மற்றொரு வழியில் உள்ளே சென்று விட்டார். மற்ற எல்லாரும் ஏமாற்றத்துடன் எழுந்தார்கள். நான் மாத்திரம் உட்கார்ந்திருந்தேன். எழுந்திருக்க முயன்ற அருணகிரி முதலியாரையும் கையைப் பற்றி உட்கார வைத்தேன்.

மற்றவர்களெல்லாம் போய் விட்டார்கள். நாங்கள் இருவரும் மாத்திரம் உட்கார்ந்திருந்தோம். புரொபஸரின் குமாஸ்தா எங்களை வெறித்து வெறித்துப் பார்த்துக் கொண்டு ஏதோ சொல்ல விரும்புவதும் தயங்குவதுமாக நின்றான். இரண்டு நிமிஷமாகி இருக்கும். புரொபஸர் மறுபடி உள்ளே வந்தார். அந்தக் குமாஸ்தா அவர் கண் குறிப்பைக் கண்டு வெளியே போய் விட்டான்.

புரொபஸர் நேரே அருணகிரி முதலியாரிடம் வந்து, "மாமா! என்னை அடையாளம் புரியவில்லையா?" என்றார்.

முதலியார் திடுக்கிட்டு அவரைப் பார்த்தார். கொஞ்சம் கொஞ்சமாக அவர் மனதில் உண்மை புலர்ந்ததை அவர் முகம் காட்டியது. "அனங்கராஜனா! ஆ! நீயா!......நீதானா!" என்றார் படபடக்கும் குரலில்.

அனங்கராஜன் "நானேதான்! கண் காணாத எங்கேயாவது போய் அனாதையாக உலகிலிருந்து மறைந்துவிட வேண்டுமென்று புறப்பட்டேன். ஊர் ஊராகச் சுற்றினேன். கல்கத்தாவிலிருந்து லாஹூருக்குப் புறப்பட்டேன். அலகாபாத்தில் இறங்கிச் சாப்பிடப் போயிருந்தேன். அதிர்ஷ்டவசமாகவோ துரதிர்ஷ்ட வசமாகவோ ரயில் புறப்பட்டு, விட்டது நான் திரும்பி வருமுன். அதைப்பற்றி நான் கவலைப்படவே யில்லை. மரணம் என்னை எங்கே, எந்த ரூபத்தில் வந்து ஆட்கொள்ளப் போகிறதோ என்ற ஆவலில் அங்கேயே தங்கிவிட்டேன்.

"ரயிலில் என் பெட்டி படுக்கைகளெல்லாம் போய்விட்டன. கையில் பணமும் அதிகம் இல்லை. மறுநாள் பத்திரிகையில் அந்த ரயில் விபத்துக்குள்ளாகிப் பலர் இறந்ததாகப் படித்தேன். அதில் என் பெயரும் இருந்தது.

"உடனே என் மனதில் பளிச்சென்று உண்மை புலனாயிற்று. சோதிடன் சொன்னது தவறு. நான் அவன் சொன்னபடி சாகப் போவதில்லையென்று தெளிவாகி விட்டது. உடனே உயிராசை என்னைப் பற்றிக் கொண்டது. சோதிடத்தை நம்பி, இருந்த பணத்தையெல்லாம் இறைத்து விட்டோமே என்ற வருத்தம் மேலோங்கியது. இழந்த பணத்தையெல்லாம் மறுபடி வட்டிக்கு இரட்டையாகத் திரட்டிவிட வேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டேன். அதன் பலனாகப் புரொபஸர் ராதா ரமணன் தோன்றிவிட்டார்!" என்றான்.

முதலியாருக்கு ஆச்சரியத்தால் மூச்சு நின்றுவிடும் போலாகி விட்டது. தட்டுத் தடுமாறிய குரலில் "இவ்வளவு ஜனங்களும் போற்றிக் கொண்டாடும்படி எப்படிச் சோதிடம் கற்றாய்? அந்த நாடி உனக்கு எங்கே கிடைத்தது?" என்றார்.

"ஒரு குக் கிராமத்தில் அவ்வளவையும் இரண்டரை ரூபாய்க்கு வாங்கினேன். பொருளைப் போட்ட இடத்தில் தேடினால் தானே கிடைக்கும்? நான் சோதிடத்தை நம்பி என் சொத்தை இழந்தேன். அதை நம்புகிறவர்களிடமிருந்தே வசூல் செய்ய என்னைப் பயிற்சி செய்து கொண்டேன்" என்றான்.

முதலியார் என்ன செய்வார், பாவம்! என்னைப் பரிதாபகரமாகப் பார்த்தார்!

# வட்ட மேஜை

## மனம் குமுறலாமா ?

ஜூலை 23-ம் தேதி 'கல்கி' இதழின் வட்ட மேஜையில் 'இரத்தம் கொதிக்கிறது' என்ற தலைப்பின் கீழ் திருநெல்வேலி அன்பர் ஸ்ரீ கே. சீனிவாசன் எம். ஏ. எழுதிய கடிதத்தைப் படித்தேன்.

இரத்த தானம் செய்வது மகத்தான தியாகம் என்பது யாராலும் மறுக்க முடியாத ஒரு உண்மை. ஆனால் அந்த இரத்தம் அபாயகரமான நேரத்தில் ஒரு பணக்காரனுக்கு உபயோகப்படுத்தப்பட்டால், அதற்காக அவனிடமிருந்து பணம் வசூல் செய்வது குற்றமாகாது. ஏனெனில் அந்தப் பணம் அந்த மருத்துவ விடுதிக்கே செலவு செய்யப்படுகிறது. மேலும், பணம் கொடுக்கக் கூடிய நிலைமையில் உள்ளவர்களிடமிருந்து மாத்திரமே பணம் வசூலிக்கப்படுகிறது. ஏழைகளிடமிருந்து அவர்களுக்காக எத்தனை பாட்டில் இரத்தம் உபயோகிக்கப்பட்ட போதிலும் பணம் வசூலிக்கப்படுவதில்லை. இந்த விஷயத்தையும், இன்னும் இந்த இரத்த சேமிப்பிற்காக ஆகும் செலவையும் அறிந்திருந்தும், பணம் கொடுக்கக் கூடியவர்களிடமிருந்து வசூலிக்கப்படுவது மனிதப் பண்புக்கே இழுக்கு என்று கூறப்படுவது ஆச்சரியமாக இருக்கிறது.

மருத்துவக் கல்லூரியில் கல்வி பயிலும் மாணவர்களே சில சமயங்களில் இரத்தம் கொடுத்து உதவுகிறார்கள். அவர்கள் இரத்தத்திற்குப் பணம் வசூலிக்கப்படும் விஷயத்தை அறியாமலில்லை. அறிந்தே கொடுக்கிறார்கள். சிகிச்சை பெற்று குணமடைந்து வீடு செல்லும் செல்வம் படைத்த அன்பர்கள், அவர்கள் இருந்த மருத்துவ விடுதிக்கு ஏதாகிலும் நன்கொடை அளித்துச் செல்லலாம். அவ்வாறு செய்பவர்களைக் காணுதல் அரிது. அதற்குப் பதிலாக குறைந்த செலவில் சிகிச்சை பெற வேண்டி வருமானத்தைக் குறைத்துச் சொல்லும் மஹானுபாவர்கள் அநேகர். இத்தகைய குறுகிய மனப்பான்மை மறைந்து தயாள குணத்தை நம் பணக்கார நோயாளிகள் அடையும் வரையில், நோயாளிகளின் தராதரத்திற்குத் தகுந்தபடி இரத்தத்திற்குப் பணம் வசூலிக்கும் முறையை நீக்குவது கடினம்.

சிகிச்சையைப் பொறுத்தவரையில், இரத்தத்தை உபயோகிப்பதில் ஏழை பணக்காரன் என்ற வித்தியாசம் காட்டப்படுவதில்லை. அபாயகரமான நேரங்களில், இரத்தம் அவசியமான நேரங்களில், நோயாளியின் வருமானத்தையும், செல்வத்தையும் எந்த டாக்டர் பார்க்கிறார்! உடனே இரத்தம் வைத்திருக்கும் அறைக்கு ஓடி, இரத்தம் கொண்டு வந்து நோயாளிக்கு ஏற்றப்படுகிறது. அவசியம் நேர்ந்தால் ஏழையும் பணக்காரனும் இரத்தத்தைப் பெறுகிறார்கள். நோயாளி குணமடைந்து வீடு செல்லும் பொழுதுதான் பணத்தைப் பற்றிய பிரச்னையும், ஏழை பணக்காரன் என்ற பிரச்னையும் எழுகிறது. ஆதலால் இந்தப் பண வசூலில் அரசாங்கம் கடமை தவறியது என்று கூறலாமா! மனம் குமுறலாமா!

ஈரோடு
24—7—50

பி. சரோஜினி
எம்.பி.பி.எஸ்., டி.ஜி.ஓ.

○●○

## ஸ்திரீகளும் உத்தியோகமும்

மத்தியதர வகுப்பைச் சேர்ந்தவர்கள் தங்கள் வறுமை நிலையைச் சமாளிக்கத் தங்களுடைய மனைவிகளை ஏன் வேலைக்கு அனுப்பலாகாது என்று சிலர் சொல்லி வருகிறார்கள். படித்த மனைவியாக இருந்தால் அவளை வீட்டில் வைத்திருப்பது அவள் அறிவை மழுங்க அடித்து விடும்; அதனால் அவளை வேலைக்கு அனுப்பினால் குடும்பத்தின் சம்பாத்தியமும் அதிகரிக்கும், வறுமையும் குறையும் என்று வாதம் செய்கிறார்கள். இப்படிச் சொல்கிறவர்கள் சில அடிப்படை உண்மைகளை மறந்து விடுகிறார்கள் என்று தோன்றுகிறது.

நமது பெரியோர்கள் விளையாட்டுக்காக, 'உத்தியோகம் புருஷ லட்சணம்' என்று சொல்லவில்லை. மனைவியைக் 'கிருகலட்சுமி' என்று தமாஷுக்காக அழைக்கவில்லை. புருஷன் வெளியே சென்று பாடுபட்டு உழைத்துப் பொருள் தேடி வந்தால், மனைவி அவன் கொண்டு வந்த பொருளுக்குத் தக்கபடி வீட்டை நிர்வகிப்பதுதான் அழகு. அப்படி நிர்வகிப்பதற்குத் தேவையான கல்வி அவளுக்கு அவசியம். அவள் கற்ற கல்வியும் அறிவும் மழுங்க வேண்டிய அவசியமே யில்லை. வெளியே சென்று சம்பாதித்து வருவதை விட சம்பாத்தியத்துக்கு ஏற்றபடி வீட்டை நிர்வாகம் செய்வதுதான் சிரமமாகும். அதற்குத்தான் கல்வியறிவு அவசியம்.

கணவனும், மனைவியும் வேலைக்குச் சென்று விட்டால் வீட்டைக் கவனித்துக் கொள்வது யார்! குழந்தைகள் உள்ள வீடாக இருந்து விட்டால் கேட்க வேண்டியதேயில்லை! மேல் நாட்டைப் போல் வீட்டைப் பார்த்துக் கொள்ள ஆள் போடுவதோ, குழந்தைகளைக் கவனித்துக் கொள்ள 'ஆயா' நியமிப்பதோ நம்முடைய செல்வநிலைக்கு ஏற்றதல்ல. மனைவி சம்பாதிப்பது ஆளுக்கும், ஆயாவுக்கும் செலவழிக்கத்தான் சரியாயிருக்கும்! அப்படியும் ஒருவருக்கும் திருப்தி ஏற்பட வழியிருக்காது.

கணவனும் மனைவியும் வேலைக்குப் போகிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். மனைவிக்குக் கணவனைவிடச் சற்று அதிகச் சம்பளம் கிடைப்பதாயிருந்தால் வேறு வினையே வேண்டியதில்லை. மனைவிக்குத் தற்பெருமையும், கர்வமும் உண்டாகலாம். கணவனுக்கு ஒரு தாழ்மை மனப்பான்மை ஏற்படலாம். பிறகு அவ்விருவரிடையேயும் வேற்றுமை உணர்ச்சி தோன்றப் பல நாட்களாகாது. மேல் நாட்டில்



வேலைக்காரன் ;—ஐயா வீட்டில் இல்லை என்று சொன்னால் நம்ப மாட்டேன் என்கிறீர்களே? இந்த ஏழை சொன்னால் தான் உங்களுக்கு நம்பிக்கை இல்லை. ஐயாவே சொல்லுவதைக் கூடவா நீங்கள் நம்ப மாட்டீர்கள்!

---

'விவாக ரத்து' மலிந்திருப்பதற்கு இதுவும் ஒரு காரணமாகும்.

மேல் நாட்டு நாகரிகத்தைப் பின்பற்றி நம் நாட்டு ஆண் மக்கள் நமது இந்திய கலாசாரத்தைக் கை விட்டு வருவது போதும். பெண்களும் ஆண்களின் வழியைப் பின்பற்றிப் பல்லாயிரம் ஆண்டுகளாக நிலைத்து வரும் நம் 'குடும்ப தர்மம்' அழிந்து போகாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது அவசியம்.

பெண்கள் வீட்டில் இருந்து கொண்டே செய்யக்கூடியவை எவ்வளவோ இருக்கின்றன. தம் மக்களுக்கு நற்போதனை யூட்டுவதன் மூலம் அவர்களைச் சிறந்த பிரஜைகளாக்கலாம். வீட்டுப் பொருளாதாரத்தையும் நல் வழியில் நடத்திச் சென்றால் நாட்டில் சுபிட்சம் விரைவில் நிலவும் என்பதில் ஐயமில்லை.

கல்யாண்
24—7—50 வி. எஸ். சுந்தரராஜன்

○●○

## ★ "கலைக் குற்றம்"

ஒரு சமூகத்தின் நாகரிகம், முன்னேற்றம் முதலியன அதன் கல்வியைப் பொறுத்தே இருக்கும். கல்வி யென்பது ஜன சமூகத்தை அழகு பெறச் செய்யும் ஓர் மெருகு. எழுத்தறிவு கல்விக்கு ஒரு சாதனமே அன்றி, குறிக்கோள் அல்ல. ஆதலின் பாஷை என்பது கல்வி அறிவைப் பெற உதவும் ஒரு சாதனம் ஆகும். அத்தகைய சாதனம் ஒன்று போதாதா! எழுத்தறிவே இல்லாத சிறந்த கல்விமான்கள் நம் நாட்டில் இருந்தது இல்லையா!

இன்றைக்குப் பள்ளிக்கு வரும் பத்து வயது பாலனின் மனோ நிலை எத்தகையது! அவன் என்னென்ன படிக்க வேண்டியிருக்கிறது என்பதைக் குழந்தை உள்ளம் உணர்ந்தவர் கூர்ந்து கவனிக்க வேண்டும். பழி வாங்கும் மனோ பாவத்துடன், புரியாத, விருப்பத்தைத் தூண்டாத நடையில் எழுதப் பெற்ற தமிழ் வாசகங்கள், ஆங்கிலம், ஹிந்தி, போதாக் குறைக்கு சம்ஸ்கிருதம் ஆகியவை திணிக்கப் பட்டிருக்கின்றன. மூன்று புதிய பாஷைகளை, அதுவும் பத்து வயது நிலையில் ஒரு சிறுவனுக்குப் புகட்ட முயலுவது சரியா! உலகின் வேறு எந்த நாட்டிலும் இப்புதுமை இல்லை. 'கழுதையும் கிழவனும்' என்ற கதையாகத்தான் இருக்கிறது கல்வி இலாகாவின் இச் செய்கை.

இன்றைக் கிருப்பாரை நாளை இருப்பரென்று நினைக்க இடம் இல்லை என்ற வசனம் 'இன்றைக்கு உள்ள பாடத் திட்டம் நாளைக்கு இருக்கும் என்ற நம்பிக்கை இல்லை' என்று மாறிவிட்டது. வாழ்வு சதம் இல்லை; பாடத் திட்டமும் சதம் இல்லை. இத்தகைய நிலை இன்னும் எவ்வளவு காலம் நீடிக்கும்!

நம் நாட்டின் பழைய, பிராசீன ஆசாரக் கல்வியே ஆதாரக் கல்வி ஆகும். கிராமப் புனருத்தாரணமே வருங்கால இந்தியாவின் வாழ்வு. தச்சனின் மகன் சிறந்த தச்சன் ஆக வேண்டும்; குயவனின் மகன் சிறந்த குயவன் ஆக வேண்டும். இதற்கு அவனவன் தாய் பாஷை ஒன்றைக் கற்றாலே போதும்.

நம் நாட்டின் திறமைகளை எல்லாம் நசுக்கி வைத்த அன்னிய ஆட்சி அஸ்தமித்து விட்டதே! ஜனநாயக ஆட்சி இத் திறமைகளையெல்லாம் உயிர்ப்பிக்கத் தன் சுண்டு விரலையாவது அசைக்கும் அறிகுறியைக் காணவில்லையே!

நல்ல வேளையாக நம் பூர்வீகத் தொழில்கள் அனைத்தும் நசித்து விடவில்லை. கருங் கல்லைப் பளிங்காக்கும் ஒரு சில சிற்ப நிபுணர்கள் ஒடுங்கிக் கிடக்கின்றனர். மற்றும் சில தொழில் விற்பன்னர் விரைவில் மங்கிப் போய்க் கொண்டிருக்கின்றனர். பலுனுடன் பேனாவும், மூக்குப் பொடியும், ஸ்னோவும் செய்ய எப்படியோ கற்றுக் கொண்டு விட்டான் தமிழன். இச்சிறு குடிசைத் தொழில்கள் செத்துக் கொண்டிருக்கின்றன. அவற்றை உயிர்ப்பிக்க வேண்டும். நம் இளஞ் சிறுவர்களுக்கு மண்ணைப் பிசைந்து, கண்ணைக் கவரும் பண்ணுருட்டிப் பொம்மைகள் செய்யக் கற்றுக் கொடுக்க வேண்டும். கல்லைச் சிலையாக்கும் கலையைக் கற்பிக்க வேண்டும். சைக்கிள், கடிகாரம், ரேடியோ, முதலிய சிறு இயந்திரங்களை ரிப்பேர் செய்யக் கற்றுக் கொடுக்க வேண்டும். ஒரு பாஷையும் ஒரு தொழிலும் செவ்வனே கற்றுக் கொடுங்கள். அதைவிட்டு வீணாகப் பாஷை சச்சரவுகளில் காலம் போக்குவதில் பயன் யாது!

ஒரு சரீரத்திற்குத் தீங்கு இழைத்தால் அது குற்றம் ஆகும். சரீரத்தைவிட மனது மேலானது. மனதைப் பண் படுத்துவது கல்வி.

குற்றம் உள்ள கல்வித் திட்டத்தை இளஞ் சிறுவர் மனதிற் புகுத்துவது 'கலைக் குற்றம்' ஆகும். கலைக் குற்றம் கொலைக் குற்றத்திலும் கொடியது. பொற்கைப் பாண்டியனும், மனுநீதிச் சோழனும் ஆண்ட தமிழ் நாட்டிலே கல்வித் திட்டத்தில் குற்றம் செய்து விட்டதாக கல்வி மந்திரி ஒப்புக் கொள்கிறார். இக் கலைக் குற்றத்திற்குப் பரிகாரம் உண்டா!

திருச்சிராப்பள்ளி 19—7—50 எஸ். ரத்னஸ்வாமி

○●○

## சினிமா மெட்டுக்கள்

ஜூலை 9ம் தேதி, 23ம் தேதி, 'கல்கி' இதழ்களில், ஹிந்தி மெட்டுக்கள் சம்பந்தமாக வெளியாகி யிருக்கும் இரண்டு கடிதங்களையும் படித்தேன்.

ஸ்ரீ ஏ. பி. சாரதி எழுதியிருப்பது தான் சரி என்று எனக்குத் தோன்றுகிறது. துரதிர்ஷ்டவசமாக தமிழர்கள் அநேக விஷயங்களில், மற்ற தேசத்தவர்களைப் பார்த்துக் காப்பி அடித்துப் பழக்கப் பட்டுள்ளார்கள். அதே வழக்கம் இப்பொழுது சினிமாவிலேயும் புக ஆரம்பித்திருக்கிறது.

தமிழன் சந்தேகமின்றி ரஸிகன் தான். ஆனால் மலையான அவியலில் வங்கத்து ரஸகுல்லாவையும், ரஸகுல்லாவில் அவியலையும் கலந்து சாப்பிட மாட்டான். அது மாதிரி தான் தமிழ்ச் சினிமாக்களில் ஹிந்தி மெட்டுக்களைக் கேட்பதற்கும் விரும்ப மாட்டான். மேலும் தமிழ் மக்கள், ஹிந்தி, ஆங்கிலம் முதலிய பாஷைகளில் வரும் படங்களையும் பார்க்கின்றனர். அதன் உயர்வையும் ரசிக்கின்றனர். அதே மாதிரி தமிழ்ப் படத்துக்கும் போகும் போது, தமிழ்ப் பாட்டுக்களை நமது மெட்டிலேயே கேட்பதற்குத் தான் விரும்புவோமே தவிர, மற்ற மெட்டுக்களில் அல்ல. தமிழ் ஒரு நிகரற்ற பாஷை. ஆகையால் ஹிந்திக்காரர்கள் நமது தமிழ் மெட்டுக்களை "டப்" செய்யும் அளவுக்கு நாம் முயற்சி செய்ய வேண்டும். அல்லாமல் ஹிந்தி மெட்டுக்களை நாம் "டப்" செய்தால் தமிழ் நாட்டுக்கு அவமானம் தான்.

கல்கத்தா 24—7—50 எஸ். சூர்யநாராயணன்

○●○

## ★ புஸ்தகம் எதற்கு?

நேற்றைய தினம் எங்கள் வீட்டுச் சிறுவையனிடம் அவன் காலையில் படித்த பிபிச் சக்கரவர்த்தி கதையைச் சொல்லச் சொன்னேன். சொல்லத் தெரியாமல் அவன் திகைத்தான். இத்தனைக்கும் அன்று அவன் மூன்று தரம் அந்தக் கதையைப் படித்திருந்தான். நான் உடனே அவனிடம் எங்கள் அத்தைப் பாட்டி அதற்கு முந்திய தினம் சொன்ன நளாயினி கதையைச் சொல்லச் சொன்னேன். என்ன ஆச்சரியம்! அவன் உடனேயே அக் கதை முழுதும் சொன்னான். நேற்றுத்தான் முதன் முதலாகக் கேட்டிருந்தபடியால் நடு நடுவில் மட்டும் சிறிது தடுமாறினான்.

இதிலிருந்து ஒரு உண்மை புலப்படுகிறது. ஆம், 'கற்றலின் கேட்டலே நன்று' என்பது. அதுவும் சிறுவர் விஷயத்தில் நூற்றுக்கு நூறு உண்மை.

சிறுவர்களுக்கும் புத்தகங்களுக்கும், நாய்க்கும் பூனைக்கும் உள்ள பொருத்தம் என்பது எல்லாரும் (டெக்ஸ்ட் புக் கமிட்டியாரைத் தவிர) அறிந்த உண்மை. ஆடி ஓடி துரு துரு என்று திரியும் இப் பிராயத்தில் ஓரிடத்தில் உட்கார்ந்து ஒரு பாடத்தை ஒன்றுக்குப் பத்து தடவையாக வாசிக்கச் சிறுவர்கள் ஒரு போதும் விரும்புவதில்லை. பலவந்தப்படுத்தினாலொழிய ஒரு குழந்தையும் அப்படி வாசிக்காது. அது தான் குழந்தை உள்ளம்.

குழந்தை உள்ளம் இப்படியிருக்கும்போது பாடபுத்தகக் கமிட்டியார் எலிமெண்டரிப் பாடசாலை மாணவர்களுக்குத் தமிழ், கணக்கு, பூகோளம், சிவிக்ஸ், இயற்கைப் பாடம், சரித்திரம் போன்று அரை டஜன் புத்தகங்கள் வைப்பது எனக்குப் புரியாத புதிராகவே இருக்கிறது. இனிய தமிழ் நடை பழக ஒரு தமிழ்ப் புத்தகமும், வீட்டில் கணக்குப் போட்டுப் பழக ஒரு கணக்குப் புத்தகமும் ஓரளவு அவசியம்தான். ஆனால் சரித்திரம் போன்ற புத்தகங்கள் அவசியம்தானா! இராமாயணம், மகாபாரதம் போன்ற சரித்திரக் கதைகளையும், தோட்டம் அமைத்தல், விதை விதைத்தல் போன்ற இயற்கைப் பாடங்களையும், தேச பரி



"இப்பொழுது 'லேட்டஸ்ட்டா' என்ன புஸ்தகம் தின்றீர்?"

"இப்பொழுதெல்லாம் வர 'லேட்டஸ்ட்' புஸ்தகங்கள் என் வயிற்றுக்கு ஒத்துக் கொள்வதில்லை. ஆகவே, போகிற வழிக்காவது புண்ணியமுண்டு என்று ராமாயணம், கீதை இந்தமாதிரி புஸ்தகங்களையே தின்று வருகிறேன்!"

★ வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25ஐ "கலைக் குற்றம்" என்ற கடிதம் எழுதிய ஸ்ரீ எஸ். ரத்னஸ்வாமிக்கும், "புஸ்தகம் எதற்கு?" என்ற கடிதம் எழுதிய ஸ்ரீ என். எஸ். நரசிம்மனுக்கும் ரூ. 12—8—0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.

பாவனை முறைகளையும் புத்தகங்கள் வாயிலாகக் கற்பதை விட, உபாத்தியாயர் வாயிலாக (புத்தகங்களின் உதவி சிறிதுமின்றி) கற்ற லன்றோ சிறந்த முறை! ஒரு விஷயத்தைப் பாடமாக வைப்பதால் குழந்தைகள் அதை ஞாபகம் வைத்துக் கொள்ளுமென்றோ, பாடமாக வைக்காவிட்டால் அதை மறந்து விடுமென்றோ நியதி இல்லை. ஆராய்ந்து பார்த்தால் பாடங்களைத் தவிர மற்ற விஷயங்களையே குழந்தைகள் அதிகமாக ஞாபகம் வைத்துக் கொள்கின்றன.

சுருங்கக் கூறில் குழந்தைகள் கல்வி முறையில் புத்தகங்களின் பாகம் குறைய வேண்டும். கேள்வி முறையே நிலவவேண்டும். தமிழ், கணக்கு என்ற இரு புத்தகங்களைத் தவிர மற்றையப் புத்தகங்கள் தேவையே இல்லை.

இதனால் குழந்தைகளுக்கு 1. ஞாபக சக்தி வளரும், 2. தன்னம்பிக்கை ஓங்கும், 3. அதிகப் படிப்பால் கண் கெடாது, 4. படிப்பும் கசக்காது, 5. குழந்தைகளின் தகப்பனுருக்கோ பணச் செலவு பெரிதும் குறையும்.

அம்பத்தூர்
7—6—50 என். எஸ். நரசிம்மன்

○●○

## கேட்பார் இல்லையா?

சில வாரங்களுக்கு முன் 'கல்கி' வட்ட மேஜையில் ஒரு மாணவன் தான் 33 மார்க்குகள் வாங்கியிருப்பதாகவும், ஆனால் மாகாண சராசரி மார்க்கு 34 என்றும், மாகாண சராசரிக்கு ஒரு மார்க்கு குறைந்து விட்டதற்காகத் தன்னைத் தேற விடாமல் செய்தது மிகவும் அநீதி என்றும் எழுதியிருந்ததை நான் படிக்க நேர்ந்தது.

இந்த விஷயம் அம் மாணவனுக்கும், இன்னும் சிலருக்கும் ஆச்சரியம் தருவதாக இருக்கலாம். ஆனால் இதற்கே ஆச்சரியப்பட்டு விட்டால், இதற்கும் மேலாக நடப்பவைகளைக் காணும் பொழுது என்ன செய்வார்களோ தெரியவில்லை.

தேற வேண்டிய மார்க்குகளுக்கு அதிகமாகவே மார்க்குகள் வாங்கினாலும் அம்மாணவனையும் நிறுத்திவிடக் கூடிய 'சாமர்த்தியம்' நம் சர்வகலாசாலைக்கு இருக்கிறது என்றால் அதைக் குறித்து எம்மாதிரி ஆச்சரியப்படுவது!

இண்டர்மீடியட் வகுப்பில் மூன்றாவது பாகத்தில் 150 மார்க்குக்கு $52\frac{1}{2}$ மார்க்கு பெற்றால் 'பாஸ்' செய்வதற்கு யோக்கியதை பெற்றவன் என்று அர்த்தம். ஆனால் 150-க்கு 54 மார்க்குகள் வாங்கினால் அருகதை அல்லாதவன் என்று அர்த்தமாம்!

"இது என்ன புதிர்!" என்று கேட்கத் தோன்றுகிறது அல்லவா! நன்றாகக்கேளுங்கள்! ஆனால் என்னைக் கேட்க வேண்டாம். சர்வ கலாசாலையையே எல்லோரும் சேர்ந்து கொண்டு கேளுங்கள். மாணவர்களைத் தேற விடாமல் செய்வதற்கு எவ்வளவு தூரம் முட்டுக் கட்டைகள் போட முடியுமோ அவ்வளவு தூரம் போட்டு அதில் 'நல்ல பெயர்' சம்பாதித்துக்கொண்டு 'பெருமை' அடைந்து வருகிறார்கள் சென்னை யூனிவர்சிடிக்காரர்கள்.

இண்டர் வகுப்பில் மூன்றாவது பாகத்தில் 150-க்கு $52\frac{1}{2}$ மார்க்குகள் வாங்கினால் போதும். ஆனால் Practical லில் 30 சத விகிதமும், Theory யில் 35 சதவிகிதமும், மொத்தத்தில் 150-க்கு $52\frac{1}{2}$ மார்க்குகளும் வாங்க வேண்டுமாம். அப்படி யில்லாமல் 80 மார்க்குகள் வாங்கினாலும் குறிப்பிட்ட 'மினிமம்' இல்லாவிட்டால் அம்மாணவன் 'பெயில்' ஆக வேண்டியதுதான்.

பரீட்சையில் எனக்குக் கிடைத்த மார்க்குகளைக் கீழே கொடுத்திருக்கிறேன். * ஆயினும் நான் 'பெயில்' ஆகிவிட்டேன்.

ஆனால் எங்களுக்கு Practical பரீட்சை நடந்த அலங்கோலத்தைப் பற்றி யாரிடமும் சொல்லிக் கொள்ளக்கூட வாய் கூசுகிறது. அவ்வளவு கேவலமான முறையில் நடந்தது. இதைப் பற்றி, இம்மாதிரியான அநாக்கிரதையான, முன் யோசனை யற்ற முறையில் நடந்த பரீட்சையைப் பற்றி நான் சர்வ கலாசாலைக்கு எழுதியபோது மிகவும் விசித்திரமான பதில் ஒன்று வந்தது. "இம்மாதிரியான கடிதங்கள் கல்லூரி பிரின்ஸிபாலின் மூலம் தான் அனுப்பப்பட வேண்டும்" என்று அதில் கண்டிருந்தது. அவர் தலைமையில் தானே இந்த அலங்கோலம் நடந்திருக்கிறது என்று நான் எழுதும் போது அவர் மூலமாகவே எப்படி இந்தக் கடிதம் மேலே அனுப்பப்படுமோ எனக்குப் புரியவில்லை!

இவை யெல்லாவற்றையும் நினைக்கும் பொழுது "நாம் அதிகாரத்தில் இருக்கும் வரையில் மாணவர்களை ஒரு ஆட்டு ஆட்டி வைத்து விட்டுப் போகலாம் என்று எண்ணத்தால் இவ்வளவு கொடுமை இழைத்து வருகிறார்களோ!" என்று நினைக்கத் தோன்றுகிறது.

எழும்பூர்
20—7—50 ரா. நரசிம்மன்

| | கிடைத்த மார்க்குகள் | கிடைக்கவேண்டிய மார்க்குகள் | மொத்த மார்க்குகள் |
|---|---|---|---|
| முதல் பிரிவு : இங்கிலீஷ் | 106 | 105 | 300 |
| இரண்டாம் பிரிவு : தமிழ் | 85 | 70 | 200 |
| மூன்றாவது பிரிவு : இயற்கை சாஸ்திரம் (Natural Science) | 53 | $52\frac{1}{2}$ | 150 |
| பௌதிகம் (Physics) | 54 | $52\frac{1}{2}$ | 150 |
| ரஸாயனம் (Chemistry) | 83 | $52\frac{1}{2}$ | 150 |

# யுத்த கேந்திரம்



ஜெயமணி

○ ○ ○ சென்ற மகா யுத்தம் முடிந்ததும் கொரியாவுக்கு ஐந்து வருஷகாலத்தில் சர்வ லட்சணங்களுடனும் கூடிய பூரண சுதந்திரம் அளிப்பதாக ருஷ்யாவும் அமெரிக்காவும் உறுதிமொழி அளித்திருந்தன.

ஆனல் மேற்படி வல்லரசுகள் ஐந்து வருஷம் முடிவதற்குள் அந்த நாட்டுக்குப் பூரண சுதந்திரம் அளிக்காததுடன், அதைச் சர்வ அவலட்சணங்களும் பொருந்திய போரில் ஆழ்த்தி விட்டன!

கொரியா தேசத்தைப் பற்றிய புராதன சரித்திர வரலாறுகளை ஏற்கனவே விவரித்தாகி விட்டது. அந்த நாட்டின் தற்போதைய வரலாற்றை இந்தக் கட்டுரையில் காணலாம். ○ ○ ○

இரண்டாவது மகா யுத்தத்தின் இறுதியில் ஜப்பானிய சாம்ராஜ்யம் தோல்வியுற்றபோது, தென் கிழக்கு ஆசியா நாடுகளில் எல்லாம் ஜப்பானியத் துருப்புகள் இருந்ததுபோல் கொரியாவி லும் மேற்படி துருப்புகள் இருந்தன. அந்தத் துருப்புகளைச் சரண் அடையும்படி செய்வதற்காக 1945-ம் வருஷம் ருஷ்யத் துருப்புகளும் அமெரிக்கத் துருப்புகளும் கொரியாவில் பிரவேசித்தன.

அந்தத் துருப்புகளின் தலைமையில் சென்ற ருஷ்ய, அமெரிக்க தளபதிகளின் மேற்பார்வையில் கொரியா முழுவதற்கும் ஒரே சர்க்கார் அமைக்க வேண்டும் என்றே முதலில் ஏற்பாடாகி யிருந்தது.

ஆனல் அவ்விஷயமாகச் சமரசம் ஏற்படவில்லை. ஏற்கனவே கம்யூனிஸ்டு கொள்கைக்கு விரோதமாக இருந்தவர்களைக் கொரியா சர்க்காரில் சேர்க்கக் கூடாது என்று ருஷ்ய தளபதி பிடிவாதமாகக் கோரியதால் சமரசத்துக்கு வழியின்றி தகராறு மூண்டது.

அந்தத் தகராறு இரண்டு வருஷ காலம் வரையில் புகைந்து கொண்டிருந்தது. இறுதியாக அதைத் தீர்த்து வைக்க ஐக்கிய நாடுகள் சபையின் உதவியை அமெரிக்கா நாடியது. கொரியா பிரச்னையைத் தீர்ப்பதற்காக ஐ. நா. சபை நியமித்த கமிஷனை வடக்கு கொரியாவுக்குள் அனுமதிக்க ருஷ்ய சர்க்கார் இறுதி வரையில் மறுத்து விட்டனர்.

பிறகு ஐ. நா. சபைக் கமிஷனின் மேற் பார்வையில் தெற்கு கொரியாவிலே 1948-ம் வருஷம் மே மாதம் தேர்தல்கள் நடைபெற்றன. பிறகு அங்கு குடியரசுப் பிரகடனமும் செய்யப்பட்டது. எனினும் ருஷ்யாவின் ஆதீனத்துக்கு உட்பட்ட வடக்கு கொரியா சர்க்காரே கொரியர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள் என்று ருஷ்யா கூறியது. பின்னர் வடக்கு கொரியாவிலிருந்து ருஷ்யாவும் தெற்கு கொரியாவிலிருந்து அமெரிக்காவும் தங்கள் துருப்புகளை வாபஸ் செய்து கொண்டன என்றாலும், கொரியா சம்பந்தமாக அந்த வல்லரசுகளுக் கிடையே ஏற்பட்ட புகைச்சல் அடங்கவில்லை.

கொரியா தங்களுடைய மேற் பார்வையில் ஐந்து வருஷ காலம் இருந்தபின் அந்த நாட்டுக்குப் பூரண சுதந்திரம் அளிப்பதென்று வல்லரசுகள் உறுதி கூறியிருந்தன. ஆனல், வல்லரசுகள் தாங்கள் அளித்த மேற்படி உறுதியைக் காற்று



கொரியரின் நடன உடை



தெற்கு கொரியா குடியரசு விழாவின்போது தலைநகர் ஸியோலில் துருப்புகள் அணிவகுத்துச் சென்ற காட்சி.

வாக்கில் விட்டு விட்டன. கொரியாவுக்கு இன்று பூரண சுதந்திரம் கிடைக்காததுடன், அந்த நாடு வல்லரசுகளின் 'உதவி'யால் கோரமான யுத்தத்திலும் சிக்கிக் கொண்டு விட்டது!

1948-ம் வருஷம் தெற்கு கொரியாவில் தேர்தல் முடிந்தபின் அந்த வருஷம் ஆகஸ்டு மாதம் 15-ந் தேதி சுதந்திர விழா கொண்டாடுவதென்று தீர்மானித்தார்கள். அதற்கு இணங்க அன்று சுதந்திர விழா வெகு ஆடம்பரமாகக் கொண்டாடப்பட்டது.

மேற்படி விழாவை நடத்தி வைப்பதற்காக ஜெனரல் மெக் ஆர்தர் தம்பதிகள் நேரில் தெற்கு கொரியாவின் தலைநகரான ஸியோலுக்கு வந்து அந்த வைபவத்தில் கலந்து கொண்டனர். தென் கொரியா குடியரசுத் தலைவர் ஸிங்மான் ரீ கொரியா மக்களுக்கு விடுதலை கிடைத்து விட்டது என்று பிரகடனம் செய்தார். ஜனங்கள் எல்லோரும் தங்கள் நாட்டிலிருந்து அன்னியர் ஆதிக்கம் ஒழிந்துவிட்டது என்றும், பல பல ஆண்டுகளாக அடிமைத் தனத்தில் ஆழ்ந்திருந்த தாங்கள் உண்மையிலேயே விடுதலை பெற்று விட்டதாகவும் ஆனந்தக் கூத்தாடினர்.

1947-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 15-ந் தேதி சுதந்திரம் அடைந்த பாரத நாடு முழுவதும் காந்தி மகானை இழந்து துடிக்கும்படி நேர்ந்தது போல, 1948 ஆகஸ்டு மாதம் 15-ந் தேதி சுதந்திரம் அடைந்த கொரியாவும் இன்று கோர யுத்தத்தில் சிக்கிக் கொண்டு துடிக்கும்படி நேர்ந்திருக்கிறது.

வடக்கு கொரியாவுக்கும் தெற்கு கொரியாவுக்கும் நடந்து வரும் போரில் யார் கட்சியில் நியாயம் இருக்கிறது என்பதை நேரில் அனுபவம் இல்லாத வெளிநாட்டினர் எவரும் நிர்ணயமாகச் சொல்ல முடியாது. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயமாகக் கூறலாம். அதாவது கொரியாவில் இப்போது நடைபெற்று வருவது உள்நாட்டுச் சண்டையல்ல. ஒரு கட்சிக்கு ஒரு பெரிய வல்லரசும் மற்றொரு கட்சிக்கு மற்றொரு பெரிய வல்லரசும் எல்லா விதமான உதவியும் புரிந்து வருகையில் அதை உள்நாட்டுச் சண்டை என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்?

கொரியாவில் ஜப்பானியரின் கொடிய இராணுவ ஆட்சி நடைபெற்ற காலத்தில்

சுமார் அரைக்கோடி கொரியர்கள் மஞ்சூரியாவுக்கும் ருஷ்யாவுக்கும் சென்று அஞ்ஞாத வாசம் புரிந்ததாகவும் அவர்கள் யாவரும் ருஷ்யர்களிடம் சிறந்த இராணுவப் பயிற்சி பெற்றுஇப்போது போரில் ஈடுபட்டிருப்பதாகவும் கூறப்படுகிறது.

கொரியா யுத்தத்தில் இரண்டு மாபெரும் வல்லரசுகளான ருஷ்யாவும் அமெரிக்காவும் சிரத்தை கொண்டிருப்பதால் மேற்படி யுத்தம் எதில் வந்து முடியும் என்பதை யாராலும் சொல்லமுடியாது. தெற்கு கொரியா முற்றிலும் தோல்வியடைந்து விடுமாயின் அமெரிக்கா ஆக்ரோஷமான தாக்குதலை ஆரம்பிக்கும் என்பது நிச்சயம். தெற்கு கொரியா இழந்த பிரதேசங்களை மீண்டும் கைப்பற்றிப் பூரண வெற்றி பெறுமாயின் அதை ருஷ்யா பார்த்துக்கொண்டு இராது என்பதும் நிச்சயம்!



ஸர் ஸ்டாம்போர்ட் ராபின்ஸ்

கொரியாவுடன் கம்யூனிஸ்டுகள் நிற்கப் போவதில்லை என்றும், அவர்கள் அடுத்தபடியாக ஹாங்காங்கையும் பர்மாவையும் திபெத்தையும் தாக்குவார்கள் என்றும் இப்போது முதற்கொண்டே பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் கூக்குரலிட ஆரம்பித்து விட்டார்கள்

அதற்காக அவர்கள் ஹாங்காங்கைப் பலப்படுத்தவும் முற்பட்டிருக்கிறார்கள். பிரிட்டிஷ் கடற்படையின் பெரும் பகுதி கீழ்த்திசையை நோக்கி வருவதாகவும் செய்திகள் கூறுகின்றன.

சீனாவில் உணவுப் பஞ்சம் கடுமையாக இருப்பதால் அதைத் தீர்ப்பதற்காக கம்யூனிஸ்டுகள் பர்மாவைத் தாக்கலாம் என்றும் பர்மாவிலுள்ள அரிசி அவர்களுக்கு அவசரத் தேவையாக இருக்கிறதென்றும் கூறப்படுகிறது. பர்மா வெளிநாடுகளுக்கு வருஷா வருஷம் இருபது கோடி டன் அரிசி ஏற்றுமதி செய்வதால் அவ்விஷயத்தில் கம்யூனிஸ்டு சீனாவுக்குச் சபலம் ஏற்படுவதற்கில்லை என்று சொல்ல முடியாது.

இவ்வாறாக, கொரியாவில் எரியும் அக்னி ஜ்வாலை தென்கிழக்கு ஆசியா முழுவதும் பரவுவதற்கான சூழ்நிலை உருவாகி வருகிறது என்று சொல்லலாம்.

## 5. மலேயா

ராபர்ட் கிளைவ் சிறு வயதில் மிகவும் துஷ்டப் பிள்ளையாக இருந்தார். அவரது விஷமங்களைப் பெற்றோராலும் சகிக்க முடியவில்லை. எனவே, அப்படிப்பட்ட துஷ்டப் பிள்ளை இருந்தால் இருக்கட்டும் அல்லது செத்தால் சாகட்டும் என்று அவருடைய பெற்றோர்கள் அவரை வெறுத்து இந்தியாவுக்கு விரட்டிவிட்டார்கள்.

அவ்வாறாக, பதினெட்டாவது வயதில் பிரிட்டிஷாரின் கிழக்கு இந்தியா கம்பெனியில் ஒரு சாதாரண குமாஸ்தாவாக வந்து அமர்ந்த கிளைவ் பிறகு இந்தியாவில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தையே ஸ்தாபிப்பதற்கு மூல புருஷராக இருந்து உலகப் பிரசித்தி பெற்றார் என்று பிரிட்டிஷ் சரித்திராசிரியர்கள் அவரை வானளாவப் புகழ்கிறார்கள் அல்லவா? அதுபோலவே தாமஸ் ஸ்டாம்போர்ட் ராபின்ஸ் என்பவரையும் அவர்கள் பிரமாதமாகப் புகழ்கிறார்கள்.

மேற்கு இந்தியத் தீவுகளில் ஒன்றான ஜமெய்க்காவுக்கு அருகில் பரம ஏழைக் குடும்பத்தில் பிறந்த தாமஸ் ஸ்டாம்போர்ட் ராபின்ஸ் வறுமை காரணமாகப் பெற்றோர்களால் கைவிடப் பட்டு, கிழக்கு இந்தியா கம்பெனியில் ஒரு குமாஸ்தாவாக வேலைக்கு அமர்ந்தார். பிறகு படிப்படியாக உயர் பதவிக்கு வந்து 1819-ம் வருஷம் மலேயாவில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தார் என்று பிரிட்டிஷார் அவரைப் பாராட்டுகிறார்கள்.

இந்தியாவில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்க கிளைவ் சூழ்ச்சி செய்ததைப் போல், மலேயாவிலும் மேற்படி சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்க ராபின்ஸ் சூழ்ச்சி செய்தார் என்றாலும், கிளைவைக் காட்டிலும் ராபின்ஸ் உயர்ந்தவர் என்பதில் சந்தேகம் இல்லை. ஏனெனில் இந்தியாவில் கிளைவ் புரிந்ததைப் போல் ராபின்ஸ் மலேயாவில் அவ்வளவு கொடிய அக்கிரமங்கள் எதுவும் செய்யவில்லை!

ராபின்ஸ் ஜோகூர் சுல்தானிடம் ஒப்பந்தம் செய்து கொண்டு சிங்கப்பூரில் காலடி வைத்த போது அதில் பெரும் பகுதியும் காடாக இருந்தது. ஒரு சில செம்படவர்கள் மாத்திரம் அங்கு வசித்து வந்தனர். அவ்விதம் ஒரு சிறு கிராமம் என்று கூடச் சொல்ல முடியாத நிலையில் இருந்த சிங்கப்பூர் எதிர்காலத்தில் அதாவது நூறு வருஷங்களுக்குப் பிறகு கிழக்குத் திசையிலே பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் கோட்டையாக விளங்கப்

போகிறது என்ற தீர்க்க தரிசனத்துடன் காரியங்களைச் செய்த ராபின்ஸைப் பிரிட்டிஷார் போற்றுவது நியாயம்தான்!

மலாய் நாட்டில் பிரிட்டிஷாரின் ஆதிக்கம் ஏற்பட்ட பின் அந்த நாட்டைப் பற்றிய நூல்கள் ஏராளமாக வெளியாகியிருக்கின்றன. ஆனால், அதற்கு முன், அதாவது பதினேழாவது பதினெட்டாவது நூற்றாண்டுகளுக்கு முன் மலேயா எப்படி யிருந்தது? அது யாருடைய ஆதிக்கத்தின் கீழ் இருந்தது? இவ்விஷயங்களைத் தெளிவுபடுத்தக்கூடிய நூல்கள் அதிக மில்லை. இந்தக் கட்டுரைத் தொடரில் ஏற்கெனவே குறிப்பிடப் பட்டிருப்பது போல், இவ்விஷயங்களை யொட்டிச் சீன சரித்திர நூல்களிலே அதிக விவரங்கள் காணப்படுகின்றன.

*

கிறிஸ்துவ சகாப்தத்தின் ஆரம்பத்தில் ஹிந்துக்களின் மதமும் சாம்ராஜ்யமும் இந்தியாவுக்கு மேற்கே வெகு தொலைவில் இருக்கும் ஆப்பிரிக்காவை அடுத்துள்ள மடகாஸ்கர் தீவிலிருந்து இலங்கை, மலேயா, இந்தோனேஷ்யா, பிலிப்பைன் பார்மோஸா வரையில் பரந்து கிடந்தது என்று வின்ஸ்டெட் என்ற ஆங்கில நூலாசிரியர் தகுந்த ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டியிருக்கிறார். மலேயாவிலுள்ள கி. பி. 686-ம் வருஷத்திய கல்வெட்டுகள் ஸ்ரீ விஜய சாம்ராஜ்யத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கின்றன. அந்தக் கல்வெட்டுகள் மலேயா சமஸ்தானம் அல்லது மாகாணங்களில் ஒன்றான கிட்டா குகையிலிருந்து கண்டு பிடிக்கப் பட்டன என்றும் அவர் கூறுகிறார்.

கி. பி. ஒன்பதாவது நூற்றாண்டில் ஸ்ரீ விஜய மகாராஜாவின் சாம்ராஜ்யத்தில் கிட்டாவும் அடங்கியிருந்தது என்றும், அந்த மாகாணத்தில் இன்று பௌத்தர்கள் அதிகமாக இருப்பதே அதற்குச் சான்று என்றும் சில அராபிய சரித்திராசிரியர்கள் எழுதி வைத்திருக்கிறார்கள். மலேயா கல்வெட்டுகளில் காணப்படும் கடகம் என்ற தமிழ் வார்த்தை சந்தேகமின்றிக் கிட்டா மாகாணத்தையே குறிப்பிடுகிறது என்றும் கூறப்படுகிறது.

இந்தோ சீனா பிற்காலத்தில் ஏற்பட்டதாகும். ஆதியில் அந்தப் பிரதேசங்கள் சிறிது காலம் சயாம் ஆட்சியிலேயே இருந்து வந்தது என்பதற்குச் சரித்திரங்களிலே ஆதாரம் இருக்கிறது.

சிங்கப்பூர் ஆற்றின் முகத்துவாரத்திலிருந்த ஞாபகச் சின்னம் 1300-ம் வருஷம் ஹிந்து மஹாராஜாக்களில் ஒருவர் அடைந்த வெற்றிச்சின்னம் ஆகும். மலேயாவில் பிரிட்டிஷாரின் ஆட்சி ஏற்பட்ட பின் அந்த ஞாபகச் சின்னத்தைத் தகர்த்து விட்டார்கள். எனினும் அதிலிருந்து சிதறிய கற்களில் சில சிங்கப்பூரிலுள்ள ராபின்ஸ் மியூஸியத்தில் இன்றும் வைக்கப்பட்டிருக்கின்றன.

எனவே, அந்த உண்மை சரித்திரத்தினால் மாத்திரமல்ல, யாரும் மறுக்க முடியாத கல்வெட்டுச் சாஸனத்தினாலும் உறுதி செய்யப்பட்டிருக்கிறது.



# பொல்லாத மனம்

கு. நாராயணஸ்வாமி

இருளோடு செல்ல வேண்டிய 'போட் மெயில்' கும்பகோணத்தை அடையும்போது பொழுது நன்றாக விடிந்து விட்டது. ஆறு மணிக்கு முகூர்த்தம். நான் போய்ச் சேருவதற்குள் தாலி கட்டியாகிவிடும் என்று எண்ணமிட்டுக் கொண்டே குதிரை வண்டியில் விரைந்து சென்றேன்.

வண்டி போய்ச் சேரும்போது தாலிகட்டவில்லை. மற்ற வைதிக கர்மாக்கள் நடந்து கொண்டிருந்தன. வண்டியை விட்டுக் கீழே இறங்கியதும் தெரிந்தவர்களெல்லாரும் 'வா, வா' என்று உபசாரம் சொன்னார்கள். சங்கரனும் முகத்தில் எவ்வித பாவமுமில்லாமல் 'வா' என்று தலையை ஆட்டினான். நான் விரும்பியது அவ்வளவுதான்.

“குளித்து இட்டிலி காப்பி சாப்பிட்டு விட்டு வந்துவிடு. உனக்காகத்தானே என்னமோ நாழியாகி விட்டது” என்றார் கமல சேகரய்யர். அவர்தான் சங்கரனின் மாமா; மாஜி மாமனார். பழைய நினைவையெல்லாம் மூட்டை கட்டித் தூர வைத்துவிட்டுக் கோடி வேஷ்டியுடன் அவர் நிற்பதைக் கண்டதும் எனக்கு என்னமோ செய்தது.

இருவரும் உள்ளே போனோம். நான் குளித்து விட்டு வரும் வரையில் அவர் காத்துக் கொண்டிருந்தார். இட்டிலி சாப்பிட மணையில் உட்கார்ந்தபோது அவரும் உட்கார்ந்து கொண்டார்.

“நீதான் உன் சிநேகிதனுக்குப் புத்தி சொல்லணும். அவன் பிடிவாதம் பிடித்ததால்தான் இத்தனை நேரம். 'பட்டு வேண்டாம், மாலை வேண்டாம்' என்று அவன் படுத்தி வைத்த பாடு இருக்கிறதே, கொஞ்சநஞ்சமல்ல, அப்பப்பா!”

இதெல்லாம் நான் எதிர்பார்த்ததுதான். சங்கரன் மறு கல்யாணத்திற்கு ஒப்புக் கொண்டதே பெரிய தயவல்லவா?

“மாலை மாற்றணுமாம். மாமாவை வரச் சொல்லுங்கோ!” என்று வாசலிலிருந்து யாரோ கூப்பாடு போட்டார்கள். “சீக்கிரம் வா.” என்று சொல்லி விட்டுக் கமல சேகரய்யர் எழுந்து போனார். நான் இட்டிலியை மறந்து விட்டு எதையெதையோ ஞாபகப்படுத்திக் கொண்டேன்.

சங்கரனும் நானும் இணைபிரியா சிநேகிதர்கள். பள்ளிக்கூடம் காலேஜ் எல்லாவற்றிலும் ஜோடி கட்டிய காளைகள் போல் ஒன்றாகப் போய்க் கொண்டிருந்தோம். காலேஜிலிருந்து விடுபட்டதும் என்னுலகம் தனி என்று ஆகி விட்டது. நான் பிரும்மச்சாரியாக ஊர் ஊராகச் சுற்றிக் கொண்டிருந்தேன். அவன் சர்க்கார் வேலையில் அமர்ந்து கலியாணமும் செய்து கொண்டான். கமல சேகரய்யரின் பெண்தான் முதலில் வாழ்க்கைப்பட்டாள். ஆறு வருஷங்கள் அவன் வாழ்க்கையிலேயே 'பொற்கால'மாக இருந்தது. 'தாயைக் குடல் விளக்கம் செய்ய வந்த'வள் போல் பங்கஜம் பிறந்தாள். ஆனால் அவள் அதிர்ஷ்டமில்லாதவள். நான்காவது வயதிலேயே தாயை இழந்துவிட்டு நின்றாள். தெய்வ கிருபையால் குழந்தை அந்தத் தாக்குதலைச் சகித்துக் கொண்டு விட்டாள். ஆனால் எதிர் பாராத விதமாக சங்கரன் மனமிடிந்து போனான். குழந்தையைத் தேற்றி மறக்கச் செய்தது போல் அவனைத் தேற்ற முடியவில்லை. வீட்டோடு வீடாக அடைந்து தனிமையில் கிடந்து உருகினான். நான் போனாலே வாய் திறக்க மாட்டான், என்றால் மற்றவர்கள் போனால் கேட்க வேண்டுமா? வீடேறி வந்தால் 'வா' என்று கூப்பிடாதவனிடம் எவ்வளவு நாள்தான் அனுதாபம் இருக்கும்? ஒவ்வொரு உறவினராகத் தூர ஒதுங்கி விட்டார்கள். நான் விடவில்லை. தன்னைத் தனியாக நிற்கும் குழந்தைக்காகவாவது போய் வரவேண்டும் என்று அடிக்கடி போனேன். மொட்டை மாடியில் அவன் மல்லார்ந்து படுத்துக்கொண்டு பெருமூச்சு விட்டவாறு இருப்பான். நானும் குழந்தையும் அவன் பக்கத்தில் உட்கார்ந்து ஏதாவது விளையாடுவோம். எனக்குக் 'கண்ணாடி மாமா' என்று பெயர் சூட்டியிருந்தாள் பங்கஜம்.

ஒரு நாள் எனக்கு ஒரு புதிய சிந்தனை எழுந்தது. 'சங்கரன் இன்னொரு கலியாணம் செய்து கொண்டால் என்ன? குழந்தைக்காகவாவது ஒரு பெண்ணைப் பார்த்து அவன் கழுத்தில் கட்டிவிட வேண்டியது தான்' என்று முடிவு செய்தேன்.

தெய்வச்செயலாக அந்தச் சமயம் குழந்தையின் பாட்டியும், தாத்தா கமலசேகரய்யரும் வந்திருந்தார்கள். பாட்டியும் வந்திருந்ததற்குக் காரணம் இருந்தது. 'குழந்தையைத் தம்மிடம் வைத்துக்கொண்டு சந்தோஷமாக வளரும்படி பார்த்துக் கொள்ள வேண்டும்' என்ற ஆசையோடு வந்திருந்தாள். சங்கரன் "ஒரு நிமிஷமாவது என் கண்மணியை விட்டுப் பிரிய முடியாது" என்று அழுத்தந் திருத்தமாகச் சொல்லிவிட்டான். ஆதலால் இருவரும் அன்றே ஊருக்குப் புறப்பட விருந்தார்கள்.

கமலசேகரய்யரிடமும் அவர் பத்தினியிடமும் சங்கரனின் மறுமண விஷயத்தைச் சொல்லி அவர்கள் பிரயாணத்தை நிறுத்தினேன். பெண்ணைக் கொடுத்தவராக இருந்தாலும் தாய் மாமன் அல்லவா? அவருக்கும் அந்த யோசனை தோன்றியிருந்தது. உடனே எங்கள் பெரு முயற்சி ஆரம்பித்தது.

இதைக் கேட்ட சங்கரன் கமலசேகரய்யரிடம் "உங்கள் பெண்ணை அதற்குள்ளேயே மறந்துபோய் விட்டீர்களா? வெட்கம்! வெட்கம்!" என்று கனைத்தான்.

நான் குறுக்கிட்டுப் பேசினேன். உடனே, அவன் என்னைப் பார்த்து, "என், குழந்தை கண்ணைக் கசக்காமல் விளையாடுகிறது உனக்கு ஆகவில்லையா?" என்று கேட்டான்.

இவ்விதம் ஒரு வாரம் பிடிவாதம் பிடித்தான். குழந்தைக்குத் தாயார் ஸ்தானத்தில் ஒருத்தி வேண்டுமென்று அவன் மனதில் படும்படி செய்ய அவ்வளவு நாளாகியது. அவன் எடுத்துக் கொண்டிருந்த ஆறு மாத ரஜாவும் முடியும் சமயமாகிவிட்டதால் அதையும் எடுத்துச் சொன்னேன்.

"பெண்ணைத் தாத்தா வீட்டுக்கும் அனுப்பமாட்டே னென்கிறாய். அவிற்று, நீயும் ஆபீஸ், வெளியூர் பிரயாணம் என்றெல்லாம் போகவேண்டும். வீட்டில் சமையற்கார அம்மாளுடன் குழந்தை தனியாக இருப்பாளா? வளருகிற வயசில் அவளைக் கவனிக்கப் பொறுப்புள்ள தாயார் வேண்டாமா?" என்றேன்.

கடைசியில் ஒரு வழியாக ஒப்புக் கொண்டான். கமலசேகரய்யரே ஒரு பெண்ணைப் பார்த்து நிச்சயம் செய்தார். எனக்கு விஷயம் தெரிந்தவுடன் சங்கரன் வீட்டுக்குப் போனேன்.

"கண்ணாடி மாமா, நீங்களே சொல்லுங்கோ. கலியாணம்னு யாராவது அழுவாளா?" என்று எனக்காகக் கதவைத் திறக்க வந்த பங்கஜம் கேட்டாள்.

அவன் சொன்னது உண்மைதான். சங்கரன் கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில் நான் போகவே என்னிடம் வந்து பதுங்கிக் கொண்டாள் பங்கஜம்.

சங்கரன் கையை நீட்டி அவளை அழைத்தான், "இனி மேல் அழல்லே, வாம்மா, பங்கஜம்!" என்று.

"உஹூம்!" என்றது குழந்தை.

"அப்பா வேண்டாமா உனக்கு? ஆமாம்; உனக்குத்தான் அம்மா வந்து விடறாளே! இனிமேல் அப்பா எதற்கு?" என்று தோரணையில் பேசினான் சங்கரன். அர்த்தம் புரியாமல் விழித்த குழந்தையை அழைத்துக் கொண்டு நான் அப்பால் போய்விட்டேன்.

★

இப்படியிருந்த சங்கரன் கலியாணத்தின் போது எல்லோரையும் ஆட்டி வைப்பான் என்று நான் நினைத்தது சரியாகப் போய் விட்டது.



"உங்களைக் கூப்பிடுருளே! பட்டணத்தி லிருந்து வந்தது நீங்கதானே?" என்று ஒருவர் இட்டிலி சாப்பிட்டுக் கொண்டிருந்த என்னைக் கூப்பிட்டார்.

"இதோ!" என்று கையை அலம்பி விட்டுச் சட்டையை மாட்டிக் கொண்டு கல்யாணப் பந்தலுக்கு ஓடினேன்.

கலியாண வீட்டு வாசலில் 'ஊஞ்சல்' நடந்து கொண்டிருந்தது. நல்ல வேளையாக சங்கரன் முகத்ததைச் சாந்தமாக வைத்துக் கொண்டிருந்தான்.

எல்லோருக்கும் முன்னால் போய் நான் நின்றபோது "கண்ணாடி மாமா!" என்று கணீரென்று பங்கஜத்தின் குரல் என்னை அழைத்தது. அவள் மணப் பெண்ணின் பக்கத்தில் நெருக்கியடித்துக் கொண்டு நின்று கொண்டிருந்தாள்.

"இதோ பாரு! அம்மா!" என்றாள்.

"பிடித்துக் கொள், விடாதே, அம் மாவை!" என்று சிரித்துக் கொண்டு சொன்னேன். கலியாணப்பெண் தலையைக் கவிழ்த்துக் கொண்டு, வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டாள். அவளுடைய கை பங்கஜத்தை அணைத்துக் கொண்டது. அந்தக் காட்சியைக் கண்டதும் எனக்கு மயிர்க்கூச் செறிந்தது. கண்களில் என்னையறியாமல் ஆனந்த பாஷ்பம் நிரம்பியது.

"குழந்தை கேற்றையிலிருந்தே அங்கேதா னிருக்கிறாள். நமக்கு வேண்டியது அவ்வளவுதானே?" என்று கமல சேகரய்யர் என்னிடம் ரகசியமாகக் கூறினார்.

கலியாணம் நன்றாகவே நடந்தது.

பதினைந்து நாட்களுக்குப்பிறகு சென்னையில் என் வீட்டைத் தேடிக்கொண்டு ஒரு கடிதம் வந்தது. சங்கரன்தான் மயிலாப்பூரிலிருந்து புரசைவாக்கத்தில் இருக்கும் எனக்கு எழுதி யிருந்தான்.

'பழைய குடித்தனம் புதுக் குடித்தனமாகிவிட்டது. நாளை ராத்திரி உனக்கு இங்கே விருந்து. பங்கஜமும் உன்னை எதிர் பார்க்கிறாள்' என்று கடிதத்தில் எழுதி யிருந்தது.




எனக்குப் பெருமை பிடிபடவில்லை. 'திரும்பவும் மனிதனாக ஆவானா?' என்று எல்லோரும் நினைத்தவனைத் தூக்கி நிறுத்தி அவன் வீட்டில் லட்சுமியைக் கொண்டுவந்து வைத்தவன் நானல்லவா? எப்படியோ பழைய சங்கரனாக ஆகட்டும்; சந்தோஷமும் நிம்மதியும் அவன் வாழ்க்கையில் மறுபடியும் பொங்கி நிலைக்கட்டும் என்று கடவுளை வேண்டிக் கொண்டேன்.

விருந்தில் எனக்குப் பலமான உபசாரம். விருந்துக்கு மேல் எனக்கு இன்பமளித்தது சிநேகிதனிடம் இருந்த மாறுதல்தான். ஆறு மாதங்களுக்கு அப்புறம் அவன் குதூகலமாகப் பேசியது அன்றுதான்!

நான் வீட்டிற்குக் கிளம்பியபோது நிகழ்ந்த ஒரு சம்பவம் என் மனதில் பதிந்து விட்டது.

நானும் அவனும் வாசலுக்கு வந்து படி யிறங்கினோம். பங்கஜமும் எங்களுடன் வந்தாள்.

"பங்கஜா, பால் சாப்பிட வாம்மா!" என்று அழைப்பு வந்தது.

"இதோ வந்துட்டேன், அம்மா!" என்று குழந்தை உள்ளே ஓடினாள்.

சங்கரன் ஒரு கணம் தயங்கினான். பிறகு "இரு. வரேன்" என்று சொல்லிவிட்டு வேகமாகச் சென்றான்.

உள்ளே அவன் குரல் கேட்டது.

"அந்த டம்ளரைக் கொண்டா இங்கே!"

"உங்களுக்கு வேறே பால் இருக்கு. குழந்தை சாப்பிடட்டும்" என்று பதிலளித்தது பெண் குரல்.

"கொண்டான்னு கொண்டா!" என்று இரைச்சல் போட்டான். உடனேயே. "சரி, குழந்தைக்குக் கொடுத்து விடு" என்று சொல்லி விட்டு வெளியே வந்தான்.

தோட்டத்தில் இறங்கியவுடன், "எவ்வளவு நல்லவளாக இருந்தாலும் நாமும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமல்லவா?" என்று கூறினான். விஷயம் புரிந்தது! பாலில் தண்ணீர் விட்டுக் கொடுக்காமல் இருக்கிறாளா என்று சோதனை செய்யத்தான் ஓடியிருக்கிறான்! நான் பதில் சொல்லவில்லை. அவன் செய்கையில் அருவருப்பு உண்டானதால் மௌனமாக நடந்தேன்.

அடுத்த தடவை நான் அந்த வீட்டில் காலடி வைத்தது சரியாகப் பதினெட்டு மாதங்களுக்குப் பிறகுதான்! திடீரென்று வட இந்தியாவிற்குப் போய்த் தங்க வேண்டியிருந்ததால் கிளம்பிச் சென்று விட்டேன். அவ்வளவு நீண்ட காலத்திற்குப் பிறகு ஒரு மாத லீவில் சென்னைக்கு வந்தேன். மனம் கேட்கிறதா? பங்கஜத்தைப் பார்ப்பதற்காக ஓடினேன்.

அந்த வீடு அடையாளமே தெரியவில்லை. அப்படி மாறியிருந்தது. அழகான தோட்டம், ஸிமெண்ட் தளவரிசை, உள்ளேயிருந்து ரேடியோ கானம்! "உண்மையிலேயே வீட்டிற்கு ஸ்ரீ தேவி வந்து விட்டாள்" என்ற மகிழ்ச்சியுடன் படியேறிப் போனேன்.

முதல் அறையில் ஒருவரும் இல்லை. சோபாக்களும், பீங்கான் பூ ஜாடியும், ரத்தின கம்பளமும் என்னை வரவேற்றன. குழந்தையைப் பார்க்க வேண்டுமென்ற துடிப்பு அதிகமாக இருந்ததால் முன் அறையைத் தாண்டிக் கூடத்தில் காலை வைத்தேன்.

"யார் அது?" என்று கேட்டுக் கொண்டே ஊஞ்சலில் ஆடிக் கொண்டிருந்த சங்கரன் எழுந்து வந்தான். அவனருகில் உட்கார்ந்திருந்த மனைவி வேகமாக உள்ளே ஓடிப் போய் மறைந்து கொண்டாள். எனக்குக் குப்பென்று வியர்த்தது. மடமட வென்று முன்னறைக்கு வந்து விட்டேன்.

"நீயா?" என்று கூறிக் கொண்டே சங்கரன் என் பின்னாலேயே வந்தான்.

"உட்கார்ந்து கொள், காபி கொண்டு வருகிறேன்" என்று சொல்லி விட்டு மறுபடியும் உள்ளே போனான். எவ்வளவோ பாத்தியதையுடன் வந்த இடத்தில் திடீரென்று எனக்கு இருப்புக் கொள்ளாமல் போய் விட்டது.

சங்கரன் காப்பியுடன் வந்தான். ஆள் நன்றாகப் பெருத்திருந்தான்.

"எப்போது வந்தாய்? என்ன சமாசாரம்? நீ போட்ட கடுதாசி யெல்லாம் கிடைத்தது. பதில்போட சாவகாச மில்லை யப்பா, காப்பியைக் குடி" என்றான் சங்கரன்.

ஒரே மூச்சில் மரியாதைக்குப் பேச வேண்டியதை யெல்லாம் பேசி,- அனுப்பி விடத் தயாராக இருந்தான் போலத் தோன்றியது.

"பங்கஜம் பள்ளிக்கூடத்திற்குப் போயிருக்கிறாளா?" என்று கேட்டேன்.

அவன் பதில் சொல்லத் தயங்கினான். உத்தரத்தைப் பார்த்தான். பூ ஜாடியிலிருந்த பூவைச் சரிப்படுத்தினான். கீழே குனிந்து ரத்தின கம்பளத்திலிருந்த மடிப்பைப் பிரித்து விட்டான். கடைசியில் சட்டென்று தலை நிமிர்ந்து, "கும்பகோணத்தில் பாட்டி-தாத்தாவிடம் இருக்கிறாள். அவர்கள் அவளை வைத்துக் கொள்ள ஆசைப்பட்டார்கள்" என்றான். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஒரே பெண்ணை, கண்ணின் மணி போன்றவளை, யாருக்காகக் கலியாணம் செய்து கொண்டானோ அவளை......

ஆனால் அவன் ஏதோ தீர்மானத்திற்கு வந்தவன்போல் சொல்லிக்கொண்டு போனான்:

"அவள் பழைய பங்கஜமாயில்லை, தெரியுமா? எங்கேயிருந்துதான் அத்தனை பொறாமையும் பிடிவாதமும் வந்ததோ தெரியவில்லை. இந்த மாதிரி கெட்ட குணமிருந்தால், யாராயிருந்தாலும் சரி, நான் பொறுக்க மாட்டேன். இப்போதே இப்படியிருக்கிறவள், நாளைக்கு ஒரு தம்பியோ தங்கையோ சீதா வயிற்றில் பிறந்தால் எப்படியிருப்பாளோ? அதற்காகத்தான் பிரித்து வைத்திருக்கலாம் என்று..." அப்புறம் என்னென்ன சொன்னானோ, எப்படி யெல்லாம் முகத்தை வைத்துக் கொண்டானோ, எனக்கு நினைவில்லை.

ஏன், நான் எப்போது அந்த வீட்டை விட்டுக் கிளம்பினேன் என்றுகூடச் சரியாக ஞாபகமில்லை. என் மனமெல்லாம் ஒரே சிந்தனையில் ஈடுபட்டிருந்தது. மனிதனை ஆட்டி வைக்கும் 'மனம்' இருக்கிறதே அது மிகவும் பொல்லாதது. கைகாட்டி மர விளக்குபோல் அதில் பச்சை ஒரே விநாடியில் சிவப்பாக மாறி விடுகிறது!

ஆமாம்! ஒன்றரை வருஷத்திற்கு அப்புறம் சந்தித்த எனக்குச் சங்கரனிடம் உண்டாயிருந்த மாறுதல், கண்மூடிக் கண் திறப்பதற்குள் நிகழ்ந்ததாகவே தோன்றியது.




## அரித்து, எரிந்து கொப்பளிக்கும் எக்ஸிமா 10 நிமிஷத்தில் குணமடைகிறது

நிக்ஸோடேர்ம் கண்டு பிடிக்கப் பட்டதிலிருந்து இனி யாரும்—எக்ஸிமா, பரு, ரத்தக் கட்டிகள் ஆகிய சரும வியாதிகளால் அவதியுறவும் உங்களுக்கும் பிறருக்கும் வெறுப்பு ஏற்படவும் வேண்டாம். ரஸாயன முறையில் தயாரித்த நிக்ஸோடேர்மினால் சருமத்தை சுத்தமாக்குங்கள். அசயமாக வைத்துக் கொண்டு, பிறர் உங்களை வியாதியஸ்தரெனக் கருத இடம் கொடுக்காதீர்கள்.

### ஒரு புதிய சாதனம்

நிக்ஸோடேர்ம் ஒரு புதிய களிம்பு. ஆனால் நீங்கள் கண்டு உபயோகித்த இதரக் களிம்பைப் போன்றதல்ல. பிசுக்கற்றது. மேலே தடவிக் கொள்ளும்போது ஒரு பவுடரைப் போல உணருவீர்கள். சருமத் துவாரங்களினூடே சென்று வியாதிக்கு மூலமான இடத்தைத் தாக்குகிறது. நிக்ஸோடேர்ம் மூன்று வழிகளில் உபாதையைத் தாக்குகிறது: (1) நோய்க்குக் காரணமாகும் கிருமிகளைத் தாக்கிக் கொல்லுகிறது. (2) அரிந்து, எரிந்து வெந்து போவதை 7 முதல் 10 நிமிஷங்களில் தடுத்து சருமத்தை மென்மையாக்குகிறது. (3) இயற்கையாகவே ஆற்றி, சுத்தமாக, மிருதுவாகப் பட்டுப்போல வழவழப்பாகவும் ஆக்குகிறது.

### விரைவில் பலனளிக்கிறது

சரும நோய்களை நிவர்த்திக்கவே விஞ்ஞான முறையில் தயாரான நிக்ஸோடேர்ம் வேறெதையும்விட சீக்கிரமாக வேலை செய்கிறது. நமைச்சல், எரிச்சல், ஆகியவற்றைச் சில நிமிஷங்களில் நிறுத்தி விரைவில் சருமத்தை சுத்தமாக ஆற்ற, மிருதுவாகவும் வழவழப்பாகவும் செய்கிறது. ஓரிரண்டு தினங்களில் கண்ணாடியில் பார்த்துக்கொள்ளுங்கள். தேடிய சஞ்சீவி—நாடிய வைத்தியம் கிடைத்ததை உணருவீர்கள். நிக்ஸோடேர்ம் ஆயிரக்கணக்கானவர்களுடைய சருமத்தைச் சுத்தமாக்கி புஷ்டியாக்கியது. அவர்களில் ஒருவரான மிஸ்டர் R. K. கூறுகிறார்: ''பன்னிரண்டு வருஷங்களாக நமைச்சலும் எரிச்சலும் தரும் எக்ஸிமாவினால் கஷ்டப்பட்டேன். பல மருந்துகளுக்குப் பிறகு நிக்ஸோடேர்ம் உபயோகித்தேன். 10 நிமிஷங்களில் நமைச்சல் நின்றது மறுநாளே சருமம் சுத்தமாயிற்று. என் தோற்றத்தில் ஏற்பட்ட மாறுதலைக் கண்ட என் நண்பர்கள் ஆச்சரியமடைந்தனர்.''







### திருப்திக்கு உத்தரவாதம்

சருமம் திருப்தியாக சுத்தமாகாதவரை நிக்ஸோடேர்ம் மதிப்பை இழக்கிறது. இன்றே ஒரு நிக்ஸோடேர்ம் வாங்குங்கள். தோற்றத்தில் ஏற்படும் அபிவிருத்தியைக் கண்டு ஆச்சரியப் படுவீர்கள். மேலும் ஒரு வாரத்திற்கு உபயோகித்தால் சருமம் வழவழப்பாயும் மிருதுவாயும் சுத்தமாயும் வசீகரமாகவும் ஆவது நிச்சயம். இல்லையேல் அதன் காலிப் பெட்டியைத் திருப்பிக் கொடுத்து, நீங்கள் கொடுத்த விலையை வாபஸ் பெறுங்கள். இன்றே ஒரு நிக்ஸோடேர்ம் வாங்குங்கள். அதன் கனிந்த உத்தரவாதமே உங்களுக்கு உறுதி.

REGD. NO. M. 4392